# சுடரொளி

## யாழ்.செங்குந்த இந்துக்கல்லூரி

உள்ளுவதெல்லாம் உயர்வு உள்ளல்
செங்குந்த இந்துக் கல்லூரி
யாழ்ப்பாணம்



## பவளவிழா மலர்
## 1934 - 2009

# சுடரொளி

## பவளவிழா மலர்

# The Sudharoli 2009

யாழ்ப்பாணம் செங்குந்த இந்துக் கல்லூரி

| | | |
|---|---|---|
| நூல் | : | சுடரொளி |
| வெளியீடு | : | மலர்க்குழு |
| காப்பாளர் | : | திரு.ஆர். பாலகுமார் (அதிபர்) |
| ஆலோசகர்கள் | : | திருமதி ரூ.ராஜரட்ணம்<br>திரு.ஆர்.பசுபதீஸ்வரன் |
| இதழாசிரியர்கள் | : | திருமதி க.முத்துக்கிருஸ்ணன்<br>திரு.தி.இரவீந்திரநாதன் |
| இணையாசிரியர்கள் | : | திரு.எஸ். சசீலன்<br>திருமதி பூ.சத்தியன்<br>திருமதி அ.நிஷாகர் |
| வெளிக்கள நிர்வாகம் | : | திரு.ப.பாலமுகுந்தன் |
| முகவரி | : | யாழ்ப்பாணம் செங்குந்த இந்துக்கல்லூரி |
| பக்கம் | : | vi + 156 |
| பிரதிகள் | : | 300 |
| பதிப்பு | : | கரிகணன் பிறிண்டேர்ஸ்,<br>424, காங்கேசன்துறை சாலை, யாழ்ப்பாணம்.<br>தொ.பே: 021 222 2717, 4590123 |

# பாடசாலைக் கீதம்

வாழ்த்திடுவோம் எங்கள் கல்லூரித் தாயை
வளமுடன் மாணவர் நாமே.

செங்குந்த இந்துக் கல்லூரியை என்றும்
எங்களுக்குக் கல்வி அளித்து
பொங்கும் புகழுடன் வாழ்ந்திட நாமே
திங்கள் முடியோனைத் துதிப்போம்

கன்னல் சுவை தரும் தமிழ்மொழி யுடனே
அன்னிய ஆங்கிலம் சேர்த்து
இன்னிசை யோடுயர் இலக்கியம் பலவும்
என்றுமே அளித்திடும் அன்னாய்!

இத்தல மீதினில் மாணவர் எல்லாம்
உத்தமராய் வாழ வேண்டி
சத்தியம் ஒழுக்கம் எனுமுயர் பண்பை
எத்தினமும் ஊட்டும் தாயே!

வறுமையாய் வாடினும் வளமுற்று வாழினும்
மறந்திட மாட்டோம் உன் நலனை
குறைகளின்றி உனைக் குவலயம் போற்றிட
இறைவனை வேண்டுவோம் நாமே.

எந்தை போல் வந்தெமக் கறிவுரை கூறும்
இராசரெத்தினம் என்றும் வாழ்க.
சிந்தையில் இந்துக்கள் கல்வியை நிறைத்த
"இந்துபோட்" ஸ்தாபனம் வாழ்க!

எந்தை போல் வந்தெமக் கறிவுரை கூறும்
இராசரெத்தினம் என்றும் வாழ்க.
சிந்தையில் இந்துக்கள் கல்வியை நிறைத்த
"இந்துபோட்" ஸ்தாபனம் வாழ்க!

வாழிய வாழிய எங்கள் கல்லூரி
வாழிய வாழிய என்றும்.
வாழ்க! வாழ்க!! வாழ்க!!!
வளம் பல பெருக்கி என்றும்
வாழிய எங்கள் கல்லூரி.

*இயற்றியவர்:*
*சிற்பி எஸ். சிவசரவணபவன்*

# மலரின் இதழ்களாக.....

# Our Principal




Mr.R.Balakumar S.L.P.S. I



## நல்லை ஆதீன முதல்வரின்
# அருளாசிச் செய்தி

அன்புசார் பெருந்தகையீர்,

யாழ்ப்பாணம் செங்குந்தா இந்துக்கல்லூரியின் 75ஆம் ஆண்டு நிறைவை அடைவதையிட்டு மகிழ்ச்சி அடைகின்றோம். எல்லோருக்கும் கல்வி என்கின்ற வகையில் இங்கு பல பாடசாலைகள் கல்விப் பணியாற்றுகின்றன. இந்தவரிசையில் செங்குந்த இந்துக்கல்லூரி கல்விப் பணியாற்றித் தலைநிமிர்ந்து நிற்பது அனைவருக்கும் மகிழ்ச்சியைத் தருகின்றது. மனித வாழ்வை மேல்நிலை அடையச் செய்வது கல்வியே ஆகும். இக்கல்வி முறையாக பயில வேண்டிய தர்மமாகும். இந்நிலையில் வள்ளுவரும்.

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத்தக.

எனப் போற்றுகின்றார். இக்கல்விப் பாரம்பரியத்தை மேலெடுத்துச் செல்வதற்கு நிறுவுனர் அதிபர், ஆசிரியர் அனைவரையும் வாழ்த்துகின்றோம். செங்குந்தா இந்துக்கல்லூரி இன்றுபோல் என்றும் கல்வியிலும், ஒழுக்கத்திலும் ஏனைய செயல்களிலும் பல வளர்ச்சிகளைக் கண்டு பல்லாண்டு காலம் வாழ வாழ்த்துகின்றோம். இன்று பவள விழாக்காணும் இக்கல்லூரியை வழிநடத்தும் அதிபர் ஆசிரியர்கள் ஏனைய நலன் விரும்பிகளையும் இறைவன் ஆசீர்வதிக்கப் பிரார்த்திக்கின்றோம்.

"என்றும் வேண்டும் இன்ப அன்பு"

இரண்டாவது குருமகா சந்நிதானம்.
ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக,
ஞானசம்பந்த பரமாசாரிய ஸ்வாமிகள்.



# வாழ்த்துச் செய்தி

யா/ செங்குந்த இந்துக்கல்லூரி 2009.10.01 இல் தனது பவள விழாவைக் கொண்டாடும் இத் தருணத்திற் கல்லூரியின் சஞ்சிகை யான "சுடரொளி" சிறப்பு மலராகச் சுடர்விட்டுப் பிரகாசிக்க இருப்பதை அறிந்து மகிழ்ச்சியடைகின்றேன்.

இக்கல்லூரி அதிபரின் அயராத உழைப்பினாலும், ஆசிரியர்களின் அர்ப்பணிப்புடனான சேவையினாலும் நல்லூர்க் கோட்டப் பாடசாலைகளிற் சிறந்த ஒரு பாடசாலையாக வளர்ந்து வருகின்றது. இப்பாடசாலையிற் கல்விகற்ற பெருந்தகைகள் பலர் உயர் பதவிகளை அலங்கரிப்பதனை நான் அறிவேன்.

இதுவரை காலமும் கல்வி, கலாசார, விளையாட்டுத் துறைகளிற் சிறந்து விளங்கிய இக்கல்லூரி இனிவரும் காலங்களில் தகவல் தொழில்நுட்பத்துறையிலும் சிறந்துவிளங்கிப் பல புத்திஜீவிகளை உருவாக்க எல்லாம்வல்ல இறைவனைப் பிரார்த்திக்கின்றேன்.

**இ. இளங்கோவன்**
செயலாளர்,
கல்வி, பண்பாட்டலுவல்கள்,
விளையாட்டுத்துறை அமைச்சு,
வட மாகாணம்.



# வாழ்த்துச் செய்தி

யா/ செங்குந்த இந்துக்கல்லூரி 01.10.2009இல் பவள விழாவிற் காலடி பதிப்பதனை அறிந்து களிப்படைகின்றேன்.

இந்நன்நாளில் கல்லூரி சஞ்சிகையான "சுடரொளி" பவளவிழாச் சிறப்பு மலராக வெளிவருவது மேலும் என்னை ஆனந்தம் அடையச் செய்கின்றது. கிராமத்துச் சிறுவர்கள் கல்விக்காக ஏங்கித் தவித்த காலகட்டத்தில் அமரர் ச.இளையதம்பிச் சாத்திரியாரால் மனமுவந்து வழங்கப்பட்ட நிலத்திற் சைவமும், தமிழும் தழைத்துப் பல்கலையும் மேலோங்கி வளரும் வகையிலே, 'சங்கமடம்' என்னும் பேரில் 01.10.1934இல் ஆரம்பிக்கப்பட்ட இக்கல்லூரி பின்னர் இந்து போர்ட் இராசரத்தினம் அவர்களால் உருவாக்கப்பட்ட சைவ வித்தியா விருத்திச் சங்கத்தினரால் பொறுப்பேற்று நடாத்தப்பட்டது. இக்கல்லூரி ஆரம்ப காலத்தில் இரு மொழிப் பாடசாலையாகத் தோன்றி, தன் அயராத உழைப்பினால் 1949இற் செங்குந்தா இந்து ஆங்கிலப் பாடசாலையாகப் பெயர்பெற்று, பின் யா/ செங்குந்த இந்துக்கல்லூரியாக உயர்வுபெற்று இன்றுவரை சிறப்புடன் திகழ்ந்து வருகின்றது. இக்கல்லூரி தனது 75 ஆண்டுவரையான காலப்பகுதியிலே தனது அயராத உழைப்பினால் வளம்படுத்திச் சமுதாயத்திற்கு அளித்த சான்றோர்கள் பலர் இன்றும் பௌதிக வளத்தாலும், கல்வி வளத்தாலும் உயர்ச்சிபெற்று வருவதைக் கண்டு அகம் குளிர்வதோடு, மென்மேலும் இக்கல்லூரி உயர்ச்சிபெற்றுப் பண்புடைய சிறாரை வளர்த்தெடுத்து, அவர்களை நல்ல கல்விமான்களாய் உலகிற்கு வழங்க வேண்டுமென எல்லாம்வல்ல இறைவனை வேண்டி வாழ்த்துகின்றேன்.

**வீ.இராசையா,**
மாகாணக் கல்விப் பணிப்பாளர்
வடக்கு மாகாணம்,



# துணைவேந்தர் வாழ்த்து

எங்கள் கல்விப் பாரம்பரியத்தின் ஊற்றுக் கண்களில் ஒன்றான செங்குந்த இந்துக்கல்லூரியின் பவளவிழா மலருக்கான வாழ்த்தினைத் தரும் இந்த பொழுது பெறுமதியானது.

சுதேச பண்பாட்டின் இருப்பையும், ஏற்றங்களையும் காக்கவென இந்துபோட் இராஜரத்தினம் அவர்களும் செங்குந்த மகாஜன சபையினரும் ஊரின் சான்றோர்களும் மேற்கொண்ட அர்ப்பணிப்பின் பேறாக வாய்த்த செங்குந்த இந்துக்கல்லூரியின் மாணவச் செல்வங்கள் பலர் இன்று தேசத்தின் மேன்மைக்குரிய ஆளுமைகளாக கல்லூரிக்குப் பெருமை சேர்க்கின்றார்கள்.

75ஆவது ஆண்டு நிறைவினைக் கொண்டாடும் செங்குந்த இந்துக்கல்லூரியின் வளங்களைப் பெருக்கி தேசத்தின் உயர் கல்வி நிறுவனங்களில் ஒன்றாக்கும் உறுதியினை கல்லூரிச் சமூகமும் தேசத்து கல்வியாளர்களும் இந்நாளில் எடுப்பதுடன் அதற்கான செயற்திட்டங்களை வகுக்க வேண்டும்.

நகரத்துப் பாடசாலைகள் மீதான கவனிப்புப் போன்று புறநகர் பாடசாலைகளை மேம்படுத்தலின் அவசியம் அனைத்து நிலைகளிலும் உணரப்படும்போதுதான் எல்லோருக்கும் கல்வி என்ற உயர் இலட்சியம் கைவசமாகும்.

இந்த வகையில் செங்குந்த பாடசாலையின் உயர்வினுக்காய் உழைக்கும் செங்குந்த இந்துக்கல்லூரியின் இன்றைய அதிபர், ஆசிரியர்கள், மாணவர்கள் உள்ளிட்ட கல்லூரிச் சமூகத்தினரை எல்லையிலா அன்புடன் வாழ்த்துகின்றேன்.

நா. சண்முகலிங்கன்


பேராசிரியர் நா.சண்முகலிங்கன்
துணைவேந்தர்
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்

VICE CHANCELLOR
Univ...
JA...



# வாழ்த்துச் செய்தி

யா/ செங்குந்த இந்துக்கல்லூரி ஐப்பசி முதல் வாரத்தில் தனது பவள விழாவினைக் கொண்டாட இருப்பதை அறிந்து மகிழச்சியடைகின்றேன். மேலும் இவ்விழாவிற்கு மகுடம் சூட்டுவதுபோல் கல்லூரிச் சஞ்சிகையான "சுடரொளி" பவள விழாச் சிறப்பு மலராக வெளிவந்து, பல்கலைக்கழக விரிவுரையாளர்களின் ஆக்கங்களையும், மாணவர்களின் ஆக்கங்களையும் சுமந்து புதுப்பொலிவுடன் சுடர்விட்டுப் பிரகாசிக்கின்றது. இது மாணவ உலகத்திற்குப் பயனுள்ள முயற்சியாக இருக்குமென நம்புகின்றேன்.

மேலும், இக்கல்லூரியின் சிறப்பமிசமாக அதிபர் அவர்களின் அயராத உழைப்பினாலும், ஆசிரியர்களின் அர்ப்பணிப்புடனான சேவையினாலும் எனது வலயப் பாடசாலைகளிற் சிறந்த ஒரு கல்லூரியாக வளர்ந்து வருகின்றமை குறிப்பிடத்தக்கது. எத்தனையோ கஷ்டங்கள், துன்பங்கள் மத்தியிலும் கல்வியை வளர்ப்பதையே கண்ணாகக் கொண்டு செயற்படுகின்ற இக்கல்லூரியின் சேவை போற்றுதற்குரியது. 1934.10.01இல் ஆரம்பித்த இக்கல்லூரி 2009.10.01இல் தனது பவளவிழா ஆண்டாக ஆரம்பிக்கும் இந்த மகிழ்ச்சிகரமான நன்னாளில் மென்மேலும் கல்வியில் வளர்ச்சியடைந்து பல கல்விமான்களைச் சமூகத்துக்குத் தந்துதவ எல்லாம்வல்ல இறைவனை வேண்டுகின்றேன்.

**திருமதி. அ.வேதநாயகம்,**
வலயக் கல்விப்பணிப்பாளர்,
யாழ்ப்பாணம்.



# வாழ்த்துச் செய்தி

சமுதாயம் ஒன்றின் நிலைபேறிற்கும், வளர்ச்சிக்கும் அடித்தளமாக அமைவது கல்வியாகும். கல்விக் கடலிலே நீந்திக் கரைசேர்வதற்கு உறுதுணையாக அமைவன பாடசாலைகள் மற்றும் கல்லூரி களாகும். அந்தவகையிலே கல்வி ஒன்றே தம் பெரும் சொத்தாகக் கொண்ட யாழ்ப்பாணத் தமிழர்கள், இன்று உலகெங்கணும் பல்வேறு துறைகளில் பிரகாசிப்பதற்கு அத்திவாரமிட்டவை யாழ். மண்ணின் கல்விச்சாலைகள்தான் என்பது எவராலும் மறுக்கமுடியாததாகும். இவ்வாறான கல்லூரிகள் குடாநாட்டு மக்களுக்கு கல்வி புகட்டியது மட்டுமல்லாமல், இலங்கையின் பலபாகங்களையும் சேர்ந்த பல்லினத்தவர்களையும் தம் மாணாக்கர்களாகக் கொண்டு விளங்கியிருந்தன.

இந்தவகையில் நல்லூர் பிரதேச செயலகப் பிரிவிற்குள் அடங்குகின்ற யாழ் . செங்குந்த இந்துக் கல்லூரியானது கல்வியங்காடு, நல்லூர் போன்ற கிராமத்தவர்களைக் கல்விமான்களாக்கிய பெருமைக்குரியது ஆகும். அதாவது 1934 ஆம் வருடம் பண்டாரி வளவு என்கின்ற பொதுக் காணியில் "சங்கமடம்" என்ற பெயருடன் அக்காலத்தில் வாழ்ந்த பெருந்தகைகளால் ஆரம்பிக்கப்பட்ட இப்பாடசாலை, பின்னர் சைவ அபிமானிகளான " இந்துபோர்ட்" சபையினரின் உதவியினால் செங்குந்தா சைவத்தமிழ்க் கவலன் பாடசாலையாகி, படிப்படியாக ஊரவர் மற்றும் சைவ சமயத்தவரின் பங்களிப்புடன் வளர்ச்சியடைந்து, இன்று செங்குந்தா இந்துக் கல்லூரியாக நிமிர்ந்து நிற்கின்றது. மேலும் கனிஷ்ட வகுப்புகள் முதல் உயர்தர வகுப்புகள் வரைகொண்டுள்ள இக்கல்லூரி மாடிக்கட்டடங்களும், நூலகமும் அமையப்பெற்று பலநூற்றுக் கணக்கான மாணவர்களுக்கு கல்விப் பணியாற்றி வருகின்றது.

எத்தனையோ பட்டதாரிகளையும், டாக்டர்களையும், கணக்காளர்களையும், மற்றும் பல்துறைசார் அறிஞர்களையும் உருவாக்கித்தந்த யாழ்.செங்குந்த இந்துக் கல்லூரியையும், அங்கு கல்வி போதித்த ஆசான்களின் மற்றும் வழிநடாத்திய அதிபர்களின் சேவையையும் நினைக்க பிரமிப்பாக இருக்கின்றது. இத்தகைய சிறப்பு வாய்ந்த இக்கல்லூரி இவ்வருடம் தனது 75 ஆவது ஆண்டு விழாவைக் கொண்டாடுவது கண்டு மகிழ்வடைகின்றேன். இக்கல்லூரி தொடர்ந்தும் கல்விப்பணி செய்து, யாழ்.மண்ணில் தரமான கல்லூரியாக விளங்க வேண்டுமென மனம்நிறைந்து வாழ்த்துகின்றேன்.

பா.செந்தில்நந்தனன்
பிரதேச செயலர்,
நல்லூர்.



# வாழ்த்துச் செய்தி

கடந்த பல வருடங்களாக கலையிலும், கல்வியிலும், சிறந்த ஆற்றல்மிக்க கல்விமான்களைப் பிரசவித்த கலைத்தாயாகிய எமது செங்குந்த இந்துக் கல்லூரி பவளவிழா ஆண்டில் வீறுநடை போட்டுக்கொண்டிருக்கின்றது.

எமது கல்லூரியின் முதல் அதிபராக அர்ப்பணிப்போடு சேவையாற்றிய திரு.கு.முத்துக்குமாரசாமிப்பிள்ளை தொடக்கம் இன்றுவரையுள்ள அதிபர்களையும், உப அதிபர்களையும், ஆசிரியர்களையும் கல்லூரியின் வளர்ச்சிக்காகப் பல வழிகளிலும் அர்ப்பணிப்போடு உழைத்த பெரியோர்களையும் நினைவுகூர வேண்டியது எனது தலையாய கடமையாகும்.

இன்று பெருவிருட்சமாகி நிற்கும் எமது கல்லூரி பெரிய கல்லூரிகளுடன் போட்டியிடுமளவிற்கு க.பொ.த.உயர்தரப் பரீட்சையில் சிறந்த பெறுபேறுகளையும், சாதனைகளையும், ஈட்டித்தந்துள்ளது. பௌதீக வளங்கள் படிப்படியாகப் பெருகி வளம் பெற்றுவரும் எமது கல்லூரி தற்போது தகவல் தொழில்நுட்பத் துறையிலும் சகல வசதிகளையும் உள்ளடக்கிய ஒரு தரமான பாடசாலையாக நிமிர்ந்து நிற்கின்றது.

இவற்றுடன் அர்ப்பணிப்புடைய ஆசிரியர்குழாம், சிறந்த மாணவர், கல்வியில் அக்கறையுடைய பெற்றோர், விசுவாசமுள்ள பழைய மாணவர், கரிசனையுடைய நலன்விரும்பிகள் யாவரினதும் ஒருமித்த ஒத்துழைப்புடன் இன்று பவளவிழாக்காணும் எமது கல்லூரி தனது நூற்றாண்டு விழாவின்போது அதியுச்சப் பயன் கொழிக்கும் கல்லூரியாக மிளிர வேண்டும் என இறைவனைப் பிரார்த்திபதோடு எனது நல்லாசிகளையும் தெரிவித்துக்கொள்கின்றேன்.

**இ.பாலகுமார்**
அதிபர்



அவுஸ்திரேலியா யாழ் – செங்குந்த இந்துக் கல்லூரி
பழையமாணவர் சங்கத்தினரின்

# வாழ்த்துச் செய்தி

அன்புடையீர்,

எமது யாழ் செங்குந்த இந்துக்கல்லூரி 1934ஆம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்டதில் இருந்து, வீர நடைபோட்டு எத்தனையோ கல்விமான்களை எமது நாட்டிற்கு வழங்கிய பொலிவுடன், தனது 75ஆம் ஆண்டு நிறைவை மிகச்சிறப்பாகப் பவளவிழாவாகக் கொண்டாடும் இவ்வினிய நாளில், அவுஸ்திரேலிய பழைய மாணவர் சங்கம் சார்பாக எமது நல் வாழ்த்துக்களையும், நல் ஆசிகளையும் தெரிவிப்பதில் நாம் மிக்க பெருமையும், மகிழ்ச்சியும் அடைகின்றோம்.

எமது பாடசாலையானது, எத்தனையோ மிகத் திறமையான அதிபர்களையும், ஆசிரியர்களையும், மாணவ மணிகளையும் தன்னகத்தே கொண்டிருந்த அனுபவத்தைக் கொண்ட ஒரு பாடசாலையாகும். அந்த வழியிலே தற்போது அதிபராகக் கடமையாற்றும் மதிப்பிற்குரிய திரு.இரத்தினம் பாலகுமார் அவர்கள் பாடசாலையிலும், மாணவர்களின் கல்வி முன்னேற்றத்திலும் அதிக அக்கறைகொண்ட ஒரு மிகத் திறமையான அதிபர் என்பதை நாம் கூறவேண்டியதில்லை. கடந்த வருடம் 2008ஆம் ஆண்டு உயர்தர வகுப்பு மாணவர்களின் அரசாங்க இறுதியாண்டுப் பெறுபேறு இதற்கு ஒரு சான்றாகும் என்பதனை நீங்கள் அனைவரும் நன்கறிவீர்கள்.

இக்கல்லூரியிற் கற்பிக்கும் ஆசிரியர்களும், மாணவர்களின் முன்னேற்றத்தில் அக்கறைகொண்டு திறமையாகக் கற்பிக்கின்றார்கள் என்பதும் யாவரும் அறிந்ததே. தொடர்ந்தும் ஆசிரியர்கள் பொறுப்புணர்ச்சியுடன் மாணவர்கட்கு கல்வி கற்பித்தும், அதிபருக்கு உறுதுணையாக நின்றும் பாடசாலையை மேன்மேலும் வளர்ச்சியடையச் செய்யவேண்டும் என்று அன்பாகக் கேட்டுக்கொள்வதுடன், வார்த்தைகளினால் வர்ணிக்க முடியாத அளவு மிகமிக கஷ்டமான இன்றைய காலகட்டச் சூழ்நிலையிலும் எமது மாணவர்கள் தமது அயராத கடும் முயற்சியால் தம் கல்விச் செல்வத்தைப் பெருக்குவதன்மூலம் தமக்கும், தமது பாடசாலைக்கும் நற்பெயரைத் தொடர்ந்து வழங்கிக்கொண்டே இருக்கவேண்டும் என்று வேண்டி, நீங்கள் வெகு விமரிசையாக 75ஆம் ஆண்டு நிறைவைக் கொண்டாடும் இத்தருணத்தில் மீண்டும் எமது உளம் கனிந்த நல் வாழ்த்துக்களையும், நல் ஆசிகளையும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கின்றோம்.

*"இன்பமே சூழ்க ! எல்லோரும் வாழ்க"*

**அன்புடன்,**
**தம்பி இராசலிங்கம்**
(முன்னாள் தலைவர்)
அவுஸ்திரேலியா பழைய மாணவர் சங்கம்.

# வாழ்த்துச் செய்தி

எங்கள் கல்விக்கு வித்திட்ட எமது கல்லூரி 75ஆவது ஆண்டுகளைப் பூர்த்திசெய்து, பவளவிழாவைக் கொண்டாடுவதையிட்டு மட்டற்ற மகிழ்ச்சியும், பெருமிதமும் அடைகின்றோம்.

எம்மை உருவாக்கிய எமது கல்லூரியின் வளர்ச்சியில் அக்கறையும், ஆர்வமும் கொண்ட பழைய மாணவர்கள் ஒன்றிணைந்து 2001ஆம் ஆண்டு எமது கல்லூரியின் பழைய மாணவர் சங்கத்தினை ஆரம்பித்தோம்.

கடந்த 8 ஆண்டுகளாக எம்மால் முடிந்த உதவிகளை பாடசாலையின் வளர்ச்சிக்குச் செய்து வருகின்றோம். 75 ஆண்டுகளைக் கடந்த எங்கள் கல்லூரியின் சில மனதை விட்டகலாத நினைவுகளை இத்தருணத்தில் நினைவுகூர விளைகின்றோம்.

மதிப்பிற்குரிய, மறைந்த திரு.ந. கணபதிப்பிள்ளை அவர்கள் தலைமை ஆசிரியராக இருந்த, ஏறத்தாழ 23 வருட காலம் எமது கல்லூரியின் பொன்னான காலம் என்பதை யாராலும் மறுக்க முடியாது. இப்பொற்காலத்தில் எங்கள் கல்லூரியில் கல்வி பயின்ற பல பழைய மாணவர்களை எங்கள் சங்கம் அங்கத்தவர்களாகக் கொண்டுள்ளது.

திரு.ந.கணபதிப்பிள்ளை அவர்களின் கம்பீரமான தோற்றமும் மடிப்புக் கலையாத வேட்டி, சால்வையும், இன்னும் எம்மனக் கண்ணிலிருந்து மறையவில்லை. அவரிடம் கிடைத்த பிரம்படியையும் பின்பு செல்லப்பா அம்மானிடம் வாங்கித் தந்த தேனீரையும் யாரும் மறந்துவிட முடியாது. அன்பினால் எதையும் சாதித்து விடமுடியும் என்பதை எமக்கெல்லாம் தனது நடைமுறையில் உணர்த்தியவர் திரு.ந.கணபதிப்பிள்ளை அவர்கள்.

"வறுமையால் வாடினும் வளமுற்று வாழினும்
மறந்திட மாட்டோம் உன் நலனை.
குறைகள் இன்றி உனைக் குவலயம் போற்றிட"

அவுஸ்திரேலியா பழைய மாணவர் சங்கம் தொடர்ந்தும் முடிந்த உதவிகளைச் செய்யும் என்பதை இச்சமயத்திற் பாடசாலைச் சமூகத்திற்குத் தெரிவிக்கின்றோம்.

எங்கள் கல்லூரி மென்மேலும் வளர்ச்சிபெற்று
சிறப்பான நிலையடைய எல்லாம் வல்ல எமது
நல்லூர்க் கந்தனைப் பிரார்த்திக்கின்றோம்.

**அவுஸ்திரேலிய செயற்குழு.**
**பழையமாணவர் சங்கம்.**

# Message from Committee Member of Old Student Association Australia

I am very pleased to have the opportunity to write a few words for the 75th anniversary of J/ Senguntha Hindu College (J/S.H.C). As an old student of J/S.H.C. It gives me great pleasure to say 'thank you' to the school that laid the foundation for my success in life.

I feel privileged to have had my foundation in a school in a school which was established to teach Hinduism as part of the curriculum. The religious education has been great in fluence on me and given me enormous strength in my life.

I attended the school in the fifties and I have had the opportunity of studying under the principal Mr.N.Kanapathipillai and dedicated teachers such as Mr.Sundaralingam, Mr.Saravanbhavan, Mr.Shanmugalingam, Ms.Maheswary and Mrs.Kidner. At that time the school had dasses only up to SSC. We did not have the facility of a playground at that time. Since then the school has achieved great heights. I wish to take this opportunity to express my sincere thanks for our late principal Mr.N.Kanapathipillai who had in stilled in me some basic principles of life.

During the last 50 years, students of the school have excelled academically and sports. They have brought fame to the school and honour to themselves. I wish the school and the students to continue on the path of improvement and very success in their efforts.

We Formed an association of old students' of J/ S.H.C. eight years ago with the aim to help the school. The members elected me as the first President of the J/S.H.C. old students. Association in Australia. During that time we negotiated and purchased the land adjoining the school for Rs.

200,000 In addition, we have supported in many other ways to improve the condition of the school. We have dedicated old students living in Sydney who are ever willing to support any improvement to the school.

I extend my best wishes for the republication of the school magazine known as "Sudaroli". It is a fitting tribute for the architect and former editor of the magazine Mr.Saravanabhavan who will be honoured on this occasion.

I wish to express my sincere congratulations and very best wishes to Mr.Saravanabavan and Mr. Shanmugalingam who will be honoured by the school on this accusation For their dedication and hard work.

What I have seen in J/S.H.C. is a community of dedicated teachers and students who have faith in themselves to work hard inspite of immeasurable obstacles that they encountered during the last 30 years.

I wish them all the best in the future.

**S.Thuraisingam**
*Committee member of the*
*J/Sengunthta Hindu College Old Student*
*Association - Australia*
*33 Brabyn Street*
*Eastwood*
*Australia.*

கனடா யாழ் - செங்குந்த இந்துக் கல்லூரி
பழையமாணவர் சங்கத் தலைவரின்

# வாழ்த்துச் செய்தி

யா/ செங்குந்த இந்துக்கல்லூரியின் மாணவர் சஞ்சிகையான "சுடரொளி" பரிசளிப்பு விழாவின்போது வெளியிடுவதற்கான முயற்சி பாராட்டுக்குரியது. வெளியீட்டு விழாவும் பரிசளிப்பு விழாவும் இனிது நடைபெற வாழ்த்துக்களையும், மனம் நிறைந்த ஆசிகளையும் எங்கள் சங்கச் சார்பில் தெரிவிப்பதிற் பெருமகிழ்ச்சி அடைகின்றேன். புலம்பெயர் நாட்டில் நாம் வாழ்ந்து கொண்டிருந்தாலும், எங்கள் வாழ்வை வளப்படுத்திய கல்லூரியை எப்பொழுதும் நினைவில் நிறுத்தியவராக நன்றியுடன் வாழ்கிறோம். புதிய அதிபராகப் பொறுப்பேற்றுச் சிறந்த முறையில் நிர்வகிக்கும் திரு.இ.பாலகுமார் ஆகிய உங்களுக்கும் சங்கச் சார்பில் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

நாட்டின் நெருக்கடியான நேரத்திலும் சென்ற வருடங்களிற் கல்லூரித் தாயின் பெருவளர்ச்சிக்கு முன்னோடியாகச் செயற்பட்டு ஒய்வுபெற்ற அதிபர் திருமதி சி.விசுவலிங்கம் அவர்களையும் நினைவுகூர்ந்து அவரின் சேவைத்திறனைப் பாராட்டி வாழ்த்துக்களையும், சங்கச் சார்பில் தெரிவித்துக்கொள்கின்றேன். அவரின் காலங்களில் முன்னெடுக்கப்பட்ட பல நடவடிக்கைகள் உங்களுக்கும் பெரிய உதவியாயிருக்குமென நம்புகிறேன்.

2007ஆம் ஆண்டு நடைபெற்ற பரிசளிப்பு விழாவில் வெளியிடப்பட்ட சுடரொளி சஞ்சிகையானது எங்களுக்குப் பல விடயங்களை அறியத் தந்துள்ளது மிகுந்த சந்தோஷம்.

மாணவர்களின் ஆக்கத்திறன்கள், சிந்தனை மேம்பாடு, எழுத்தாற்றல் என்பன வளர்ச்சி பெறுவதற்கு ஓர் அரிய வாய்ப்பாக அமைந்துள்ளமை போற்றுதற்குரியது. உங்கள் பணிக்கு ஆசிரியர்கள் மாணவர்கள் பெற்றோர் எப்பொழுதும் உறுதுணையாக இருப்பார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

மீண்டும் இவ்வருடம் உங்களால் முன்னெடுக்கப்படும் விழாவானது சிறப்புற அமைய உங்கள் எல்லோரினதும் வாழ்த்துக்களும் ஆசியும் உரித்தாகுக.

**ந.பாஸ்கரன்**
தலைவர்,
யா/ செங்குந்த இ.க.ப.மா.ஆ.ந. சங்கம், கனடா

யா/ செங்குந்த இந்துக்கல்லூரி 75 ஆண்டுகளைப்
பூர்த்திசெய்து பவள விழாவைக் கொண்டாடும்போது வழங்கப்பெற்ற

# வாழ்த்துச் செய்தி

கல்லூரி ஆரம்பகாலம்தொட்டு முதலாவது அதிபர் திரு.கு.முத்துக்குமாரசுவாமி B.A., தொடக்கம் 9ஆவது அதிபர் பிரம்மஸ்ரீ சுவாமிநாதசர்மா B.A. காலம்வரை 23.03.1985 இல் கிட்டத்தட்ட 50 வருடங்கள் மாணவியாக, ஆசிரியராக, உதவி அதிபராக, இடைக்கால அதிபராகக் கடமையாற்றியுள்ளேன். எனது வாழ்க்கைக் காலத்தில் 2/3 பங்கு இக்கல்லூரியுடன் ஊடாடி உள்ளதால் இக்கல்லூரியில் என்னை அறியாமலே ஒரு கல்லூரிப் பற்று உண்டாயிற்று.

எத்தனை எத்தனை மாணவர்கள், ஆசிரிய, ஆசிரியைகள், அதிபர்கள் முகங்களைத் தரிசித்துள்ளேன். கல்லூரி அதிபர் வரிசையில் 2ஆவது அதிபர் மூளாயைச் சேர்ந்த திரு.வ.கணபதிப்பிள்ளை B.A. BSc. Dip.in.Edu அவர்கள் கூடிய காலம் (1944 – 1968) கல்லூரி இயந்திரத்தைச் சீராகச் செலுத்திக் கல்லூரியின் பொற்காலம் கண்டவர் அவரே.

கல்லூரி வரலாற்றையும், அவ்வக் காலங்களில் நடைபெற்ற முக்கிய நிகழ்வுகளையும் எழுதித்தரும்படி அவுஸ்திரேலிய பழைய மாணவர் சங்கம் என்னைக் கேட்டபோது, அதனை எழுதிக் கொடுத்துள்ளேன். அந்த விபரம் "சங்கநாதம்" என்னும் அவுஸ்திரேலியக் கல்லூரிச் சஞ்சிகையில் ஒழுங்காக எழுதப்பட்டுள்ளது.

இக்கல்லூரியின் பழையமாணவர் சங்கங்கள் உலகளாவிய ரீதியிற் கனடா, இங்கிலாந்து, அவுஸ்திரேலியாவில் இயங்கி, கல்லூரித் தேவைகளை அவ்வப்போது நிவர்த்திசெய்து வருவதும், கல்லூரி சமூகமாக இயங்கி முன்னேறி வருவதும் மகிழ்ச்சிக்குரிய விடயமாகும்.

கல்லூரி வளர்ச்சியில் ஒவ்வொரு அதிபரும் ஏதோ ஒரு வகையிற் கல்லூரி வளர்ச்சிக்கான நல்ல விடயங்களைச் செய்துள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது. இக்கல்லூரியின் வளர்ச்சிக்குப் பக்கபலமாக எழுந்தவையே திவ்ய ஜீவன சங்கம், பாலகதிர்காமம், இளம் கலைஞர்மன்றம் என்பனவாம். இக்கல்லூரி எத்தனையோ டாக்டர்களை, பொறியியலாளர்களை, உதவி அரசாங்க அதிபர்களை, தொழில்நுட்ப உத்தியோகத்தர்களை, எழுத்தாளர்களை, பேராசிரியர்களை, பிரசங்கிகளை, அதிபர், ஆசிரியர்களை உருவாக்கி உள்ளது. இதனால் சமுதாயமே முன்னேறி உள்ளது என்றால் மிகையாகாது.

கல்லூரியின் இன்றைய அதிபர் திரு.இ.பாலகுமார், கல்லூரியின் பழைய மாணவர் என்பதும், அவர் தனது சுய எத்தனத்தால் உயர்ச்சிகள் பலபெற்று தரம் I அதிபராக உயர்ச்சிபெற்று தான் கற்ற பழைய கல்லூரிக்கு வருகை தந்திருப்பதும், 6ஆம் வகுப்பு முதல் 13ஆம் வகுப்புவரை கிட்டத்தட்ட 500 மாணவர்களையும், திறமையான ஆசிரியர் குழாத்தையும் நிர்வாகம் செய்கிறார் என்பதும் குறிப்பிடத்தக்கது. இக்கல்லூரி எப்பொழுதும் தகுதிவாய்ந்த ஆசிரியர்களை, கலைப்பட்டதாரி, விஞ்ஞானப் பட்டதாரி, விசேட பயிற்சிபெற்ற ஆசிரியர்கள், சங்கீதம், சித்திரம், விளையாட்டு, விவசாயம் முதலியன கற்பிக்க விசேட ஆசிரியர்களைக் கொண்டுள்ளதும், இக்கல்லூரிசெய்த பாக்கியம் என்றே கூறவேண்டும்.

கடந்த 30 ஆண்டுகளாகப் போர்க்காலச் சூழ்நிலையில் அநேக படித்த, படிக்காத பெற்றோர் குடும்பங்கள், குடும்பம் குடும்பமாகப் புலம்பெயர்ந்து உலகின் பல்வேறு இடங்களில் வாழ்ந்துகொண்டு இருக்கின்றனர். செங்குந்த இந்துக்கல்லூரி பழைய மாணவர்கள், ஆசிரியர்கள் எங்கும் பரந்து வாழ்ந்து கல்லூரியின் புகழைத் தங்களுக்கு அறிவூட்டிய ஆசிரியர்களை மறவாது, கனடாமுதல் அவுஸ்திரேலியாவரை பரந்து செறிந்து வாழ்ந்துகொண்டிருப்பது போற்றுதற்குரிய விடயமாகும்.

இக்கல்லூரியின் பழையமாணவன் ஸ்ரீ ரவீந்திரராசா அவர்கள் கலாநிதிப்பட்டம் பெற்று, பேராசிரியராக, சிட்னி பல்கலைக்கழகத்திற் கடமைபுரிவதும், அவருடைய மனைவி சுசீலா டாக்டராக சிட்னியில் கடமைபுரிவதும், திரு.K.ஜெகன்நாதன் கணினித்துறையில் முன்னிலையில் விளங்குவதும், மெல்பேனில் திருமதி சரஸ்வதி ஞானேந்திரன் பெண் பொறியியலாளராகச் சிட்னியிற் கடமையாற்றுவதும் இக்கல்லூரிக்குப் பெருமைதேடித் தரும் விடயமாகும்.

கல்லூரிக்கீதம் கனடாமுதல் அவுஸ்திரேலியாவரை ஒலித்துக் கல்லூரியின் புகழைப் பறைசாற்றுகின்றது. இக்கல்லூரிக்கு ஒரு ஒளிமயமான எதிர்காலம் உண்டு என்பதை என்மனம் கூறுகின்றது.

கல்லூரி மேன்மேலும் பல முன்னேற்றங்களை அடையவேண்டும், மாதம் மும்மாரி பொழிய வேண்டும் , நாடு செழிப்புற்று எதுவித குறையுமின்றி மக்கள் சிறப்புடன் வாழவேண்டும், பலகலைகளும் பெருக வேண்டும், கல்வியும் செல்வமும் பெற்று எல்லோரும் இன்புற்றிருக்க வேண்டும் என்று இதய பூர்வமாக வாழ்த்துகின்றோம். கல்லூரி பல்லாண்டு பல்லாண்டு காலம் சிறப்புடன் வாழவேண்டுமென எல்லாம்வல்ல இறைவன் அருள் கிடைக்க வாழ்த்தி நிற்கின்றேன்.

"வாழ்க செங்குந்த இந்துக்கல்லூரி"
"வாழ்க வளமுடன்"

**திருமதி கனகம்மா கிட்ணர்**
சிட்னி, அவுஸ்திரேலியா.

# வாழ்த்துச் செய்தி

## பெருமைசேர் செங்குந்த இந்துக்கல்லூரி

கல்வியே கண்ணெனத் தகும் என்பது அறிவுடையோர் வாக்கு, கல்விக்கு முக்கியத்துவம் கொடுத்து, அறிவால் உயர்ந்து உலகின் பலநாடுகளில் செழிப்புடன் வாழ்ந்து வருபவர்கள் யாழ்ப்பாணத்துத் தமிழர்களாவர். இந்த வளர்ச்சிக்குக் காரணமாக இருந்தவர்கள் பொறுப்புவாய்ந்த தொலைநோக்குக் கொண்ட நமது மூதாதையர்கள் அவர்கள் ஆரம்பித்து விட்டுச் சென்ற முக்கிய சமய, சமூகப்பணிகள் காலத்தால் அழியாது, வளர்ச்சியடைந்து வந்துள்ளதை எம்மால் காணமுடிகின்றது.

**செங்குந்த இந்துக் கல்லூரி - வரலாற்றுக் குறிப்பு**

1934 ஆம் ஆண்டு யாழ்ப்பாணத்திற்கு ஒரு வரலாற்று முக்கியத்துவம் பெற்ற ஆண்டாகும். இந்த ஆண்டில் யாழ்ப்பாணம் சட்டசபையில் ஒரு அங்கத்துவப் பிரதேசமாக வந்தது, யாழ்ப்பாணம் மத்திய கல்லூரி தனது 100ஆவது ஆண்டு விழாவைக் கொண்டாடியது, யாழ்ப்பாணம் பொது நூல்நிலையம் ஆரம்பமானது. திருநெல்வேலி கிழக்கிலுள்ள ஆயிரக்கணக்கான செங்குந்தர் குடும்பங்களின் கல்வி வளர்ச்சிக்கு வித்திட்டு சங்கமடம் உருவானதும் இந்த ஆண்டிலேதான். இதை உருவாக்கியவர்கள் கொன்றையடி வைரவர் கோவில் தர்மகர்த்தா இளையதம்பி சாஸ்திரியார், அச்சுக்கூட மாணிக்கம், விஸ்வநாதர் சிவக்கொழுந்து, பிரசித்த நொத்தரிசு டானியல் கந்தையா, சபாபதி சங்கரப்பிள்ளை ஆசிரியர் சுப்பிரமணிம் இராசையா ஆகியோராவர். சங்கமடம் உருவானதால் பல குடும்பங்கள் சமயமாற்ற அழுத்தங்களிலிருந்து தப்பி சைவசமயத்தைத் தொடர்ந்து கடைப்பிடிக்க ஏதுவாக இருந்தது.

**செங்குந்த இந்துக் கல்லூரியுடன் எனது தந்தையாரின் ஈடுபாடு**

சங்கமடத்தைத் திண்ணைப் பள்ளிக் கூடமாக்கி ஊதியம் எதுவுமின்றி சமூக சேவையாக ஆசிரியத் தொழிலைப் புரிந்த சிலரில், 22 வயது நிரம்பிய எனது தந்தையார் சுப்பிரமணியம் இராசையா முக்கிய பங்காற்றினார், விஜயதசமி நாள் டாப்பு (Register) வாங்கி செங்குந்த இந்துக் கல்லூரிக்கு மாணவர்களை முதல் முறையாகப் பதிவு செய்தார். முதல் மாணவனாக பதியப்பட்டவர் நல்லூர் அருளம்பல விதானையாரின் மகன் காத்திகேசு ஆவார் என்பதை எனது தந்தையார் கூறக் கேட்டுள்ளேன். 19ஆவது வயதிலிருந்தே ஆசிரியராகக் கடமையாற்றிய எனது தந்தை, 1937 ஆம் ஆண்டு மதுரைத் தமிழ்ப் பண்டிதர் பட்டம் பெற்று, 1941ஆம் ஆண்டு இந்துக் கழகத்தின் (Hindu Board) கட்டுப்பாட்டில் இருந்த செங்குந்த இந்துக் கல்லூரியில் ஒரு வருடம் ஆசிரியராகப் பணியாற்றினர்.

**எனது பசுமையான நினைவுகள்**

நான் எனது நான்காம் வயதில் செங்குந்த இந்துக் கல்லூரியில் அரிவரி வகுப்பில் மாணவனாகச் சேர்க்கப்பட்டேன். அப்பொழுது எனது அக்காவும், அண்ணனும் இக்கல்லூரியிலே படித்துக் கொண்டிருந்தனர். அண்ணருடன் சேர்ந்து எனது தந்தையாரிடம் வீட்டில் மாலை நேரங்களில் படித்தமையால் என்னால் எப்பொழுதும் வகுப்பில் முதல் மாணவனாக வரமுடிந்தது. முதலாம் வகுப்பிலிருந்து மூன்றாம் வகுப்புக்கு நேரடியாக நான் வகுப்பேற்றம் பெற்றேன். இதனால் நான்கு வருடங்களில் ஐந்தாம் வகுப்பு வரை படித்து, ஆறாம் வகுப்புக்கு பரியோவான் கல்லூரியில் சிறந்த பிரிவில் சேர்ந்து படிக்க இடம் கிடைத்தது.

செங்குந்த இந்துக் கல்லூரி ஆசிரியர்கள் மிகவும் கண்டிப்பாகக் கடமை உணர்வு கொண்டு செயற்பட்டார்கள். தலைமையாசிரியர் திரு ந. கணபதிப்பிள்ளை அவர்களின் கம்பீரமான நடையையும், கையில் அசைந்து கொண்டிருக்கும் பிரம்பையும் என்னால் மறக்கமுடியாது. பாடசாலைக்குப் பிந்தி வரும் மாணவர்கள் தலைமை வாத்தியாரின் பிரம்படியிலிருந்து தப்பவே முடியாது. இந்தக் கட்டுப்பாடு பாடசாலையை ஒழுங்காக நடாத்த மிகவும் உதவியது. பள்ளிக்கூடம் காலையில் இறை வணக்கத்துடன் ஆரம்பமாகி, மாலையில் இறைவணக்கத்துடனே முடிவடையும், நேரம் தவறாமை இந்தப் பள்ளிக்கூடத்தின் சிறப்பாகும். நவராத்திரி விழா சிறப்பாகப் பாடசாலையில் கொண்டாடப்பட்டது. வகுப்புகள் நெருக்கமாக இருந்ததால் பாடசாலை எப்பொழுதுமே சத்தம் கூடிய இடமாகவே இருந்தது. அங்கே பணிசெய்த ஆசிரியர்கள் இந்தச் சூழலில் கடமையாற்றியது பாராட்டத்தக்கது.

தண்ணிவீசரின்போது அயலிலுள்ள கிணறுகளை நோக்கி மாணவர்கள் ஓடுவார்கள். மத்தியான நேரத்தில் பணிசும், கரைத்த மாப்பாலும் அரசாங்க நிதி உதவியுடன் இலவசமாகக் கொடுப்பார்கள். நான் எனது வீட்டிற்கு அக்கா, அண்ணனுடன் சென்று மதிய போசனத்தைச் சாப்பிட்டு, திரும்பவும் பின்னேரப் பாடசாலைக்கு வருவேன். நான் படித்தபோதுதான் ஊஞ்சல், சுழலும் ராட்டினம் ஆகியவை மாணவர்கள் விளையாட்டிற்காகப் பள்ளிக் கூடத்தில் போடப்பட்டன. ஐந்தாம் வகுப்பு படிப்பித்த சிவானந்த வாத்தியார் மிகவும் கண்டிப்பானவர். அவரது பிரம்படி பெறாத வகுப்பு மாணவர்கள் சிலரே. எனது ஐந்தாம் வகுப்பு ஆசிரியர் வைத்திலிங்க மாஸ்ரர் மிகவும் அன்பானவர் என்னுடன் படித்த மாணவர்களில் சிலர் திறமையான மாணவர்களாக இருந்தும் பொருளாதார நிமிர்த்தம் தொடர்ந்து படிக்காமல் போனதை நினைத்து நான் மிகவும் கவலைப்பட்டேன். இளமையில் வறுமை மிகவும் கொடியது என்கிறார் ஔவைப்பாட்டி.

**வாழ்த்து**

எனது கல்வியின் அத்திவாரத்தை அமைத்துத் தந்த செங்குந்த இந்துக் கல்லூரி ஆனது 75ஆவது ஆண்டு பூர்த்தி விழாவைக் கொண்டாடுவதையிட்டு மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறேன். எனது தந்தையாரின் முக்கிய பங்கினால் உருவான இக்கல்லூரியின் வளர்ச்சியில் பண்டிதர்

இராசையாவின் குடும்பம் என்றென்றும் பங்கேற்கக் கடமைப்பட்டுள்ளது. எனது தந்தையாரின் நினைவாக வருடா வருடம் சிறந்த மாணவர்களுக்கு பரிசளிக்கப்படுவதையிட்டு மகிழ்ச்சி அடைகிறேன். செங்குந்த இந்துக் கல்லூரி தொடர்ந்து மாணவ மாணவிகளின் கல்வித் தேவைகளைப் பூர்த்தி செய்யும் புனிதமான பணியினைத் திறம்படச் செய்ய நல்லூர்க் கந்தனருள் கிடைக்க வேண்டுமென்ற பிரார்த்தனையுடன் எனது அன்பான வாழ்த்துக்களைத் தெரிவிப்பதில் மிகப் பெருமை அடைகின்றேன்.

வளர்க கல்விப் பணி! வாழ்க செங்குந்த இந்துக் கல்லூரி

**கலாநிதி இராசையா ஸ்ரீ இரவீந்திரராஜா**
சிட்னி தொழில்நுட்ப பல்கலைக்கழகம்,
அவுஸ்ரேலியா.

# SENGUNTHA HINDU COLLEGE
## OLD STUDENTS ASSOCIATION (U.K)

### யா/செங்குந்த இந்துக் கல்லூரி
பழைய மாணவர் சங்கம் (ஐ.இ)



## வாழ்த்துச் செய்தி

"சங்கமடம்" என்ற பெயரோடு சில மாணவர்களுடன் ஊர்ப் பெரியோர்களால் ஆரம்பிக்கப்பட்டதுதான் செங்குந்தவின் ஆரம்பம். ஆலம் விதைபோல் சிறிதளவில்முளைத்து அறுகுபோல் வேரூன்றி ஆலம் விழுது பரப்பி எங்கும் வியாபித்து நிற்கிறது எம் செங்குந்த இந்துக்கல்லூரி.

அவ்வூர்ப் பெரியவர்களால் தோற்றம்பெற்ற இப்பாடசாலை அமரர் திரு.கணபதிப்பிள்ளை, திரு நடராசா, திரு சிற்பி சரவணபவன் போன்றவர்களால் செதுக்கப்பட்டு மேலும் மெருகூட்டப்பட்டது.

வரப்புயர நீருயரும் என்பது போல் பாடசாலை தரம் உயர அவ்வூர் மக்களின் வாழ்க்கைத்தரம் உயரும். செங்குந்த இந்துக்கல்லூரியின் வளர்ச்சி அவ்வூர் மக்களின் உயர்ச்சிக்கு ஓர் எடுத்துக்காட்டு.

"அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்
ஆலயம் பதினாயிரம் நாட்டல்
அன்னயாவினும் புண்ணியம் கோடி
ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல்"

என்ற பாரதியாரின் வாக்கினை மெய்ப்பித்து எழுத்தறிவு, மட்டுமல்ல பல்கலைக்கழகம் சென்று பட்டமும் பெற்றிட மாணவர்களை உருவாக்கியுள்ள செங்குந்த இந்துக்கல்லூரியானது, இன்று பவளவிழாக் காணுவதையிட்டு நாமும் அங்கு கல்வி கற்றவர்கள் என்ற வகையில் பெருமையும் பேருவகையும் அடைகிறோம்.

எமது இந்தக் கல்லூரியானது பவளவிழா மட்டுமல்ல பல நூற்றாண்டு விழாக்களைக் கண்டு பல்கலைக்கழகமாக விளங்க பிரித்தானியா செங்குந்த இந்துக்கல்லூரி பழைய மாணவர் சங்கம் சார்பில் எம்மினிய வாழ்த்துக்கள்.

**செங்குந்த இந்துக்கல்லூரி பழைய மாணவர் சங்கம்,**
**பிரித்தானியா.**

# வாழ்த்துப் பாடல்

எழுபத்தைந்து ஆண்டுகள் முன்
எங்களுக்காய் ஓர் கலைக்கூடம்
கல்வியங்காட்டில் அமைந்ததுவே
கல்வி தரும் ஓர் பள்ளிக்கூடம்
எங்கள் எத்தனையோ தலை முறையை
வளர்த்தெடுத்த இந்த இடம்
எங்கள் இளமைக் கல்வி தருவதற்கு
எங்களுக்கு இறைவன் தந்த இனிய வரம்

எங்கள் கிராமம் அதில்
காலையில் கண்விழித்தால்
குருவிகளின் கொஞ்சல் ஒலி
சற்று நேரம் சென்றவுடன்
கோவில் பூஜைக்காய் கோவில் மணி

சிறிது தொலை நடந்ததால்
கண் கவரும் எங்கள் குளம்

இன்னும் சிறு தூரத்திலே
எங்கள் சந்தையின் கலகலப்பு

அத்தனைக்கும் நடுவே
அழகாக ஓர் சிகரம்
முக்கால் நூற்றாண்டின் காலடியில்
எங்கள் கலாச்சாரத்துக்கு ஓர் மையம்; அது
யாழ் செங்குந்த இந்துக் கல்லூரியெனும்
சிறப்பான பெயர் அமையப் பெற்ற
சரித்திரங்கள் பல படைத்த
சிறப்பான பள்ளிக்கூடம்

எழுபத்தைந்து ஆண்டுகள் நீ
இனிதாகக் கடந்துவிட
நீ வளர்த்தெடுத்த அறிஞர் பலர்
உலகின் பல திசையிருந்தும் உன்னை வாழ்த்த

உன் சேவைகள் பல எண்ணி
எம் ஊரெல்லாம் உனைப் போற்ற
நீ தந்த தமிழ்ப் பாலில்
ஒரு துளியால் உன்னை வாழ்த்துகின்றோம்.
வாழ்க வாழ்க நீ என்றும் வாழியவே
வளங்கள் பல பெற்று
பல நூற்றாண்டு வாழியவே.

கவிதை ஆக்கம்
**திரு. சி. லோகநாதன்** B.Sc
பிரித்தானியா

# இதழாசிரியர்களின் எண்ணங்களிலிருந்து....

எமது கல்லூரி அன்னை பவளவிழா ஆண்டில் பவனிவர இருப்பதை எண்ணி இறும்பூதெய்துகிறோம். பரிசுத்தினமான இத்தினத்தில் கல்லூரிச் சஞ்சிகையான சுடரொளி தனது சுடரைப் பரப்புகின்றமை சிறப்பானதாகும். இவ் அமையத்தில் முளைவிடு மைந்தர்தமைக் கொண்டு களையிலா தீந்தமிழால் கல்விச் சுடராம் சுடரொளியை ஏற்றி வைத்த சிந்தனைச் சிற்பி ஐயா அவர்களை வந்தனை செய்து வாழ்த்துகிறோம். கல்லூரியின் விழுதுகளில் ஒருவரான எமது அதிபர் திரு.இ.பாலகுமார் அதிபராய் இருக்கும் வேளையில் பவளவிழாக் காண்பது அவருக்கும் கல்விச் சமூகத்திற்கும் கிடைத்த பெரும்பேறாம். அவரது செயற்பாடு இடையூறு இன்றி நூற்றாண்டு விழா வரை தொடர இதயம் நிறைந்த வாழ்த்துக்கள்.

இச்சுடரொளியாம் சஞ்சிகை பாடசாலை மாணவர்களில் இருந்து பல்கலைக்கழக பேராசிரியர் வரையானோரின் ஆக்கங்கள் மட்டுமன்றி கடல் கடந்து வாழும் கல்லூரித்தாயின், மைந்தர்களின் கவிதைகள், கதைகள் போன்ற கவினூறு ஆக்கங்களையும் தன்னகத்தே தாங்கி வருகின்றது.

சஞ்சிகைக்கான ஆலோசனைகளை அவ்வப்போது தந்துதவிய அதிபர், உப அதிபர் ஆசிரியர்களுக்கும் தரமான ஆக்கங்களைத் தந்துதவிய பேராசிரியர்களும் மாணவச் செல்வங்களுக்கும் நாடு கடந்து வாழ்ந்த போதும் நன்றி மறவாமல் ஆக்கங்களை நல்கியோருக்கும் நம் மனமார்ந்த நன்றிகள்.

இம்மலர் சிறக்க ஆசியுரைகளையும், வாழ்த்துச் செய்திகளையும், வழங்கிய பெருந்தகைகளுக்கும் இச்சஞ்சிகைக்கு வேண்டிய புகைப்படங்களை எடுத்து உதவிய புகைப்பட ஸ்தாபனத்திற்கும், சஞ்சிகை மலர்க் குழுவினருடன் இணைந்து கணினியில் பொறித்த ஆசிரியர்களுக்கும், சஞ்சிகையை அச்சிட்டு உதவிய கரிகணன் பிறிண்டேர்ஸ் நிறுவனத்தினருக்கும், விளம்பரம் தந்துதவிய விளம்பர ஸ்தாபனங்களுக்கும், அன்பளிப்பை வழங்கிய அன்பர்களுக்கும், மேலும் இம்மலர் சிறப்புற எம்முடன் தோளோடு தோள்நின்ற அனைத்து நெஞ்சங்களுக்கும் எமது மனம்நிறைந்த நன்றிகள் உரித்தாகின்றன.

**இதழாசிரியர்கள்**
**திருமதி க.முத்துக்கிருஷ்ணன்,**
**திரு.தீ.இரவீந்திரநாதன்**

பகுதித் தலைவர்

திருமதி ரூ.இராஜரட்ணம் S.L.T.S. I



2009ஆம் ஆண்டு G.C.E (A/L) கலைப்பிரிவில் 3A பெற்று சாதனைபடைத்து பல்கலைக்கழக அனுமதி பெற்றவர்கள் வரிசையில்...



மாவட்டத்தில் 18ஆம் இடம் செல்வி பு.ரசிதா



மாவட்டத்தில் 29ஆம் இடம் செல்வி ச.சுதர்சனா

# J/SENGUNTHA HINDU COLLEGE

## OUR STAFF




**From left to right (Sitting) :**
Mr.J.Katheeskar, Mr.P.Balamuhunthan, Mr.E.Selvamagashan, Mr.S.Saseelan, Mr.S.Ravichandran, Mr.T.Raveenthiranathan, Mr.R.Pasupatheeswaran, Mr.R.Balakumar, Mrs.R.Rajaratnam, Mrs.J.Kalatharan, Mrs.I.Ponniah, Mrs.K.Muthukrishnan, Mrs.T.Rajeswaran, Mrs.K.Jeyarajabala, Mrs.R.Gnanapandithan.

**From left to right (Standing) :**
Mrs.S.Srikantha, Mrs.S.Thanaseelan, Miss A.Jeyaseeli, Miss Efshipa Nirmali, Mrs.S.Vimalathas,Mrs.M.Satheeskumar, Mrs.T.Kirubanantha, Mrs.P.Ganeshalingam, Mrs.A.Thevarajan, Mrs.G.Senthilkumaran, Mrs.N.Rajhkumar, Mrs.S.Sayanthan, Mrs.A.Nishakaran, Mrs.M.Suranthiran, Mrs..Sathian, Mrs.P.Panchalingam, Mrs.H.Kannathasan, Mrs.S.Raventhiran, Mrs.T.Sorupan, Ms.K.Murugasunthari.

# Our Staff - 2009

| | |
|---|---|
| **Principal** | |
| Mr.R.Balakumar | SLPS - I |
| **Sectional Head** | |
| Mrs.R.Rajaratnam | Sp.Trd(Agril)SLTS-I |
| **Teachers** | |
| 1) Mrs.J.Kalatharan | B.A, Dip.in.Edu, SLTS-I |
| 2) Mrs.I.Ponniah | Sp.Trd(Sci).SLTS-I |
| 3) Mrs.K.Muthukrishnan | B.A,Dip.in.Edu,Med SLTS-I |
| 4) Mrs.K.Jeyarajabala | B.A, Dip.in.Edu. SLTS - I |
| 5) Mrs.T.Rajeswaran | Sp.Trd(Hind), B.A, Dip.in.Edu, SLTS - I |
| 6) Mrs.R.Pasupatheeswaran | Sp.Trd(Com).B.Com, Dip.in.Edu M.A (2-I) |
| 7) Mrs.R.Gnanapandithan | Sp.Trd(Sci (2-I) |
| 8) Mrs.T.Kirubanantha | Sp.Trd(Sci) (2-I) |
| 9) Mr.T.Raveendranathan | Sp.Trd (Eng), HNDA (2-I) |
| 10) Mrs.S.Thanaseelan | B.A, Dip.in.Edu (2-II) |
| 11) Mrs.S.Raveendran | BFA, Dip.in.Edu (2-II) |
| 12) Mrs.P.Sathyan | B.Com(Hons), (3-I) |
| 13) Mr.S.Ravichandran | B.Com,Dip.in.Edu, Med (2-II) |
| 14) Mr.S.Saseelan | Sp.Trd (Agri), B.A, Dip.in.Edu (2-II) |
| 15) Ms.K.Munugasunthari | Sp.Trd(Hind), B.A, (2-II) |
| 16) Mrs.P.Panchalingam | Sp.Trd(HomSc), B.A (2-II) |
| 17) Mrs.T.Sorupan | B.A (3-I) |
| 18) Mrs.M.Surendran | B.Sc, Dip.in.Edu, (2-II) |
| 19) Mrs.A.Thevarajan | B.A, Dip.in.Edu, (2-II) |
| 20) Mrs.P.Ganeshalingam | Sp.Trd(Art) B.A, Dip in.Edu (2-II) |
| 21) Mr.Pasupathy Balamugunthan | Sp.Trd(Eng) (3-I) Dip in.Eng |
| 22) Mrs.Mathivathany Satheeskumar | NDD (3-I) |
| 23) Mr.E.Selvamahesan | B.Sc, Dip.in.Edu (2-II) |
| 24) Ms.B.Gowri | B.Com, (3-I) |
| 25) Mrs.M.Mathivathani | B.A, (3-I) |

**Temporary Attachment**

| | | |
|---|---|---|
| 26) | Ms.A.Nishararan | BFA, (3-I) |
| 27) | Mrs.H.Kannathasan | B.FA, (3-I) |
| 28) | Mrs.S.Sajanthan | B.A (3-I) |
| 29) | Mrs.N.Rajhkumar | B.A, (3-I) |
| 30) | Mrs.S.Srikanthan | B.A, (3-I) |
| 31) | Mrs.S.Vimalathas | B.Com (3-I) |
| 32) | Mr.K.Katheesgar | Internship NDE |
| 33) | Ms.A.Jeyaseeli, | Volunter Teacher |
| 34) | Ms.Exfdshipa Nirmali | Volunter Teacher |

**Non Academic Staff**

| | | |
|---|---|---|
| 1) | Mr.S.Srishanmuganathan | Lab Assistant |
| 2) | Mr.P.Thiyagesan | Office Assistant |
| 3) | Mr.N.Amirthalingam | Watcher |
| 4) | Mr.S.Iruthayarajah | Sanitary labourer |

## முன்னாள் அதிபர் (1999 - 2007)



**திருமதி எஸ். விஸ்வலிங்கம்** S.L.P.S. I

## ஓய்வு பெற்ற ஆசிரியர்கள்



**திரு.H.S.சர்மா**
Sp.Trd.English



**திருமதி பி.ஞானசேகரவேல்**
Sp.Trd.Maths

# முன்னாள் அதிபர்



**திருமதி சிவஞானவதி விஸ்வலிங்கம் SLPS - I**

யா/செங்குந்த இந்துக் கல்லூரியை வழிநடத்திய அதிபர் வரிசையில் திருமதி சிவஞானவதி விஸ்வலிங்கம் அவர்களின் பதவிக்காலம் பொற்காலம் எனக் குறிப்பிட்டுக் கூறமுடியும். ஏனெனில் அவர் ஆற்றிய சேவைகள் கல்லூரியின் பௌதீக வள அபிவிருத்தியிலும் கல்வி அபிவிருத்தியிலும் மிகவும் துல்லியமான மாற்றத்தை சமூகத்திற்கு காட்டி நிற்கின்றது.

இக்கல்லூரி 75 ஆண்டு கால வரலாற்றில் பவள விழா நிகழ்வுகளை கொண்டாடிக் கொண்டு இருக்கும் இந்நாளில் ஓய்வு பெற்றுச் சென்ற அதிபர் அவர்களையும் அவர்கள் ஆற்றிய சேவைகள் பற்றியும் நினைவு கூறுவதில் பெருமை அடைகிறேன்.

அதிபர் தரம் –1 இல் எமது கல்லூரியில் 19.02.1999இல் அதிபராக காலடி எடுத்து வைத்த அவர் இக்கல்லூரியில் ஏறத்தாழ 9 ஆண்டுகள் அதிபராக கடமை புரிந்துள்ளார். இக்கல்லூரியின் முதலாவது பெண் அதிபர் என்ற பெருமைக்குரியவர் ஆகிறார். இவர் 1999 முதல் 2007வரை பௌதீக வள அபிவிருத்திக்காக ஆற்றிய சேவைகளாக மாணவர்களின் அறிவு ஆற்றல்களை மேம்படுத்த நூலகத்தை புனரமைத்தமை, மாணவர்களின் விளையாட்டுத் திறனை மேலோங்கச் செய்வதற்காக அவுஸ்ரேலியா பழைய மாணவர் சங்கத்தின் உதவியுடன் மைதானத்தை விஸ்தரித்தமை, நவீன வசதிகளுடன் கூடிய விஞ்ஞான ஆய்வுகூடம் உருவாக்கியமை, நவீன கற்றல் உபகரணங்களை உள்ளடக்கிய வீடியோ, ஓடியோ அறை உருவாக்கியமை, இலண்டன் பழைய மாணவர் சங்கத்தின் உதவியுடன் பிராத்தனை மண்டபம் நீட்டப்பட்டமை, ஆங்கில அறை தற்போதைய

அலுவலகம் மற்றும் கணினிவள நிலையம் ஆகியன அவரது பதவிக்காலத்தில் பாடசாலை பெற்றுக் கொண்ட பௌதீக வள வளர்ச்சியாகும்.

மேலும் மாணவர்களுக்கான பாண்ட் வாத்திய அணியை உருவாக்கியமை. பாடசாலைக்கு ஒலிபெருக்கி வசதியை ஏற்படுத்திக் கொடுத்தமை. மேலும் மாணவர்கள் தமது விளையாட்டுத் திறன்களை வெளிக்காட்டுவதற்கு பெருவிளையாட்டு முறைகளை அறிமுகப்படுத்தி கோட்ட வலய மட்டங்களில் கல்லூரியின் பெயரைப்பதிக்கச் செய்தமையும் எங்கள் அதிபர் அம்மாவின் பதவிக்காலத்திலே ஆகும். மேலும் வறியமாணவர்களின் கல்வி வளர்ச்சிக்காக M8V நிதித்திட்டத்தின் ஊடாக நிதி உதவி அளித்தமையையும் குறிப்பிடலாம். அத்தோடு மாணவர்களின் எழுத்தாற்றல் மேம்பாட்டுக்காக நீண்ட இடைவெளியின் பின் 2001இல் கல்லூரியின் சஞ்சிகையான சுடர்ஒளி வெளியிடப்பட்டதோடு 2007இல் இரண்டாவது தடவையாகவும் இச்சஞ்சிகை வெளியிடப்பட்டது.

கல்விப் பெறுபேறுகளை பொறுத்தவரையில் ஒவ்வொரு வருடமும் க.பொ.த உயர்தர பரீட்சையில் பல்கலைக்கழகத்திற்கு மாணவர்கள் தொழில் புரிகின்றதனைக்.......

இவரது பதவிக்காலத்தில் வெளிநாட்டிலுள்ள பழைய மாணவர்கள் தாமாக முன்வந்து கல்லூரியின் வளர்ச்சிக்கு பேருதவி புரிந்துள்ளனர். ஒவ்வொரு ஆண்டும் அக்டோபர் 1 இல் பரிசில் நாளையும் நிறுவுநர் தினத்தையும் கொண்டாடும் முறையையும் இவர் ஆரம்பித்து வைத்தார். மாணவர்களுடன் அன்பாகவும் ஆதரவாகவும் அரவணைத்து அவர்களின் கல்வி வளர்ச்சிக்கு பெரிதும் உதவினார். ஆசிரியர்களுடனும் தாயைப்போல் பாசம் வைத்து அவரணைத்து கற்றல் கற்பித்தல் செயற்பாடுகளைத் திறமையாக மேற்கொண்டார்.

கடமையிலே கண்டிப்பாகவும் பாசத்திலே தாயாகவும் கடமை ஆற்றிய அவர், கல்லூரிச் சமூகத்தோடு இணைந்து பாடசாலையின் வளர்ச்சிக்குப் பணியாற்றினார். இவர் ஏனைய அதிபர்களுக்கு முன்மாதிரியாக விளங்கினார்.

இவர் ஓய்வு பெற்றுச் சென்றாலும் இவரது சேவை என்றும் சுடர்விட்டு எரிந்து கொண்டே இருக்கும். இவரது சேவையை மாணவ நெஞ்சங்கள் என்றென்றும் நினைவு கூர்ந்து கொண்டே இருக்கும். அவரது சேவையை கல்லூரிச் சமூகம் என்றும் நினைவு கூர்ந்து கொண்டே இருக்கும்.

**ஆர்.பசுபதீஸ்வரன்,**
ஆசிரியர்.



## ஹரிஹரசாஸ்திரிகள் சிவஞானசுப்பிரமணிய சர்மா SLTS-1
## (ஓய்வு பெற்ற ஆங்கில ஆசிரியர்)

பவளவிழாக் காணும் செங்குந்த இந்துக்கல்லூரியில் தனது சேவைக்காலத்தின் அரைப்பகுதியான 14 ஆண்டுகள் ஆங்கில ஆசிரியராகச் சேவையாற்றி 25.12.2008இல் ஓய்வு பெற்ற இவரை எல்லோரும் அன்பாக சர்மா சேர் என அழைப்பதைக் காணலாம்.

இவர் எல்லோரிடமும் முகமலர்சியுடன் இனிமையாகப் பேசுகின்ற பண்பும், இரக்க சுபாவமும், உதவி செய்கின்ற மனப்பாங்கும் குருவுக்கு உரிய பண்புகள் நிறைந்தவராகவும் திகழ்கின்றார். எமது கல்லூரியில் ஆங்கில பகுதித்துறைக்கு தலைவராகவும், கல்லூரி நல்லுறவு மன்றத்தின் தலைவராகவும், சுந்தரர் இல்ல பொறுப்பாசிரியராகவும், இருந்து சிறப்பான சேவை புரிந்துள்ளார்.

மாணவர் மனநிலையறிந்து ஆலோசனை கூறுவதிலும், அவர்களுக்கேற்ற வகையில் கற்றல் கற்பித்தல் செயற்பாட்டில் ஈடுபடுகின்ற ஆசானாகவும் ஒழுக்கத்தை பேணும் பொறுப்பாசிரியர்களில் ஒருவராகவும், ஆசிரிய, மாணவ சுகதுக்கங்களில் கலந்து கெள்கின்ற மனப்பாங்குடையவராகவும் விளங்கினார்.

திணைக்கள, பாடசாலை மட்ட வேலைகளை நிறைவேற்றக் கோருகின்ற போது "ஓம்" என்ற பிராணமந்திரத்தை உச்சரித்து பலரது மனதில் இடம் பிடித்த ஒருவராகவும் இத்தார்ப்பரியத்தை எனக்கு புரியவைத்தவராகவும்

"Help ever
Hurt never"

என்ற சாயிபாபாவின் கூற்றிற்கு இணங்க செயற்படுகின்றவராகவும் விளங்குகின்றார்.

இவரை அன்னையின் அருளால் சகல ஐஸ்வரியங்களும் பெற்று நீண்ட ஆயுளுடன் பல்லாண்டு பல்லாண்டு வாழ்கவென வாழ்த்துகின்றோம்.

**தி.ரவீந்திரநாதன்,**
தலைவர்
நல்லுறவுமன்றம்



## 2009ஆம் ஆண்டு சேவையில் இருந்து ஓய்வு பெற்றவர்
## திருமதி பஞ்சாட்சரதேவி ஞானசேகரவேல்

அமைதியான சுபாவமும் ஆழ்ந்த அறிவும் கொண்டவர் திருமதி பஞ்சாட்சரதேவி ஞானசேகரவேல். 01.01.1982இல் இப்பாடசாலைக்குச் சேவையாற்ற வந்த அவர்கள் தனது ஓய்வுக் காலத்திற்கு முன்பே 35 வருட ஆசிரிய சேவையைப் பூர்த்தி செய்து 01.04.2009இல் ஆய்வு பெற்றார். இவர் 27 வருடங்கள் இப்பாடசாலையில் தனது சேவையை வழங்கினார். கணித பாடத்தை கட்டுப்பாட்டுடன் கற்பித்ததுடன், மாணவர்களின் ஒழுக்கத்திலும் மிகவும் அக்கறையுடையவராகத் திகழ்ந்தார். இரக்க சுபாவம் கொண்டவர். மாணவர்களைக் கண்டிக்க வேண்டிய நேரத்தில் கண்டித்தும், ஆதரவு காட்ட வேண்டிய நேரத்தில் ஆதரவு காட்டியும், மாணவரை நன்னெறிப்படுத்தியவர். இந்து மாமன்றத்தின் பொருளாளராக இந்து சமய நிகழ்வுகளைச் சிறப்பாக நிகழ்த்த உதவியதுடன், விளையாட்டுப் போட்டிகளிலும் மணிவாசகர் இல்ல மாணவரை உற்சாகப்படுத்தி அவர்களின் திறமைகளை வெளிக்காட்ட உதவியவர். மாணவர்கள் மனிதப்பண்புகள் உள்ளவர்களாக வளரவேண்டும் என்ற எண்ணத்துடன் செயற்பட்டவர். பாடசாலையை ஒரு குடும்பமாகக் கருதி செயற்பட்டதோடு, பாடசாலைக் குடும்பத்தவர்களின் சுகதுக்கங்களில் அக்கறையுடன் கலந்து கொண்டார். பாடசாலைச் சமூகம் அவரின் ஓய்வுக்காலம் சிறப்பாக அமைய வாழ்த்துகின்றது.

**திருமதி இ.பொன்னையா,**
ஆசிரியர்.

# வைரவிழாவிற்குப் பின்

# எமது கல்லூரியில் பணியாற்றிச் சென்றவர்கள்

1) அதிபர் அமரர் திரு.ஆறுமுகம் இராஜகோபால்
2) பிரதி அதிபர் திரு.தம்பிஜயா நாகராசா
3) திரு.கிருஷ்ணபிள்ளை ஸ்ரீஸ்கந்தராசா
4) ஆசிரியர் அமரர் திரு.சிற்றம்பலம் அமரேசன்
5) ஆசிரியை திருமதி. பூமணி மகேந்திரன்
6) ஆசிரியை செல்வி தனேஸ்வரி தர்மராஜா
7) ஆசிரியை திருமதி பஞ்சாட்சரதேவி ஞானசேகரவேல்
8) ஆசிரியை திருமதி பவளராணி தில்லைநாதன்
9) ஆசிரியை செல்வி சுந்தரம் அகல்யா
10) ஆசிரியை செல்வி ஜெயமணிதேவி ஐயாத்துரை
11) ஆசிரியை திருமதி கலையரசி சிவகுமார்
12) ஆசிரியை திருமதி நந்தகுமாரி சிவசுப்பிரமணியம்
13) ஆசிரியை திருமதி யோகம்மா இராசரத்தினம்
14) ஆசிரியை திரு.நடராசா சத்தியபாலன்
15) ஆசிரியை திரு. கமலாதேவி இராஜேஸ்வரன்
16) ஆசிரியை திரு. ஹரிகரசாஸ்திரிகள் சிவஞானசுப்பிரமணிய சர்மா
17) ஆசிரியை சின்னத்துரை தர்மபாலன்
18) ஆசிரியை திருமதி மோகனவதனி ரவீந்திரன்
19) ஆசிரியை திருமதி புஸ்பராணி இரத்தினராசா
20) ஆசிரியை திருமதி பாணுமதி கனகநாயகம்
21) ஆசிரியை திருமதி ருக்மணிதேவி லோறன்ஸ்
22) ஆசிரியை திருமதி சின்னத்தம்பி பத்மராசா
23) ஆசிரியை திருமதி நேசரஞ்சினி விக்னேஸ்வரன்
24) ஆசிரியை திரு மாணிக்கவாசகர் புவனேந்திரன்
25) அதிபர் திருமதி சிவஞானவதி விஸ்வலிங்கம்
26) ஆசிரியை செல்வி யசியானா யேசுராஜன்
27) ஆசிரியை திருமதி சுலோசனா சர்வகுணசீலன்
28) ஆசிரியை திரு.இராமலிங்கம் மன்மதராசன்
29) ஆசிரியை திருமதி புவனேஸ்வரி குலசிங்கம்

30) ஆசிரியை திரு.சின்னத்தம்பி ஞானேஸ்வரன்

31) ஆசிரியை திருமதி நாகம்மா மகாலிங்கம்

32) உபஅதிபர் சு.சிவபாதசுந்தரம்

33) ஆசிரியை திரு. சின்னத்தம்பி விவேகானந்தா

34) ஆசிரியை திரு.கந்தையா அருந்தவராசா

35) உப அதிபர் கணபதிப்பிள்ளை வடிவேல்

36) ஆசிரியை திருமதி கா.தர்மசீலன்

37) ஆசிரியை திரு. ஸ்ரீசண்முகநாதன் கோகுலன்

38) ஆசிரியை திருமதி வசந்தமலர் ரூபச்சந்திரன்

39) ஆசிரியை செல்வி பொ.தர்ஷலா

40) ஆசிரியை செல்வி வத்ஸலா சண்முகரத்தினம்

41) ஆசிரியை திருமதி மீரா மகேந்திரன்

32) ஆசிரியை திருமதி அருந்ததி குகானந்தா



# எமது கல்லூரி வரலாறு



எங்கள் கல்லூரியின் பவளவிழாவை கொண்டாடிக்கொண்டிருக்கும் நாம் அதன் வரலாற்றை திரும்பிப் பார்ப்பது சிறப்பானது. பலர் வரலாற்றை எழுதித்தர முன்வந்தபோதும் என்மனம் அதற்கு உடன்படவில்லை. ஏனெனில் நான் இப்பாடசாலையின் பழைய மாணவனாகவும், தற்போது அதிபராகவும் இருப்பதனால் வரலாற்றை நோக்கில், கூடியவரை என்னால் சேகரிக்கப்பட்ட தரவுகள், தகவல்கள், நேர் காணல் எல்லாவற்றையும் தொகுத்து இப்பாடசாலையின் வரலாற்றை எழுத வேண்டிய கடமை எனக்கு உள்ளமையால் இதனை எழுதியுள்ளேன். இதில் ஏதும் தவறுகள் இருப்பின் அதற்குரிய பொறுப்பையும் நானே ஏற்றுக்கொண்டு எழுதவிழைகின்றேன். இதனை எல்லோரும் ஆர்வமாக வாசிப்பார்கள் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

மரபு வழி செழுமை சேர்க்கும் தங்கமென ஒளிருமொரு கலைக்கோயிலாக கிராமப்புற மாணாக்கர்களின் கல்வி வாய்ப்பிற்காக ஏங்கிய ஏக்கத்தைத் தீர்க்க உதித்த அறிவாலயமாக திருநெல்வேலி கிழக்கில் அமைந்துள்ள செங்குந்த இந்துக் கல்லூரி விளங்கி வருகின்றது. நல்லூர் செங்குந்த சந்தைக்கு முன்புறமாக அமையப் பெற்ற செங்குந்தா வீதியில் சுமார் 100 யார் தொலைவில் கொன்றையடி வைரவர் ஆலயத்திற்கு சொந்தமான பண்டாரி வளவில் இக்கல்லூரி அமைந்துள்ளது. நல்லூர் இராஜதானி சிறப்புற்று விளங்கிய காலத்திலே கல்வியிலும், கலை இலக்கியத்துறையிலும் சிறப்புப் பெற்றிருந்த இப்பதியிலே யாழ்ப்பாண மன்னர்களால் வைத்தியர்களும், சோதிடர் களும், போர்வீரர்களும் குடியமர்த்தப்பட்டனர். அது மட்டுமன்றி, இப்பதியின் அருகிலேயே சட்டநாதர் வீதியில் சரஸ்வதி மகால் எனும் அறிவாலயம் ஒன்றையும் யாழ்ப்பாண மன்னர்கள் அமைத்திருந்தனர். இவ் அறிவாலயத்தை பின்வந்த போர்த்துக்கேயர்கள் தீயிட்டு அழித்தாரென்பது வரலாறு.

அன்னியராட்சியின்போது கிறீஸ்தவ மிஷனரியினரே கல்வியின் ஏகபோக உரிமையைப் பெற்றிருந்ததுடன் மிஷனரிப் பாடசாலைகளில் பைபிள் படித்த பின்னரே பாடம் புகட்டும் முறையையும் பின்பற்றி இருந்தனர். அதனால் சைவப் பிள்ளைகள், கிறீஸ்தவ பாடத்தை கற்கும் சூழல் ஏற்பட்டது. இந்நிலையிலே தான் இச்சூழலில் ஆடியபாத வீதியில் ஞானப்பிரகாச சுவாமி அவர்களால் கிறீஸ்தவ பாடசாலை ஒன்று நிறுவப்பட்டு, கல்வி போதிக்கப்பட்டதுடன் கத்தோலிக்கமும் பரப்பப்பட்டது.

இந்நிலையிலேதான் திருநெல்வேலி கிழக்கில் தற்போதைய செங்குந்த இந்துக் கல்லூரி வளவில் கந்தவாசக மண்டபம் என்று ஒன்று நிறுவப்பட்டு அதில் ஒன்றுகூடி அறிவை வளர்த்திருந்தனர். அம்மண்டபத்திலே நடந்த கூட்டம் ஒன்றிலே கலந்துகொண்டு உரையாற்றிய சட்டசபைத்தேர்தல் வேட்பாளராக போட்டியிட்ட இந்துபோட் ராஜரட்ணம் என்பவர்

தான் தேர்தலில் வெற்றிபெற்று இந்த கந்தவாச மடத்தை இருமொழிப் பாடசாலையாக ஆக்கித் தருவேன் என உறுதியளித்தார். அத்தேர்தலில் அவர் தோல்வி அடைந்தாலும் தான் கூறியதை நிறைவேற்றினார். இவரது பேருதவியுடன் எங்கெல்லாம் சைவப்பிள்ளைகள் சைவசமய சூழலில் கல்வி கற்க முடியாதோ அங்கெல்லாம் சைவப்பாடசாலைகள் நிறுவப்பட்டது. அந்த நிலையிலே 01.10.1934இல் விஜயதசமி விழா அன்று செங்குந்த இந்து இரு மொழிப் பாடசாலை அங்குரார்ப்பணம், செய்து வைக்கப் பட்டது. செங்குந்த மகாஜன சபையின் உதவியுடன் பூதவராயர் குளத்துக்கு அருகாமை யில் பண்டாரிவளவு என்னும் ஒரு கோவில் காணியில் மத்தியில் சங்கமடம் என்ற ஒரு சிறிய மடமே செங்குந்தாவின் ஆரம்பம் இந்தச் சங்கமடம் அமைந்திருந்த பண்டாரி வளவு என்னும் கொன்றலடி வைரவ சுவாமி கோயிலுக் குச் சொந்தமான காணியை இக்கல்விக் கைங்கரியத்துக்கு உவந்தளித்தவர் அவ்வாலய தர்மகர்த்தாவும், வைத்தியராகவும். சோதிடரா கவும் இருந்த உயர்திரு ச.இளையதம்பி ஆவார். அவர்களால் வழங்கப்பட்ட காணியில் பாடசாலை ஆரம்பித்து வைக்கப்பட்டது. திருவாளர்கள் சி.கந்தையா, ஐயாத்துரை, பண்டிதர் வேதாரணியம், திரு.ச.நடராசா, பண்டிதர் சு.இராசையா, பண்டிதமணி.கணபதிப் பிள்ளை, திரு.சுவாமி நாதன், திரு.பொ.கைலாசபதி, திரு.சி.கந்தசாமிஐயர் ஆகியோர் ஆசிகூற ஆரம்பித்து வைக்கப்பட்ட இக்கல்லூரியின் முதல் அதிபராக கன்னாகம் குமாரசுவாமிப் புலவரின் மகனாகிய திரு.இ.முத்துக்குமார சுவாமிப்பிள்ளை (1934–1943) அவர்கள் நியமிக்கப்பட்டார். இவரையே ஊசிக்குடுமி வைத்தியர் என எல்லோரும் அன்பாக அழைத்தனர். இந்துபோட் ராஜரத்தினப் பெரியாரால் இக்குலமக்களின் நிதியால் அமைக்கப்பட்ட இப்பாடசாலை செங்குந்த என்ற பெயருடன் இருக்க வேண்டும் என்பதற்கமைய அப்பெயருடன் வீறு நடைபோடத் தொடங்கியது.

பின் செங்குந்த சைவத் தமிழ்க் கலவன் பாடசாலை என்ற பெயரில் உருவாகிய இப்பாடசாலையில் சபா ஆனந்தர் (இணுவில்), கந்தையா (இடைக்காடு), சின்னத்துரை (இடைக்காடு), விஜயரத்தினம் (நல்லூர்), K.S விஸ்வலிங்கம், சிவபாக்கியம், சின்னப்பிள்ளை எனப் பலர் முதல் ஆசிரிய குழாமாக பதவி ஏற்று இருந்தனர். தன்னலம் கருதாத இவர்கள் பணி சிறப்புற அமைய பத்து ஆண்டு அதிபர் பணி சிறப்புற்று ஓங்க உயர்திரு முத்துக்குமாரசுவாமி அவர்கள் ஓய்வு பெற உயர்திரு கணபதிப் பிள்ளை (1944–1967) எனும் பெரியார் அதிபர் பதவி ஏற்றார். கால் நூற்றாண்டு அதிபராக செங்கோலாச்சிய இவரது காலமே பொற்காலம் எனலாம். இவர் உள்ளத்தால் கல்லூரியையும், மாணவரையும், ஆசிரியரையும் கொள்ளை கொண்டு பாடசாலையின் பல்பரிணாம வளர்ச்சிக்கு வித்திட்டார். இவரது காலத்திலே ஆண்கள் வேட்டி சால்வையுடனும், பெண்கள் நீளப்பாவாடை சட்டை தாவணியுடனும் கல்வி கற்க வந்தனர். இக்காலத்தில் ஒட்டக்கூத்தர் விழா, நவராத்திரி விழா என்பன சிறப்பாக நடைபெற்று வந்தது. இவரது காலத்தில் 1–5 வரையும் ஆரம்பப் பிரிவு அதிபராக திரு.சி.நடராசா (சின்னத்தலைமை வாத்தியார்) பணிபுரிந்தார்.

யாழ்ப்பாணத்தில் உள்ள கல்லூரி களில் அதிகளவு சமயப் பெரியார்களும், அறிஞர்களும் பாதம் பதித்த ஓர் கல்லூரியாக இது விளங்கியுள்ளது. கவியோகி சுத்தானந்த பாரதி, திருமுருக கிருபானந்தவாரியார், பேராசிரியர் ஆ.ச.அழகப்பன், தவத்திரு குன்றக்குடி அடிகளார், புலவர் கோவிந்தர் போன்ற இந்திய அறிஞர்கள் பாதம்பதித்த

சிறப்புடையது. இப்பாடசாலை 1949இல் செங்குந்த இந்து ஆங்கிலப் பாடசாலையாக வளர்ச்சிகண்டது. இதனால் 1959இல் முதன்முதலாக க.பொ.த உயர்தரம் ஆரம்பித்து வைக்கப்பட்டது. அப்போது பரீட்சைக்குத் தோன்றிய மாணவர்கள் 100% சித்தியடைந்த துடன், 90% மேற்பட்டோர் பல்கலைக்கழகத்திற் கும் தெரிவு செய்யப்பட்டு, அகில இலங்கை ரீதியில் சாதனையும் படைக்கப்பட்டது. 1939இல் ஜே.எஸ்.சிக்கு முதலில் தோன்றிய மாணவர் களும் 100% சித்தியடைந்ததனால் ஒருநாள் விசேட விடுமுறை விடப்பட்டதுடன் குறிப்பிடத் தக்கது. தொடர்ந்து S.P நடராசா (1986–1970) அவர்கள் அதிபராகக் கடமை ஏற்றார். இவரது காலம் சொற்பம் எனினும் சீருடையையும், முகாமைத்துவயொழுங்கு முறை என்பவற்றை அறிமுகப்படுத்தியதுடன், கட்டுப்பாட்டை நிலை நாட்டினார். இவர் மாணவத் தலைவர் முறையை அறிமுகம் செய்ததுடன், இவரது காலத்திலே தான் நான்கு இல்லங்கள் உருவாக்கப்பட்டு விளையாட்டுப் போட்டிப் பொறுப்பாசிரியராக திரு.எஸ்.கோபாலசிங்கம் அவர்களை நியமித்து, பாடசாலையில் மைதானம் இல்லாத போதும் சாதனா மைதானத்தில் இல்ல விளையாட்டுப் போட்டியை ஆரம்பித்து வைத்தார். அத்துடன் பாடசாலையில் சாரணீயத்தையும் அறிமுகப் படுத்தி வைத்தார். தொடர்ந்து இலங்கை நாயகம் (1971–1972) அவர்கள் அதிபராக கடமை புரிந்தார். இவரது காலத்திலேயே பழைய மாணவர் சங்கங்களால் படக்காட்சிமூலம் சேர்க்கப்பட்ட நிதியைக் கொண்டு சட்டநாதர் ஆலயத்திற்குச் சொந்தமான காணி விளை யாட்டுமைதானத்திற்காக விலைக்கு வாங்கப் பட்டது. இக்காலத்தில் தரம் 1 தொடக்கம் தரம் 5 வரையுள்ள மாணவர்களை அயலிலுள்ள பாடசாலைக்குப் பகிர்ந்தளிக்கப்பட்டு இப்பாடசாலையில் தரம் 6 தொடக்கம் தரம் 13 வரை வகுப்புக்கள் நடைபெற்றது.

தொடர்ந்து கல்வியதிகாரியாக இருந்த வரணி சிவப்பிரகாசம் அதிபராக கடமை ஏற்று கல்லூரி வளவிலேயே இருந்து அல்லும் பகலும் கல்லூரியை வளர்த்தார்.

தொடர்ந்து 1973இல் சிறிது காலம் நாகராஜா என்பவர் அதிபராகக் கடமையாற்றிய பின்னர் வவுனியா கல்விப்பணிப்பாளராகச் சென்றதும், திரு.இ.பொன்னம்பலம் (1974)இல் அதிபராக வந்தார். இருவரும் சிறிது காலமே சேவையாற்றி கல்லூரியை வளர்ச்சியடையச் செய்தார்.

இவரைத் தொடர்ந்து திரு.வி.மகா தேவா (1975–1977) அதிபராகப் பணிபுரிந்தார். இவரும் தன் காலத்தில் பாடசாலையின் வளர்ச்சிக்காக அரும்பாடுபட்டார். இதன்பின் திரு.எஸ்.சிவப்பிரகாசம் (1978) அதிபராக வந்தார். இவரது காலத்தில் விளையாட்டு மைதானத்தில் அரங்கு அமைத்து வெகுவிமரி சையாக தமிழ்த்தின விழா கொண்டாடப்பட்டது குறிப்பிடத்தக்கது.

இவருக்குப் பின் திரு.ப.சுவாமிநாத சர்மா (1979–1985) அதிபராகக் கடமையாற்றி னார். இவரது காலத்திலே தென்மேற்குப் பக்கத்தில் அமைந்துள்ள சுவாமிநாத சர்மா கட்டடம் அமைக்கப்பட்டதுடன், வடக்குப் பக்கமாக இருக்கும் முத்துக்குமாரசுவாமி மண்டபமும் அமைக்கப்பட்டது. அதில் சித்திரஅறை, நூலகம், மனையியல் அறை என்பன அமைக்கப்பட்டது.

இவருக்குப் பின் திரு.ம.சண்முக லிங்கம் (1986) அதிபராக அலங்கரித்தார்.

இவரது காலத்திலேதான் பழைய மாணவர் சங்கத்தினால் விளையாட்டு மைதானத்திற்கு சுற்று மதில் அமைக்கப்பட்டது. கல்வி, ஒழுக்கத்தில் பாடசாலை முன்னேறிவரும் நிலையில் இவர் பதவி உயர்வுபெற்று யாழ்ப்பாண பல்கலைக்கழகத்திற்கு விரிவுரை யாளராகச் சென்றது எமது துர் அதிஷ்டமே.

இவரைத் தொடர்ந்து திரு.வி.அரிய நாயகம் (1987) அதிபரானார். இவரும் சிறிது காலமே அதிபராக பணியாறற் பாடசாலையை வளர்ச்சியடையச் செய்தார்.

இவரைத் தொடர்ந்து திரு.எம்.பரமேஸ் வரன் (1988–1995) அதிபரானார். இவர் பழைய மாணவனாகவும், வரலாற்றுப்பாட ஆசிரியரா கவும் விளங்கினார். இவரது காலத்திலேதான் வைரவிழா நடாத்தப்பட்டு புதுப்பொலிவு பெற்றது.

திரு.ஏ.ராஜகோபால் (1995–1999) அதிபராக பணியாற்றினார். இவரது காலத்திலே நாட்டின் அசாதாரண சூழ்நிலை யால் இடப்பெயர்வு ஏற்பட்டது. எனினும் பாடசாலையின் வளர்ச்சிக்குப் பணியாற்றிய இவர் யாழ்ப்பாணக் கோட்டக் கல்விப்பணிப்பாள ராக பதவியுயர்வு பெற்றுச் சென்றார்.

இவருக்குப்பின் திருமதி.சி.விஸ்வ லிங்கம் (1999 – 2007) அதிபராகக் கடமை யாற்றினார். இவரது காலத்திலே தற்போது அலுவலகமாக இருக்கும் மாடிக்கட்டடம் அமைக் கப்பட்டது. சுவாமிநாதசர்மா கட்டடத்தின் ஒருபகுதி விஞ்ஞான ஆய்வுகூடமாக மாற்றி அமைக்கப்பட்டது. ஏற்கனவே சித்திரகூடமாக இருந்த பகுதி ஒடியோ வீடியோ அறையாகவும், கணினி அறையாக மாற்றி அமைக்கப்பட்டது. பான்ட் வாத்தியக் கருவியும், ஒலிபெருக்கிச் சாதனங்களும், சங்கீத உபகரணங்களும் பெறப்பட்டது. அத்துடன் அவுஸ்ரேலிய பழைய மாணவர் சங்கத்தினால் மைதானத்தின் ஒருபகுதி காணி கொள்வனவு செய்யப்பட்டது. தொலைபேசி வசதியும் ஏற்படுத்தப்பட்டது.

01.01.2008இல் அதிபராகக் கடமை யேற்ற நான் இக்கல்லூரியின் பழைய மாணவனாக இருப்பதனால் இக்கல்லூரியை வளர்ச்சியடையச் செய்வதற்கு என்னால் இயன்ற முயற்சிகளை மேற்கொண்டு வருகின்றேன்.

**இ.பாலகுமார்,**
அதிபர்

## மாணவ முதல்வர் 2009



**இடமிருந்து வலம் (முதல் நிரல் - நிற்பவர்கள்):** க.சசிகரன், இ.குகனராஜ், போ.ஜெரோன்ராஜ் A.S.P. ஜெ.அங்கயன், ச.சுரேன், கி.ரமேஸ், ந.ரெஜிகுமார், லோ.தர்சனன், உ.கிசோதன், பா.ராகவேந்தன்

**(இரண்டாம் நிரல் - நிற்பவர்கள்):** பு.மீரா, இ.ஜனனி, த.தர்மினி,தே.சுரேகா, கு.கார்த்திகா, க.சிந்துஜா, A.S.P. ப.சிந்து, உ.பவித்திரா, ஜெ.ஜெயவதனி, பா.சிவகௌரி, ர.ஸ்ரீசந்திரிக்கா, இ.ரஜினா, ப.கவிதா S.P

**இருப்பவர்கள் :** திருமதி பி.பஞ்சலிங்கம், திருமதி ரூ.இராஜரட்ணம், வி.தாட்சாயினி, அதிபர், ச.நிரோஜன் S.P, திரு.ஆர்.பசுபதீஸ்வரன், திருமதி J.கலாதரன், திருமதி பூ.சத்திரியன்.



சாரத சேவாச்சிரம பொறுப்பாளர் சுவாமி சித்ரூபானந்தா அவர்கள்
தலைமைத்துவ பயிற்சி கருத்தரங்கில்...



2008ஆம் ஆண்டில் நடைபெற்ற விளையாட்டுப் போட்டியில் பிரதம விருந்தினரை அழைத்து வரும்
பாண்ட் குழுவினர்...

# இலங்கை அரசியல் வரலாற்றில் இனப்பிரச்சினைக்கான தீர்வு

கே.ரீ.கணேசலிங்கம்,
தலைவர், சமூகவியற்றுறை,
யாழ்ப்பாணம்.



**அறிமுகம்**

இலங்கை அரசியல் வரலாற்றில் இனப்பிரச்சினைக்கான தீர்வு நீண்ட முரண்பாட்டுத் தன்மையைக் கோடிட்டுக் காட்டியுள்ளது. இனமுரண்பாடு என்பதன் தாக்கங்களைவிட அதற்காக முன்வைக்கப்பட்ட தீர்வுகளிலேயே அதிக தாக்கம் ஏற்பட்டுள்ளது. அதிலும் நடைமுறைசார்த்தியப்பாடு பற்றிய விமர்சனமே முதன்மைப்படுத்தப்பட்டுள்ளதுடன் நடைமுறைசார் முரண்பாட்டின் மீதான நம்பிக்கையீனம் தனியான அரசியல் சகிப்புத் தன்மைக்கு எதிர்வாதம் புரிவதாக அமைந்திருந்தது. இந்த அடிப்படையில் பதின்மூன்றாம் அதிருத்தச்சட்டமும் அதனால் ஏற்பட்ட விளைவுகளும் தற்போது முதன்மைப்படுத்தப் பட்டு வருகிறது. இன்று இலங்கை இன மோதலின் இரண்டாவது கட்டம் பதின்மூன்றாம் திருத்தச்சட்ட மூலத்தின் முக்கியத்துவத்தினை இருபது ஆண்டுகள் கடந்த நிலையில் மீள் உருவாக்கம் பெற வழிவகுத்துள்ளது. 1987ஆம் ஆண்டு இந்திய இலங்கை உடன்படிக்கையின் பிரகாரம் முன்மொழியப்பட்ட அதிகாரப் பரவலாக்கல் பற்றிய சட்ட வடிவம் 1987ஆம் ஆண்டின் 42ஆம் இலக்கச் சட்ட மூலத்தின்படி மாகாணசபை அமைப்பு முறைமை ஊடாக அமுலுக்கு வந்தது. இலங்கையின் வடகிழக்கு பிரதேசத்தில் குறிப்பிட்ட காலப்பகுதியில் அமுலான மாகாணசபை அமைப்பு பின்பு ஏற்பட்ட அரசியல் கொந்தளிப்புக் காரணமாக தற்காலிகமாக கைவிடப்பட்டது. இதர பகுதிகளில் மாகாண சபையின் அமுலாக்கம் சாத்தியப்பாடான விளைவுகளை இலங்கை அரசியலில் ஏற்படுத்தியது. வடக்கு தனியான அலகாகவும் கிழக்கு மாகாணம் தனியான அலகாகவும் 2007இல் பிரிக்கப்பட்ட பின்பு வடக்கு மாகாணசபை மட்டுமே அரசாங்க மற்ற நிர்வாகப் பணியினைக் கொண்டுள்ளது. இதற்கும் விரைவில் தேர்தலை நடாத்தி மாகாணசபை அரசாங்கத்தினை நிறுவுவதன்மூலம் பதின்மூன்றாம் திருத்தச் சட்டமூலத்தின் ஒரு பகுதியான மாகாணசபை அமைப்பு இலங்கை முழுவதும் நடைமுறைச் சாத்தியப்பாடான ஒன்றாக அமையும். பதின்மூன்றாம் திருத்தச் சட்டமூலத்தின் உள்ளடக்கத்தில் காணப் பட்டுள்ள அம்சங்களையும், அதன் பிரதான பகுதியான மாகாணசபை அமைப்பினையும் விரிவாக நோக்குவோம்.

பதின்மூன்றாம் திருத்தசட்டமூலம் மூன்று பகுதிகளைக் கொண்டுள்ளது.

1) இலங்கை ஜனநாயக சோஸலிஸக் குடியரசின் அரசியலமைப்பு 18ஆம் உறுப்புரையின் திருத்தமாகிய தமிழும் அரசகருமமொழியாக வேண்டும், ஆங்கிலம் இணைப்பு மொழியாதல் வேண்டும் என்பதோடு பாராளுமன்ற சட்டத்தின்மூலம் இவ்வத்தியாயத்தின் ஏற்பாடுகள் நடைமுறைப்படுத்த வேண்டும்.

2. அரசியலமைப்பின் 138ஆம் உறுப்புரையின் பிரகாரம் முதன்நிலை நீதிமன்றத்திற்கு பதிலாக மேல்நீதிமன்றம் அல்லது மேல்முறையீட்டு நீதிமன்றம் என்ற சொற்களை இடுதல் வேண்டும்.
3. அரசியலமைப்பில் 154 உறுப்புரையின் பிரகாரம் மாகாணசபைச் சட்டங்களை உள்ளடக்கியிருப்பது,

என்ற பிரிவுகளுக்கு அமைவாக விளங்குகிறது. இதனடிப்படையில் மாகாணசபை அமைப்பு, தொழிற்பாடு அதன் அங்கங்களின் அதிகாரம் என்பனவற்றை நோக்குவது அவசியமானதாகும்.

### மாகாணசபை அமைப்பு

மாகாணசபை அமைப்பு முறைமையின் கீழ் நடைமுறையிலுள்ள மாகாண எல்லைகள் மாகாண சபைக்குரிய அதிகாரப் பகுதிகளாக அமையும். நடைமுறையிலுள்ள மாகாண நிர்வாக அலகென்ற அமைப்பில் வடக்கு கிழக்கு இணைந்த (2007 வரை) மாகாணசபையாகவும் ஏனைய ஏழு மாகாணங்களும் தனித்தனியான மாகாணசபை நிர்வாகத்தைக் கொண்ட அமைப்புகளாக இயங்குமென மாகாணசபை சட்ட மூலம் கூறுகின்றது.

154 சரத்து உறுப்புரை (2) இல் குறிப்பிட்டதற்கு இணங்க அருகருகே உள்ள இரண்டு அல்லது மூன்று மாகாணங்களுக்கு தெரிவு செய்யப்பட்ட ஒரே மாகாணசபை நிர்வாகத்தினையும் ஆளுநர், முதலமைச்சர், அமைச்சரவை ஒன்றையும் கொண்டிருக்கவும் தனித்தனியே பிரிந்து நிர்வகிக்க வேண்டுமா எனவும் பாராளுமன்ற சட்டத்தின்மூலம் அல்லது சட்டத்தின்கீழ் ஏற்பாடு செய்யலாம். மாகாணசபை தாபிக்கப்பட்ட எந்த ஒரு மாகாண நிர்வாகத்திற்கும் ஆளுநர் ஒருவர் இருத்தல் வேண்டுமென 154 ஆ(1) உறுப்புரை தெளிவாக வரையறுத்துள்ளது.

ஒவ்வொரு மாகாணத்தின் பரப்பளவையும் மக்கள் தொகையையும் அடிப்படையாகக் கொண்டு மாகாணசபை உறுப்பினர்கள் அம்மாகாணத்திலுள்ள மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். தேர்ந்தெடுக்கப்பட்டவர்களின் பெரும்பான்மை ஆதரவைப் பெற்ற ஒருவரை மாகாணத்தின் ஆளுநர் முதலமைச்சராகத் தெரிவு செய்யப்படுவார். முதலமைச்சர் ஆளுநருக்கு வழங்கப்படும் ஆலோசனைக்கு ஏற்ற அமைச்சரவை ஒன்றினை ஆளுநர் தேர்வு செய்வார்.

### ஆளுநர்

ஆளுநர் ஜனாதிபதியின் ஆணை மூலம் நியமிக்கப்படுவதுடன் 154, 4 (ஆ) உறுப்புரையின் கீழ் ஜனாதிபதிக்கு விருப்பியாங்கு பதவி வகுத்தலும் வேண்டுமென குறிப்பிடப்பட்டுள்ளது. ஆளுநர் ஜனாதிபதிக்கு முகவரியிடப்பட்டு எழுத்துமூலம் தனது பதவியிலிருந்து விலகலாம் அல்லது அரசியலமைப்பின் ஏற்பாடுகளை வேண்டுமென்று மீறினார், ஊழல் பழக்கவழக்கத்திற்கு குற்றவாளியாக இருந்தார், துர்நடத்தைக்குரியவராகக் காணப்பட்டார் என மாகாணசபையின் உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு (2/3) பங்கினருக்கு குறையாதோரால் சமர்ப்பிக்கப்பட்ட தீர்மானத்திற்கு அமைவாக பதவி விலக்கமுடியும். அதனை ஜனாதிபதிக்கு சமர்ப்பித்து அதன் அடிப்படையில் நடவடிக்கை எடுக்கமுடியும். ஜனாதிபதிக்கு ஆளுநரை பதவி விலக்கு ஆலோசனையளிக்கும் உரையொன்றில் மாகாணசபை உறுப்பினர்களில் அரைவாசியினர் ஒப்பமிடுதல் வேண்டும்.

நிறைவேற்றுத்தலைவரான ஆளுநர் ஒவ்வொரு மாகாணசபைக்கும் ஜனாதிபதியால் நியமிக்கப்படுவதனால் மாகாணத்தின் அனைத்துச் செயற்பாடுகளுக்குமுரிய அதி காரங்கள் ஆளுநருக்குரியது. இத்தகைய அதிகாரங்களை ஆளுநர் நேரடியாகவோ, அல்லது முதலமைச்சர், அமைச்சரவை ஊடாகவோ செயற்படுத்துவார். ஆளுநர் ஜனாதிபதி விரும்பும் வரையும் பதவி வகிப்பார். அவரது பதவிக்காலம் ஐந்து வருடங்களென வரையறுக்கப்பட்டுள்ளது.

ஆளுநரின் அதிகாரங்களும் கடமைகளும்

1) காலத்துக்கு காலம் மாகாணசபையின் கூட்டத்தொடரை தொடக்குதல், கலைத்தல், ஒத்திவைத்தல்.
2) ஒரு கூட்டத்தொடர் முடிவடைந்த இரண்டு மாதங்களில் அடுத்த கூட்டத்தொடர் முடிவடைந்த இரண்டு மாதங்களில் அடுத்த கூட்டத்தொடரை ஆரம்பிப்பதற்குரிய நடவடிக்கைகளை எடுத்தல்.
3) மாகணசபையை கலைக்கும்போது சபையொன்றின் பெரும்பான்மை ஆதரவு பெற்ற முதலமைச்சரின் ஆலோசனைப்படி செயலாற்றுதல்.
4) மாகாணசபையின் அமைச்சர்கள் உடன் படாத விடயங்கள் பற்றி ஜனாதிபதிக்கு அறிவுறுத்துதல்.
5) மாகாணசபையினதும் அமைச்சரவையி னதும் பெரும்பான்மை ஆதரவு கிடைக்கும் வரை தத்துவங்களைப் பிரயோகித்தல்.
6) நியதிச்சட்டங்களை உருவாக்கும் திறன் உடையவராகவும், அவற்றுக்கான நடவடிக்கைகளை மேற்கொள்ளும் வல்லமை உடையவராக விளங்குதல் (அவ்வகை நியதிச் சட்டங்கள் ஜனாதிபதிக்கோ, பாராளுமன்றத்துக்கோ, அரசியலமைப் புக்கோ விரோதமில்லாததென்பதனை உறுதிப்படுத்துபவராகவும் ஜனாதிபதிக்கு பங்கமிளைக்காதவராகவும் இருத்தல் வேண்டுமென 154 இன் (9) உறுப்புரையில் தெரிவிக்கப்பட்டுள்ளது) 154 எ பகுதியில் மாகாணசபையின் நிரல் பிரகாரம் நியதிச்சட்டங்களை ஆக்கமுடியும்.
7. மாகாண நிர்வாகத்திற்குட்பட்ட எல்லைக்குள் தேசிய மற்றும் சம்பிரதாய நிகழ்வுகளின் காலத்தில் ஆள் ஒருவருக்கு வழங்கப்பட்ட தண்டனையை குறைத்தல், ஒத்திவைத்தல், மன்னிப்பு வழங்குதல் என்பவற்றை புரியமுடியும்.
8. மாகாணசபையின் நிகழ்வுகளில் உரை யாற்றும் தகமை ஆளுநருக்கு உரியதாக உள்ளது.
9. மாகாணசபைகளின் நடவடிக்கைகளை வேகப்படுத்தவும் விவேகமாக மேற் கொள்ளவும் அவ்வப்போது செய்திகளை அனுப்பும் அதிகாரம் உடையவராவார்.
10. நிதிக்கூற்றுக்களை உருவாக்குதல்
11. விசேட, அவசரகால நிதிகளை பெறுவதற் கான நடவடிக்கையில் ஈடுபடுதல்.
12. பதவிப் பிரமாணங்களையும், சம்பிரதாய மான நிகழ்வுகளையும் ஆரம்பித்து வைப்பவராக காணப்படுதல்
13. மாகாண பகிரங்க சேவை ஆணைக் குழுவையும் அதன் பதவிநிலை உறுப்பினர் களையும் நியமித்தல்.
14. மாகாணசபை நிர்வாகத்தின் முடிவுகளையும், சட்டவாக்கத்திற்கான உத்தேசங்களையும் ஆளுநருக்கு தெரிதல்.
15. மாகாண நிர்வாகத்திற்கான சட்டவாக்க உத்தேசங்களையும் அதற்கான தகவல்களையும் கோருதல்.
16. கருமங்களை சீர்தூக்கிப்பார்த்து முடிவு களை அமைச்சரவை எடுக்க ஆளுநர் கட்டளை இடமுடியும்.

17. தத்துவங்களை அமைச்சரவை பொறுத்தோ, நேரடியாகவோ, அமைச்சர் மூலமாகவோ, அவரது கீழ்பணிபுரியும் அலுவலகர் மூலமாகவோ பிரயோகிக் முடியும்.

18. முதலமைச்சர், அமைச்சர்கள், மாகாண சபை உறுப்பினர்கள் ஆளுநரின் ஆலோசனைக்கு இணங்கவே செயற்படு வார்கள்.

மாகாணசபையின் அமைப்பு முறையில் ஆளுநருக்கு வழங்கப்பட்ட அதிகாரம் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைவிட அதிகமானது. மக்கள் இறைமைக்கு வாய்ப்பளிக்காத தன்மை ஆளுநரது அதிகாரத்தினை அவதானித்தால் புலப்படும். இது மத்தியரசின் அதிகாரங்கள் நேரடியாக மாகாண சபைகள்மீது திணிக்கப்படுவதுடன், அதிகாரப்பரவலுக்குப் பதிலாக அதிகாரக் குவிப்பே நிகழ்வதாகத் தென்படும். ஆளுநரின் பதவி மத்திய அரசின் கட்டுப்பாட்டை மட்டுமல்ல அதிகாரத்தின் கட்டுப்பாட்டையுமே வெளிப்படுத் துகின்றது. மாகாணசபைகளைக் கலைக்கும் அதிகாரம் ஆளுநருக்குரியதாக இருப்பதனால், அவருக்கு மத்திய அரசுடன் கொண்டிருக்கும் உறவின் நிமித்தம் நேரடியாக கொண்டிருப்ப தனால் மக்களின் தெரிவுக்கு புறம்பாக மாகாணசபைகள் கலைக்கப்படலாமென அச்சம் நிலவ மாகாணசபைச் சட்டம் இடம் கொடுத்துள்ளது.

1990ஆம் ஆண்டு 27 இலக்க மாகாணசபை திருத்தச்சட்டமூலத்தின் பிரகாரம் ஜனாதிபதி ஆளுநரைத் தெரிவு செய்யும் போது அரைவாசிப்பங்கு மாகாணசபை உறுப்பினர் களுடன் கலந்தாலோசித்த பிற்பாடே மேற் கொள்ளவேண்டும் எனவும் 28ஆம் இலக்கத் திருத்தின் பிரகாரம் மாகாணசபையை கலைப்ப தற்கு நிதியாண்டினையும் வருடாந்த நிதி அறிக்கையையும் கருத்திலெடுத்து அதன் பின்னராக இருத்தல் வேண்டும் எனவும், வேறு ஏதும் காரணம் இருப்பின் மாகாணசபையின் நடவடிக்கை பொறுத்ததாகவும் நிதி, நிர்வாகம் என்பன மூன்று மாதங்களுக்குக் குழம்பியி ருந்தால் அதனைச் சரி செய்ய ஆளுநர் பல சந்திப்புக்களை மேற்கொண்டு சரிவராத பட்சத்தில் மாகாணசபையை கலைக்க உத்தரவிடலாமெனக் கூறப்படுகின்றது. 28(2) a இன் திருத்தம் பிரகாரம் ஆளுநர் மாகாண பொதுச்சேவை ஆணைக்குழுவில் பிரதம செயலாளருடன் மாகாணப் பொதுச்சேவையின் நியமனம், இடமாற்றம், விலகல், ஒழுக்காற்று நடவடிக்கைகளை மேற்கொள்ளலாமென சிறப்பு அதிகாரம் அளித்துள்ளது. 28 (2) b திருத்தப்படி செயலாளர் எடுக்கும் நடவடிக்கை களுக்கு எதிராக மாகாண பொதுச்சேவை ஆணைக்குழுவுக்கு விண்ணப்பிக்க முடியும் என அறிவுறுத்தப்பட்டுள்ளது.

**முதலமைச்சரின் அதிகாரம் கடமைகள்**

மாகாணசபைக்கான தேர்தலில் பெரும்பான்மை பெறும் கட்சியின் சுயேட்சைக் குழுவின் முதன்மை வேட்பாளர் அக்கட்சியின் அல்லது சுயேட்சைக்குழுவின் உறுப்பினர்களால் முன்மொழியப்பட்டு ஆளுநரால் பெயர்குறித்து வாசிக்கப்பட்டு பதவிப்பிரமாணம் செய்து கொள்பவர் முதலமைச்சராவார். (பிரதம அமைச்சர் எனவும் அழைக்கப்படும்).

பதவிப் பிரமாணம் சமாதான நீதவான் அல்லது ஆளுநர், அல்லது மேல் நீதிமன்ற நீதிபதி முன்னிலையில் அல்லது ஜனாதிபதி முன்னிலையில் (சட்டத்தில் குறிப்பிடப்பட வில்லை) சத்தியப்பிரமாணம் செய்யப்படுவார். ஆட்சிக்காலம் பதவி பிரமாணத் தேதியிலிருந்து

ஐந்து வருடமென வரையறுக்கப்பட்டுள்ளது. மாகாணசபை கலைக்கப்பட்டால், பெரும் பான்மையை இழந்தால், முதலமைச்சருக்கு ஏதும் நிகழ்ந்தால், கையொப்பமிட்டு பதவியிலிருந்து விலகினால் ஒளிய ஆட்சிக்காலம் முழுவதும் பணிபுரிவார்.

1. அமைச்சரவையை உருவாக்குதல் (நான்கிற்கு மேற்படாத அமைச்சரவை)
2. அமைச்சரவைக்கு தலைமை தாங்குதல்
3. 154 ஊ பிரிவின் 5ஆம் உபபிரிவில் ஆளுநரின் ஆலோசனைக்கு இணங்க தனது தற்துணிவைப் பிரயோகித்தல்.
4. ஆளுநருக்கு அமைச்சரவை, பிரதம செயலாளர், செயலாளர் பற்றிய கடமைக் கூறுகளை, பணிகளை மற்றும் விடயங்கள் தொடர்பான ஆலோசனைகளை வழங்குவார்.
5. அமைச்சரவையின் கூட்டுப் பொறுப்புக்கு வகை செய்பவராக விளங்குவார்.
6. மாகாணசபை அரச நிர்வாகத்திற்கும் அதன் நடவடிக்கைக்கும் பொறுப்புடையவராக விளங்குவார்.
7. ஆளுநர் கோரும் தகவல்களையும், சட்டக் கோவைகளையும், வியாக்கியானங்களையும் அனுப்பும் கடமைப்பாடுடையவர்.
8. மாகாணசபையின் எல்லைக்குட்பட்ட அனைத்து நிர்வாகத்திற்கும் பொறுப்புடையவராக விளங்குவார்.
9. பொது, தேசிய வைபவங்களில் கௌரவ, முதன்மை விருந்தினராக கலந்து கொள்வதோடு, மாகாண சபையின் எல்லைக்குட்பட்ட தனிமனிதர்களின் கௌரவம், புகழ்மிக்க விடயங்கள் குறித்தான நடவடிக்கைகளை எடுப்பார்.
10. வெளிநாட்டுத் தூதுவர்களை மாகாண சபையின் சார்பில் வரவேற்பது கலந்துரையாடுவது எல்லைக்குட்பட்ட அபிவிருத்தி தொடர்பான விடயங்களின் திட்டமிடல் ஆலோசனைகளை முன்மொழிதல்.

மாகாணசபை அமைப்பின் இன்னோர் பிரதான அங்கமாக மாகாணங்களின் நிதிவருவாய்களை பகிர்ந்தளிப்பதற்கு நிதி ஆணைக்குழு ஒன்று நிறுவப்படும். இதன் உறுப்பினர்களாக மத்திய வங்கி ஆளுநர் திறைசேரி செயலாளர், பெரும்பான்மை சமூகங்களைப் பிரதிநிதித்துவப்படுத்தும் மூன்று உறுப்பினர்கள் என்போர் காணப்படுவர். இதன் ஆயுட்காலம் மூன்று ஆண்டுகள் இதில் முதல் இரு பதவி நிலை அலுவலர்களும் நிரந்தர மானவர்களாக விளங்குவர்.

**இதன் பணிகள்**

1) மாகாணசபை எல்லைக்குட்பட்ட நிதி தொடர்பான முதலீட்டுத் திட்டங்களை உருவாக்குதல் விருத்தி செய்தல்
2) ஜனாதிபதியின் விதப்புரைக்கமைய அபிவிருத்தித் திட்டங்களை உருவாக்குதல். அதனூடாக மாகாண சபைகளுக்கிடையிலான அபிவிருத்தி இடைவெளியை குறைத்தல்.
3) நாட்டின் சமநிலையான அபிவிருத்தியை ஏற்படுத்த உதவுதல். குறிப்பாக
   அ) ஒவ்வொரு மாகாணசபையின் சனத்தொகை சமப்படுத்தல்.
   ஆ) தலைக்குரிய தேசிய வருமானத்தை சமப்படுத்தல்.
   இ) பொருளாதாரம் மற்றும் சமூக சமத்துவமின்மையைக் குறைத்தல்.
   ஈ) ஒவ்வொரு மாகாணத்திற்குள்ளும் தேசிய வருமானத்திற்கான இடைவெளியைக் குறைத்தல்.

   இதற்கு நிதிதிரட்டும் வழிகளாக

1) மாகாணத்திற்குரிய வரியிலிருந்து அறவிடுதல்.

2) மத்திய அரசாங்கம் வழங்கும் எல்லா மானிய கொடைகளதும் வருமானத்திலிருந்து.

3) இலங்கை அரசின் திரட்டு நிதியத்திலிருந்து மாகாணசபைக்கு முற்பணமாக வழங்கப் படும் எல்லாக் கடன்களினதும் வருமானத்தி லிருந்து.

4. மாகாணசபைக்கு கிடைக்கும் எல்லாப் பெறுகைகளும் அடங்கும்.

அத்துடன் மாகாணங்களுக்கு அவசர கால நிதியமொன்றும், அந்நிய நாடுகளின் உதவிகளைப் பெறுவதற்கான கருத்திட்டச் செயற்பாடும் அமுலாக்கமும் அரசாங்கத்துட னான கலந்துரையாடலின் பின்பு சாத்தியப்படு வதற்கான வாய்ப்பும் அரசியலமைப்பு திருத்தத்தின் பிரகாரம் அமைந்துள்ளது.

மாகாணசபைக்கான பதின்மூன்றாம் திருத்தச் சட்டமூலத்தின் பிரகாரம் சட்டம் ஒழுங்கும், காணியும் காணி அபிவிருத்தியும், விவசாயமும் கைத்தொழிலும், கல்வியும் கலாசாரமும், பகிர்ந்தளிக்கப்பட்டுள்ள அதிகாரங்களாக விளங்குகின்றன. இவை அனைத்தும் ஒன்பதாம் அட்வணை நிரல் – i மாகாணசபை நிரல் எனவும், நிரல் ii ஒதுக்கிய நிரல் எனவும் அழைக்கப்பட்டு அதிகார எல்லைகள் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. நிரல் iii இல் ஒருங்கியை நிரல் எனக்குறிப்பிட்டு அதிகாரங்கள் முன்மொழியப்பட்டுள்ளன. இவை ஒவ்வொன்றினதும் அளவீட்டைப் பொறுத்து விரிவாக தரமுடியாதுள்ளதோடு மாணவர்களின் அறவீடுகருதி விமர்சனங் களும், மதிப்பீடுகளும் மட்டுப்படுத்தப்பட் டுள்ளது. மேற்குறிப்பிட்ட மூன்று நிரல்களும் அதிகாரப்பரவலின் முக்கியத்துவத்தினை குறிப்பிட்டாலும் அதீதமான கட்டுப்பாடுகளை யும் மறைமுகமாக வெளிப்படுத்தியுள்ளது.

சட்டம், ஒழுங்கு தொடர்பான உறுப்புரையில் மாகாணங்கள் ஒவ்வொன்றுக் கும் ஒரு பொலிஸ்படை இயங்கும். இதனைவிட இலங்கை முழுவதற்குமான தேசியப்படைப் பிரிவொன்று இயங்கும் மாகாணப் பொலிஸ் பிரிவானது, தேசிய பொலிஸ் பிரிவிலிருந்து கடமை வழி அனுப்பப்பட்ட பிரதி பொலிஸ் அதிபர், உதவிப் பொலிஸ் அதிபர் என்போரைக் கொண்டு இயங்கும். இவற்றுக்கு கீழ் பதவி வழி பணியாளர் இயங்குவர். இவர்கள் பொலிஸ்மா (தேசிய) அதிபரின் முழுமையான நெறிப்படுத் தலிலும் கட்டுப்பாட்டிலுமே இயங்குவர்.

காணி மீதான உரிமை காணி மாற்றம், காணி அபிவிருத்தி என்பன மாகாணசபையின் அதிகாரத்திற்குட்பட்ட அம்சங்களாக அமைந்தி ருந்தன. அரச காணிகள் இலங்கை அரசாங்கத்தின் தேவைக்கான காணிகள் எந்தவித மட்டுப்படுத்தலும் இன்றி இலங்கை அரசாங்கம் பயன்படுத்துமென குறிப்பிடப்பட் டுள்ளது. மாகாணசபைக்குரிய தேவைக்கான காணிகள் தேசியக் காணிக் கொள்கைக்கு இணங்க உருவாக்க வேண்டும். காணியை பாரதீனப்படுத்தல் அல்லது கையளித்தல் மாகாணசபையின் மதிப்புரையின் கீழ் ஜனாதிபதியாலே செய்யப்படும் காணி அபிவிருத்தி தொடர்பான திட்டங்கள் இலங்கை மத்திய அரசாங்கத்தின் கட்டுப்பாட்டிலேயே இருப்பதுடன், பாரிய அபிவிருத்தித்திட்டங்களை மத்திய அரசே தொடர்ந்தும் நிர்வகிக்கும். காணி ஒதுக்கீடு, காணி விநியோகம் இனவிகிதாசாரத்தின் அடிப்படையிலேயே அமையுமெனவும் திருத்தச் சட்டமூலத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வாறே ஏனைய பரவலாக்கல் அம்சங்களும் எல்லைப்படுத் தப்பட்டு கையாளப்பட்டு வருகின்றது.

**முடிவுரை**

எனவே பதின்மூன்றாம் திருத்தச் சட்டமூலம் அதிகாரப்பரவலாக்கல் அணுகு முறையின் ஆரம்பமெனக் கூறலாம். உலகில் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே இவ்வகை முறையை கடந்து முழு நிறைவான அதிகாரப் பரவல் முறை அமுலாக்கப்பட்டுவிட்டது. இலங்கையின் அரசியல் கலாசார வரண் முறைக்குள்ளும் புவிசார் அரசியல் எல்லைக்குள் ளும் திருப்தி அளிக்கக்கூடிய அதிகாரப்பரவல் முறைமை என்றுமே எழவில்லை. ஐக்கிய அரசுகளுக்குள் அதிகாரம் கைமாற்றப்படும் போது இவ்வகை தன்மைகளே பிரதிபலிக்கும். அதனை பின்பற்றுவதும், மாற்றுவதும் அரசுகளின் நவீன சிந்தனையிலேயே ஏற்படுதல் முடியும். அவ்வகை மாற்றமொன்றுக்கான உரையாடல் இலங்கையில் ஏற்பட்டுள்ளது. அது தெளிவான அரசியல் கலாசாரத்தினை மேலெழச்செய்வதன்மூலமே சாத்தியப்படுத்த லாம். இலங்கையின் அமுலாக்கல் அனு பவத்தின் பதின்மூன்றாம் திருத்தச் சட்டமூலம் சாதகமான விளைவை ஏற்படுத்தியுள்ளது.

## உதவிய நூல்கள்


1) K.Loganathan, Sri Lanka, Lost opportunities past arrempts at Resolving Ethnic conflict studies in conflict formation and Resolutions December 1999.

2) Locarno conference center for policy alternatic 11-14 June, 2001.

3) J.Uyangoda; constitutional alizing federalism social scientists association - 2003.

4) Government publication 13th ........ of Republic corstitaiens November 1987.

# Literature & Language Teaching

**S.K.Kannathas**
*Lecturer ELTC*
*University of Jaffna.*



Literature adorns language. But in order to learn and teach literature proficiency is language very much important. When we learn literature it helps to enrich our language proficiency. The link between language and literature is obvious.

Nowadays there is no English, literature, instead literature in English is becoming popular. The native speakers have accepted the writings in English by the non-native speakers. The reason for this may be the flourishing of the commonwealth literature. The Universities in England have included the writings of non-native Speakers in their study of literature. In Sri Lanka, the NIE and the Universities have included writings of Sri Lankans in English in the study of literature.

We, the non-native speakers of English have no opportunity to be exposed to the style of native speakers. But through learning English literature we get a chance to become acquainted with the style of native Speakers. Literature is a form to express culture. Hence learning literature helps us to learn cultural differences. It also helps us to get familiarised with alien phrases and structures in English. Thereby our language proficiency will be enriched. I would like to point out a quotation from D.T.Enright (E.L.T.Vol.XIII No. 1) who taught in Malaysia, If the Oxford and Cambridge pedagogues give up stuffing T.S.Eliot etc, into their students and devote themselves exclusively to simple (even Basic) English and some semantics then we can look forward to an increase in the sales of the magazines and Mickey Sillanes. That's what Mickey Spilance is basic"

Noone can conceive the idea of teaching a language without literature. The study of literature is the study of words, feelings and structures. From the strictly utilitarian point of view there are many people whose grasp of a language will be strengthened enormously by the experience gained through learning literature.

The issue of "Literature and Language Teaching" is generating a great deal of interest at present changes in educational and social condition have created controversial ideas on the status of literature study amongst our educational goals, and it also plays an ever more problematic role in a new pattern of language teaching which aims primarily to impart practical communicative skills. Nevertheless, there is still comparatively great clarity about what role literature texts perform in imparting language skills for the students who learn English as a second language with their confrontation with literature.

Michael H. Short and Christopher N. Candlin say "Literature and Language teaching should be linked and made mutually reinforcing". In this view, we can assume that the non-native students are exposed to the best uses of the English language through learning English literature. There is a controversial idea regarding this. The literary texts of high celebre are a problem for the students who learn English as a second language. But the modern writers who are much aware of the modern linguistics do write the old literature and modern literature in accessible modern English. As a consequence, literature teaching and language teaching are linked and the students find it interesting to learn in the classrooms. The modern writers present literature commonly in the form of text book dialogues and short tales. As a result, many students enjoy reading literature. As enjoyment plays an important factor in any learning process, literature is potentially a useful aid to the language teacher. Further more literary texts often contain within then a number of different varieties of English. They can thus be extremely useful in motivating more advanced learners of English to linguistic variation and the values associated with different varieties.

**2.1. Integration of Language**

Ronald Carter says "More opportunities should be sought for an extensive and integrated study of language and literature in the teaching of a foreign language" According to him language based study skills can be promoted by reading literature. It is his contention that some of the language activities like summarizing, debating and guided re-writeing, and work with linguistic models on literature texts can aid to promote the language competence of non-native learners.

## 2.2 Perspectives on Literature

Literature is not qualitatively different from any other linguistic performance. It certainly help to achieve communication through the usage of linguistic structures. The linguistic system used for spoken gossip or for written literature helps to achieve communication.

"there are four perspectives on literature which help in language teaching" The first perspective is, reading literature texts accompanied by a varying amount of grammatical analysis and explanation, and exercises and drills may be devised in order to transfer linguistic structure to activate language learning. Secondly literature has become a vehicle for the learning of differences between language varieties. So a language learner can learn of styles such as conversational style for dialogue, an informative style for narration, and a Poetic style for heightened effects. Thirdly it creates an authentic situation for language learning. D.H.W. Harding comperes literature to make - believe and gossip in which language teaching attempts to compensate for the absence of real events with reading material of literature. Finally literature malerials help non-native students to sterelch and expand their competence in the target language. When the literature students start discussion, their language ability develops well.

## 2.3 Literature as a separate subject

"There is no doubt that literature is sufficiently valuable for us to pass on the pleasure that reading offers to us". This will be done most efficiently by treating it as a completely separate subject. If they are not separated a language teacher may be forced to neglect the concept of language teaching by his/her concentration on literature only. If purely language element in literature is over emphasized the lesson may be boring for students Neither of these situation is beneficial for the students.

## 2.4. Selection of literary texts

In second language teaching, many teachers use literature to assist the development of competence in the language. The prime intention of teaching literature is to motivate the learners to read substantially. Another reason for teaching of literature is to teach culture. If is chimed that studying literature enable us to imbibe the foreign culture as. well as our own culture. One common experience of most students who are learning English as a second language is their struggle with language and culture with which they are unfamiliar.

"It is believed that a knowledge of the culture of the speakers of the target language facilitates learning the language" In this context our children will be deprived of the opportunity of learning another culture if the text are limited with literature in English or English literature.

In the above mentioned context the literature texts used for the non-native students should be highly relevant to them. Braj. B.Kachra remarks, "I will presuppose that contextually appropriate and linguistically grade literary texts have an important job to do in the classroom. I advocate using a rather specialized body of English literature which is written by non-native users of English" His suggestion may be due to the present demand of the non-native English writers in literature to recognize their creations. But the proposal that the notion of "English Literature should be bordered and termed "Literatures in English" is acceptable. Although, there is possibility for learning varieties of English through learning English literature.

We can accept the notion of including non-native literature in English. But teaching only non-native literature in English to the non-native students will never help them to learn varieties on English.

Literature may work to promote a greater tolerance for cultural differences. So in the context of difficulty in understanding an alien culture, we need not neglect native English literature. A goal of teaching English literature is to provide an opportunity for non-active students to learn and understand its culture. Therefore the literature texts should include both native English literature and literatures in English.

Literature may work to promote a greater tolerance for cultural differences. So is the context of difficulty in understanding an alien culture, we need not to neglect native English literature. A goal of teaching English literature is to provide an opportunity for non-active students to learn and understand its culture. Therefore the literature texts should include both native English literature and literatures is English.

**2.5 Conclusion**

An issue of Forum shows a renewed interest in returning to literature as a source of texts for enjoyable and stimulating language. Most present -

day literary texts assume that literature can provide a basis for extending language usage. Many of these texts focus on the particular grammatical points that are salient in the text. Furthermore, vocabulary expansion is dealt with by attention to word forms and common expressions. It is accepted that "Literature will increase all language skills because literature will extend linguistic knowledge by giving evidence of extensive and subtle vocabulary usage and complex and exact Syntax". As such, literature is ideal for developing an awareness of language use. Literature will motivate students to read a lot. If students enjoy reading literature it will motivate them to familiarise with texts, and thus ultimately increase their reading proficiency.

## Reference


1. Literature and language teaching published by Oxford University Press.
2. Literature and Language Teaching - Published by Oxford University Press. P.11
3. Literature and Language Teaching- William T.Little wood Published by Oxford University P.178
4. Literature and Language Teaching-Published by Oxford University Press. P.173
5. What's wrong with the ELT Program in our Contry - Parvathi Nagasundaram- Navasilu 14- P.9
6. Non - native Literatures in English Teaching Braj. B.Kachru Literature and Language Teaching Published by Oxford University Press, PP. 140 - 142
7. Literature in the ESL classroom Sanrda Mc kay

   Literature and Language Teaching-Published by Oxford University Press, P.191.

# கொடுப்பனவுகள் மற்றும் தீர்ப்பனவுகள் தொடர்பான இலங்கை மத்திய வங்கியின் அண்மைக்காலச்செயற்பாடுகள்

**பேராசிரியர் மா. சின்னத்தம்பி,**
கல்வியியற்றுறை,
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்.



இலங்கை மத்திய வங்கி 1950 ஆகஸ்ட் 28இல் ஆரம்பிக்கப் பட்டுச் சுதந்திரமான இலங்கைக்கு ஏற்றதான நாணய மற்றும் வங்கிமுறையை விருத்தி செய்வதிற் பொறுப் புணர்வுடன் தொழிற்பட்டு வருகின்றது.

இவ்வாறான தொழிற்பாடுகளில் முதன்மை யானவற்றில் ஒன்றுதான் கொடுப்பனவுகளை யும், தீர்ப்பனவுகளையும் ஒழுங்குபடுத்துவ தாகும். இவைபற்றி, கவனம் செலுத்துவதாக இக்கட்டுரை அமைகின்றது.

### கொடுப்பனவு மற்றும் தீர்ப்பனவுத் திணைக்களம்

இலங்கை மத்தியவங்கி இலங்கையின் நாணய நிதிமுறையின் மேலாளராகப் பணி யாற்றுவதன்மூலம், வங்கிகளையும், நிதி நிறுவனங்களையும் கண்காணித்து வழிப் படுத்தி வருகின்றது. இதன்மூலம் பண அமைப் புச் சார்ந்த பொருளாதார அபிவிருத்திக்கும் உறுதிப்பாட்டுக்கும் பல்வேறு நிலைகளிற் பாடுபடுகின்றது. இதற்காகப் பல திணைக்களங் களை அல்லது பக்திகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. அவற்றில் ஒன்றுதான் கொடுப் பனவு மற்றும் தீர்ப்பனவுத் திணைக்களமாகும்.

2005ஆம் ஆண்டின் 28ஆம் இலக்கக் கொடுப்பனவு மற்றும் தீர்ப்பனவு முறைமைகள் சட்டம் இவை தொடர்பான பரந்துபட்ட அதிகாரங்களை மத்திய வங்கிக்கு, குறிப்பாக மேற்படி திணைக்களத்திற்கு வழங்குகின்றது. இந்த அதிகாரங்கள் பின்வருவன தொடர்பாகக் காணப்படுகின்றன.

- கொடுப்பனவுகளை ஒழுங்குபடுத்தலும் தீர்த்தலும்
- மத்திய வங்கியின் ஏடுகளிலுள்ள பிணை யங்களை விற்றலிலும், பணப்பணிகளை வழங்குவோரை ஒழுங்குமுறைப்படுத்த லிலும் ஈடுபடுதல்.
- காசோலைகளை இலத்திரனியல்மூலம் முன்வைத்தலையும், நாட்டின் ஏனைய கொடுப்பனவு மற்றும் தீர்ப்பனவு முறை களையும் மேற்கொள்ளல்.

இந்தத் திணைக்களம் பின்வரும் குறிக் கோள்களுடன் தொழிற்பட்டு வருவது குறிப் பிடத்தக்கது.

1. நிதியியல் முறையில் வெளிநாட்டு மற்றும் உள்நாட்டு எதிர்பார்ப்புக்களுக்குப் தாக்குப் பிடித்தல் அவசியம். இதற்கான ஆற்றலும் பாதுகாப்பும் கொண்ட நிதியியல் முறையை உறுதிப்படுத்தல்.
2. வினைத்திறன் மிக்க நிதியியல் முறையை இலங்கையில் நிலை நிறுத்துதல்

இக்குறிக்கோளை அடைவதற்காகப் பின்வரும் செயற்பாடுகளில் அக்கறை கொண்டுள்ளது.

**அதேநேர மொத்தத் தீர்ப்பனவுமுறைமை**

இதற்கான தொழிற்பாட்டுப் பிரிவு ஒன்று செயற்பட்டு வருகின்றது. இது மேலே குறிப் பிடப்பட்ட திணைக்களத்திற் குட்பட்டதாகும்.

நிதியியற் சந்தையிற் பல்வேறு தரப்பினர் பங்கேற்று வருகின்றனர். அவர்களிடையில் தீர்ப்பனவுகளை மேற்கொள்வதுடன், வாடிக்கை யாளர் கொடுப்பனவுகளையும் மேற்கொள் கின்றனர். தாமதமற்றமுறையில் இப்பணிகளைச் செய்வது இதன் பிரதான அம்சமாகும்.

அதேநேர (தாமதமற்ற) மொத்தக் கொடுப்பனவு ஆகக்கூடிய தொகை 2008இல் 1515 ஆகக் காணப்பட்டது. 277 பில்லியன் ரூபா இதிற் கையாளப் பட்டிருந்தது. நாள் ஒன்றுக்கு 104 பில்லியன் சராசரியாகக் கையாளப்பட்டி ருந்தது. திரவத்தன்மை வசதிகளை வழங்குவ தற்காக மேலதிக நிதியைப் பெற்றுக்கொள்வதில் இது சிறப்பாகப் பணியாற்றியது.

இதிற் பின்வருவோர் பங்காளராகத் தொழிற்பட்டு வந்தனர்.

1. இலங்கை மத்திய வங்கி
2. உரிமம் பெற்ற 21 வர்த்தக வங்கிகள்
3. வங்கியல்லா 8 முதனிலை வணிகர்கள்
4. ஊழியர் சேம நிதியம்
5. கொழும்பு பங்குப்பரிவர்த்தனையின் மத்திய வைப்பக முறைமை

இவ்வாறு 2008 இல் 33 பேர் பங்கேற்றிருந்தனர்.

அனர்த்த நிகழ்வுகளிலிருந்து மீட்பதற்கான தலத்திற் பல நேரடித் தொழிற்பாட்டுப் பிரிவுகள் தடங்கலின்றித் தரமாகவும் செயற்பட்டன. இது பிரதான தொழிற்பாட்டுக்கு மேலதிகமான தாயிருந்தது. தனியாள் கணினி அடிப்படை முறை யொன்றைப் பயன்படுத்தியும் இச் செயற்பாடுகள் துரிதப்படுத்தப்பட்டன.

**வெளிநாட்டு ஒதுக்கு முகாமைத்துவத்தின் கீழான வணிகங்களின் தீர்ப்பனவுகள்**

மத்திய வங்கியின் கொடுப்பனவு மற்றும் தீர்ப்பனவுத் திணைக்களத்திற் காணப்படும் மற்றொரு பிரிவு வெளிநாட்டு நாணய மாற்று தங்கம் மற்றும் வெளிநாட்டு பிணையங்களின் தீர்ப்பனவுப் பிரிவு ஆகும். இவை தொடர்பான பணிகளில் ஈடுபடுகின்றது.

திறைசேரி வியாபார அளவு முகாமைத்துவ முறை மூலமாகப் பின்தளக் காரியாலயச் செயற்பாடுகளில் இப்பிரிவு ஈடுபட்டு வந்தது. 2008 ஆம் ஆண்டில் 50 மில்லியன் பெறுமதி யுடைய 7049 தீர்ப்பனவு அறிவுறுத்தல்கள் வழங்கப் பட்டிருந்தன. இப்பிரிவு சர்வதேச நிறுவனங் களுடன் தொடர்புகொண்டு பல்வேறு உடன் படிக்கைகளையும் மேற்கொண்டது.

**திறந்த சந்தை தொழிற்பாடுகளிலான தீர்ப்பனவுகள்**

இதற்குப் பொதுவானபிரிவு சொத்துப் பட்டியல்களின் பிணையங்களுடைய ஒதுக்கீடு களுக்குப் பொறுப்புடையதாகக் காணப்படு கின்றது.

இவை தொடர்பாக பின்வரும் வகையிலான தீர்ப்பனவுகளில் இப்பிரிவு ஈடுபட்டு வருகின்றது.

1. மீள் கொள்வனவு (திறைசேரி உண்டியல், ரூபாய்ப் பிணைகள் தொடர்பான) கொடுக்கல் வாங்கல்கள்
2. நேர்மாற்று மீள் கொள்வனவுக் கொடுக்கல் வாங்கல்கள்
3. உடன் கொள்வனவுக் கொடுக்கல் வாங்கல் கள்

4. மத்திய வங்கிப் பிணையங்கள் கொடுக்கல் வாங்கல்கள்

பங்கேற்பாளர்களுக்கு அவசரமாகத் தேவைப் படுகின்ற ஒரு நாளுக்குட்பட்ட திரவத்தன்மைத் தேவைகளைத் தொடர்ந்து வழங்கிவந்தது. அத்துடன், இத்தகைய திரவத்தன்மை நிலைமை களைக் கண்காணித்து உதவிவருவது குறிப்பிடத் தக்கது.

**சுவிப்ற் தொடர்பூட்டல்கள்**

இலங்கை மத்திய வங்கியின் சுவிப்ற் தொடர்பான செயற்பாடுகளை இப்பிரிவு தொடர்ந்து மேற்கொண்டது. சுவிப்ற் அபிவிருத்தி வழிகாட்டலுடன் ஒத்துச் செல்லும் வகையிற் பல்வேறு வகையிலான நவீன முறைப்படுத்தல்கள் மேற்கொள்ளப்பட்டன.

2008இல் மாத்திரம் மத்திய வங்கியினால் அனுப்பப்பட்ட மற்றும் பெறப்பட்ட சுவிப்ற் செய்திகள் முறையே 1,206,408 ஆகவும், 794,075 ஆகவும் காணப்பட்டன.

குறிப்பிடத்தக்க முக்கியமான விடயம் யாதெனில் மத்திய வங்கியின் சொந்தக் கொடுக்கல் வாங்கல் பற்றிய 154, 358 செய்திகள் பெறப்பட்டிருந்தமையாகும்.

**ஆசிய தீர்ப்பனவு ஒன்றியத்தின் கீழான கொடுக்கல் வாங்கல்கள்**

ஆசியத் தீர்ப்பனவு ஒன்றியத்தின் பொறிமுறை யூடாக இலங்கையின் கொடுக்கல் வாங்கல்கள் இடம்பெறுகின்றன. உலகில் எண்ணெய் விலைகளில் அதிகரிப்பு ஏற்படும் காலங்களில் இத்தகைய தீர்ப்பனவுத் தேவைகள் அதிகரிப்ப துண்டு. 2008இல் ஈரானிலிருந்து அதிகளவு எண்ணெய் இறக்குமதி செய்யப் பட்டதால் 363 பில்லியன் ரூபா பெறுமதியான கொடுக்கல் வாங்கல்கள் மேற்கொள்ளப்பட்டன.

ஐக்கிய அமெரிக்க டொலர், மற்றும் ஐரோப்பிய யூனியனின் யூரோ என்பவற்றில் தனித்தனியான கணக்கீட்டு முறைகளைப் பின்பற்றுவதற்கு 2008 பெப்ரவரியின் பின் உடன்பாடுகளைப்பட்டிருந்தது.

நாணயப் பரிமாற்றத்துக்கான தகைமை மற்றும் தகுதியை தீர்மானிப்பதற்கு அடிப்படை நாணயமாக டொலரைப் பயன்படுத்துவதற்கும் தீர்மானிக்கப்பட்டிருந்தது.

சர்வதேச நாணய நிதியத்தின் சிறப்பு எடுப்பனவு உரிமை குறுக்கு வீதங்களைப் பயன்படுத்துவதற்கும் தீர்மானம் மேற் கொள்ளப்பட்டிருந்தது.

நாணயப்பரிமாற்றல் தொடர்பான வட்டி வீதமாக பார்க்ளேஸ் வங்கியைப் பிரித்தானிய வங்கிகள் சங்கத்தினாற் பிரதியீடு செய்வதற்கும் தீர்மானிக்கப்பட்டிருந்தது.

ஆசியத் தீர்ப்பனவு ஒன்றியம் தீர்ப்பனவுப் பொறிமுறை தொடர்பாகப் பல சீர்திருத்தங் களைச் சிபார்சு செய்தபோது, அவைபற்றிய அறிவுறுத்தல் களை இலங்கை மத்தியவங்கி 2008 டிசம்பரில் வர்த்தக வங்கிகளுக்கு வழங்கியது.

**சார்க் கொடுப்பனவு முன்னெடுப்பு**

சார்க் நாடுகளிடையே சிறப்பான ஒத்துழைப்பை வளர்ப்பதற்காகக் கொடுப்பனவு மற்றும் தீர்ப்பனவுத் திணைக்களம் பங்கேற்ற மாதிரிகளில் 2008 மார்ச் 28 ஆம் திகதியன்று கொழும்பிற் சார்க் கொடுப்பனவுச்சபையின் கூட்டம் நடைபெற்றது.

சார்க் கொடுப்பனவு முன்னெடுப்புகளுக்குச் சார்க் கொடுப்பனவுச் சபை பொறுப்புடையதா யுள்ளது. இதற்கான செயலகம் இரண்டு வருடகாலம் இயங்குவதற்கேற்றதாக இலங்கை மத்தியவங்கியில் நிறுவப்பட்டுள்ளது. இது பின்வரும் கருமங்களிற் கவனம் செலுத்தும்.

1. நாடுகளுக்குரிய ஆய்வுகள் மற்றும் மதிப்பீடுகளை ஏற்பாடு செய்தல்.
2. விசேடத் தொழில்நுட்ப உதவிச் செயற்றிட்டங்களை மேற்கொள்ள வசதியளித்தல். இதில் வசதி வழங்குதல், வடிவமைத்தல், நடைமுறைப்படுத்தல் விடயங்களில் ஈடுபடுதல்
3. சார்க் அங்கத்துவநாடுகளின் கொடுப்பனவு மற்றும் தீர்ப்பனவு முறையைப் பன்னாட்டு நியமங்களுக்கும் சிறந்த நடைமுறை களுக்குரியவாறு தரமுயர்த் தல்.

சார்க் கொடுப்பனவுகள் சபையின் 3ஆவது கூட்டம் 2008 செப்ரெம்பர் 29இல் கொழும்பில் நடைபெற்றது. இதற்கான செய்தித் திரட்டு வெளியிடப்பட்டது. அத்துடன் இதற்கான இணையத்தளமும் உருவாக்கப்பட்டது.

**கொடுப்பனவு முறைமைக்கான கொள்கை மற்றும் மேற்பார்வை**

மத்திய வங்கியின் கொடுப்பனவு மற்றும் தீர்ப்பனவுத் திணைக்களம் இடர்நேர்வுகளை இயன்றளவு குறைத்துக்கொள்ள வேண்டும் என்பதில் கூடியளவு கவனம் செலுத்தி வருகின்றது. இந்தத் திணைக்களத்தின் முக்கியமான பிரிவாகக் கொள்கை மற்றும் மேற்பார்வைப் பிரிவு செயற்பட்டு வருகின்றது. இப்பிரிவானது உரிமம்பெற்ற வர்த்தக வங்கிகள் (22), முதனிலை வணிகர்கள் (03) ஆகியோரின் வியாபாரத்திட்டங்கள், அனர்த்த மீட்பு ஏற்பாடுகள் என்பவற்றைப் பின்வரும் நிறுவன முறைமைகளின் உதவியுடன் மேற்கொண்டிருந்தது. இந்த நிறுவனங்கள் மத்திய வங்கியின்

- மேற்பார்வைத்திணைக்களம்
- தகவல் தொழில்நுட்பத் திணைக்களம்
- பொதுப்படுகடன் திணைக்களம்

என்பனவாகும்.

வர்த்தக வங்கிகளின் தடங்கலற்ற தொழிற்பாடுகளுக்கு உதவும் வகையிற் காசோலை தொடர்பான தீர்ப்பனவுகள் தொடர்பான நடைமுறைசார்ந்த பல கொள்கைகள் முன்னெடுக் கப்பட்டு வருகின்றன.

கொடுப்பனவு அட்டைகள் தொடர்பான தீர்ப்பனவுகளிலும் சிறப்பான செயற்பாடுகளை உறுதிப்படுத்துவதற்கு உதவக்கூடிய ஒழுங்கு விதிகள் மற்றும் பணிப்புரைகள் பற்றி அதிக கவனம் செலுத்தப்பட்டது.

பங்கேற்பாளர்களுக்குப் பாதுகாப்பானதும், செலவு குறைந்ததுமான சுவிப்ற் இணைப்பை வழங்குவதிலும் கவனம் செலுத்தப்பட்டுள்ளது.

**முடிவுரை**

இலங்கையின் பணச்சந்தை, மூலதனச் சந்தை, அந்நியச் செலாவணிச் சந்தை என்பவற்றின் கொடுப்பனவு மற்றும் தீர்ப்பனவு முறைகளின் விரைவு, நம்பகம், வினைத்திறன் என்பன உறுதிப்படுத்தப்படும் போது தான் இலங்கையின் நாணயமுறைமை வளர்ச்சி யடைய முடியும். நாணயமுறை விளைதிறனுடை யதாகச் செயற்பட்டாற்றான் இலங்கைப் பொருளாதாரம் வளர்ச்சியடையும். இந்த நோக்கிற்றான் இலங்கை மத்திய வங்கியின் கொடுப்பனவுகள் மற்றும் தீர்ப்பனவுகள் தொடர்பான தொழிற்பாடுகள் முக்கியமானவை.

# திருமுருகாற்றுப்படையும் கந்தபுராணமும் காட்டும் முருகநெறி

டாக்டர் மா. வேதநாதன் M.A., Ph.D.,
தலைவர், இந்துநாகரிகத்துறை,
யாழ் பல்கலைக்கழகம்.



முருகவணக்கம் மிகவும் தொண்மை வாய்ந்தது. தமிழ் நாட்டில் முருக வழிபாடு சிறப்புற்றிருந்ததை திருமுருகாற்றுப்படை, கந்த புராணம் ஆகிய சைவத்தமிழிலக்கியங்கள் மூலம் நன்கறிய முடிகிறது. பதினொராந் திருமுறையுள் ஒன்றாக விளங்கும் திருமுருகாற்றுப்படையானது. முன்னூற்றுப் பதினேழு அடிகளைக் கொண்டு ஆசிரியப் பாவால் அமைந்து விளங்குகின்றது. இந்நூல் முருக நெறிக்குரிய தொன்மைவாய்ந்த தமிழ்த் தோத்திர நூலாகவும், பழமை வாய்ந்த பக்திப் பனுவலாகவும் காணப்படுகின்றது. சைவத்தமிழ் பேரிலக்கியங்களுள் தனிச்சிறப்புடன் விளங்கும் கந்தபுராணமானது, ஆறுகாண்டங்களில் பத்தாயிரத்து முந்நூற்று நாற்பத்தைந்து விருத்தப்பாக்களில் கந்தன் பெருமைகளை மட்டுமன்றிச் சிவபரத்துவத்தையும் சிறப்பாகச் சித்திரிக்கின்றது. இவ்விரு நூல்களும் முருக நெறியை விளக்கும் தமிழ் இலக்கியங்களாகக் காணப்படினும் இவை எழுந்த காலப்பகுதிகள் வெவ்வேறானவை என்பதும், பல நூற்றாண்டுகள் இடைவெளியுடையவை என்பதும் குறிப்பிடத்தக்க அம்சமாகும்.

இவ்வாய்வுக்கட்டுரையானது இவ்விரு இலக்கியங்களிலும் ஒப்புமையாகக் காணப்படுகின்ற முருகனின் தோற்றம் முருகனிடம் முழுமுதற்தன்மை, முருகனின் திருவுருவ வர்ணனை, முருகவடிவம், முருகன் உறையும் இடங்கள், முருகநாமங்கள், முருகவழிபாட்டு முறைகள், முருகவழிபாட்டின் பயன் என்பவற்றை ஆராய்வ தாக அமைகின்றது.

### முருகன் என்ற சொல்

'முருகன்' என்ற சொல்லுக்கு 'முருகை' உடையவன் என்பது பொருளாகும். 'முருக' என்ற சொல் 'அன்' என்னும் ஆண்பால் விகுதி பெற்ற 'முருகன்' என்றாயிற்று. திருமுருகாற்றுப் படை முருகு என்ற சொல்லை முருகனுக்குரிய தாகக் குறிப்பிடுகின்றது. 'முருகு' என்ற சொல்லுக்கு அழகு, இளமை, நறுமணம், தெய்வத்தன்மை எனப் பலபொருள்கள் உள்ளன. திருமுருகாற்றுப்படையானது. முருகனை நீங்காத அழகுடையவனாகவும், மாறாத இளமையுடையவனாகவும், நறுமணம் கமழ்கின்றவனாகவும், தெய்வத்தன்மை வாய்ந்தவனாகவும் வர்னிக்கின்றது. 'முருக' திரு. 269) என்ற மூன்றெழுத்து முருகக் கடவுளின் பெரும்பெயர் எனத் திருமுருகாற்றுப்படை குறிப்பிடுகின்றது. 'முருகன்' என்ற பெயர் கந்தபுராணத்தின் பல இடங்களிற் காணப்படுவதுடன், கந்தனும் முருகனும் ஒருவரே என்பதைக் குறிக்கும் 'கந்தனாம் முருகன்' (4:2:5) என்ற பெயரையும் அந்நூல் குறிப்பிடுகின்றது. மேலும் கந்தனையும் முருகனையும் இணைத்து 'கந்த முருகன்' (6 : 24

: 114) என்ற பெயரையும் அந்நூல் இயம்புகின்றது. இவ் வகையில் கந்தமுருக இணைப்பைச் சுட்டி நிற்கும் சைவ இலக்கியமாக கந்தபுராணத்தைக் கொள்ள முடியும்.

**முருகனின் தோற்றம்**

ஆறுமுகம் கொண்ட முக்கண்ணனுடைய நெற்றிக் கண்ணாகிய அனற்கண்ணிலே தோன்றிய ஆறு அனற் பொறிகளை அனற்கடவுளாகிய அக்கினி தன் அங்கையில் ஏற்றுச் சென்று சரவணப் பொய்கையில் சேர்த்தபோது அருந்ததி ஒழிந்த ஆறு இருடிபத்தினியரும் அந்த ஆறு பொறிகளிலிருந்தும் தோன்றிய ஆறு குழந்தைகளையும் தாமே பெற்ற தாயாராகக் கருதிப் போற்றி வளர்த்தவர் என்பதையே

*'நெடும் பெருஞ்சிமைத்து நீலப் பைஞ்சுனை*
*ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப*
*அறுவர் பயந்த ஆறு அமர் செல்வ'*

என்றும் வருதலால் அறியப்படுகிறது. உலகமக்கள் எல்லோரும் உய்யும் பொருட்டே முருகன் தோன்றினார் என்பது திருமுருகாற்றுப் படையில் "உலகம் உவப்ப" என்றும், கந்த புராணத்தில் "உதித்தனன் உலகம் உய்ய" என்ற திருமுருகாற்றுப்படை வரிகள் (253–255) புலப்படுத்துவதாக அறிஞர் கருதுவர். (துரை அரங்கசாமி (1972:146) கந்தபுராணமும் சிவபெருமானுடைய ஆறு திருமுகங்களிலும் உள்ள நெற்றிக்கைகளிலிருந்து தோன்றிய அக்கினிப் பொறிகளை வாயுவும் அக்கினியும் கங்கையில் விட்டதாகவும், அவற்றைக் கங்கா தேவி சரவணப்பொய்கையில் சேர்த்ததாகவும் அந்த ஆறு பொறிகளும் ஆறு குழந்தைகளாக சரவணப் பொய்கையில் விளங்கியபோது ஆறு கார்த்திகை மாதர் அக்குழந்தைகளுக்கு முலைப்பாலூட்டி வளர்த்ததாகவும் குறிப்பிடுவதும் (1 : 11 : 43–91) அச்சோதிப் பிழம்பே கருணைகூர் முகங்களாறும், கரங்கள் பன்னிரண்டுங் கொண்டு திருமுருகனாக உதித்ததாகவும் கூறப்படுவதும் (1 : 11 : 92) ஒப்புநோக்கற் பாலதாகும். முருகன் சிவபெருமானுடைய நெற்றிக்கண்களிலிருந்து தோன்றிய செய்தி கந்தபுராணத்தில் மிகத்தெளிவாகவும், திருமுருகாற்றுப்படையில் ஊகித்துமே அறியமுடிகின்றதெனலாம்.

**முருகனின் முழுமுதற்றன்மை**

திருமுருகாற்றுப்படை முருகனின் முழுமுதற்றன்மையை மட்டும் விவரிக்கும் நூலாக விளங்குகின்றது. ஆனால் கந்தபுராணமானது, முருகனின் முழுமுதற்றன்மையைச் சிறப்பாகச் சித்தரிக்கும் நூலாக மட்டுமன்றி சிவனின் பரம்பொருட் தன்மையை நன்கு எடுத்துக் காட்டும் சமயத்தத்துவ இலக்கிய மாகவும் காணப்படுகின்றது. பிரமனுக்கு ஏற்பட்ட சாபத்தை நீக்குவான் வேண்டி திருமாலும், சிவபெருமானும், இந்திரனும் பிறரும் முருகனைக் காண வந்தனர். (148–174) என்ற திருமருகாற்றுப்படைக் குறிப்பானது முருகனின் முழுமுதற்றன்மையை புலப்படுத்தி நிற்கின்றது. இவ்வாறே கந்தபுராணத்திலும் பிரமனைச் சிறையிலிருந்து விடுவிப்பதற்காக தேவர்களுடன் சிவனே கந்தனிடம் வந்ததாகக் கூறப் பெற்றிருப்பது (1 : 17 : 23) ஒப்புநோக்கற் பாலதாகும். கந்தபுராணத்தின் அயனைச் சிறை நீக்குபடலம் (1: 17 ) இதனையே விபரிக்கின்றது.

**முருகனின் திருவுருவ வர்ணனை**

முருகனின் திருவுருவ வர்ணனையைச் சித்தரிப்பதில் திருமுருகாற்றுப்படையும், கந்தபுராணமும் பல நிலைகளில் ஒப்புமையுள்ளவையாக விளங்குகின்றன.

**முருக வடிவம்**

முருக வடிவங்களுள் ஆறுமுகங்களும் (103) பன்னிரண்டு கைகளும் (118) உடைய திருமுருகனின் வடிவத்தையே திருமுருகாற்றுப் படை சிறப்பாகக் குறிப்பிடுகின்றது. கந்த புராணத்தில் முருகனின் பல திருக்கோலங்கள் கூறப்பெற்றிருப்பினும் முகங்களாறும், கரங்கள் பன்னிரண்டுமுடைய முருகனின் திருக்கோலமே சிறப்பாகக் கூறப்பெற்றிருப்பது குறிப்பிடற் பாலதாகும். இத்திருக்கோலத்திலேயே முருகன் சூரனுடன் யுத்தம் புரிந்ததாகக் கந்தபுராணம் குறிப்பிடுகின்றது. (4 : 13 : 46) திருமுருகாற்றுப் படை கூறும் முருகன் கைகளில் காணப்படும் அங்குசம், வேல், மனி (110–115) என்பன கந்தபுராணம் காட்டும் ஆறுமுகனின் கைகளிலும் (3 :10:4) இடம் பெற்றிருப்பது ஒப்புநோக்கற்பாலதாகும்.

**முருகனின் ஒளிவடிவம்**

முருகனைத் திருமுருகாற்றுப்படை பிரகாசிக்கின்ற சூரியனின் பேரொலி வடிவமுடையவனாகச் சித்திரிகின்றது. இதனை,

*'உலகுமுவப்ப வலவேர்பு திரிதரு*
*பலர்புகழ்ஞாயிறு கடற்கண்டாஅங்*
*கோவற விமைக்கும் சேண் விளங்கவிரொளி'*
(திருமு. 1-3)

என்ற வரிகளாலறியலாம். சோதிப்பிளம்பே கந்தனாக உதித்தனன் (1 : 11 : 92) என்று கந்தபுராணம் குறிப்பிடுவது ஒப்புநோக்கற் பாலதாகும். கந்தபுராணம் முருகனைச் சோதி (1: 14 : 82) என்றும் குறிப்பிடுவது நோக்கற் பாலதாகும்.

**முருகனின் நிறமும் ஆடையும்**

முருகன் செந்நிறமுடையவன், சிவந்த ஆடைதரித்திருப்பவன் என்பதைத் திருமுருகாற்றுப்படை 'செய்யன் சிவந்தவாடையன்' (திருமு. 206) எனக் கூறப்படுகிறது. கந்த புராணமும் முருகனை 'செஞ்சுடர் மேனி வள்ளல்' )4 : 12 : 453) என்றும் 'செய்யவன்' (1 : 24 : 65) செஞ்செவ்வேள் (5 : 2 : 203) என்று கூறுகின் றமை ஒப்புநோக்கற்பாலதாகும்.

**முருகனின் வாகனம்**

பண்டைக் காலத்தில் முருகனுக்குரிய வாகனங்களாக களிறு, ஆடு, மயில் என்பன விளங்கியதை "கால் கிளர்ந்தன்ன வேழம் மேல்கொண்டு' 'தகரன்' 'மஞ்ஞையன்' என்ற திருமுருகாற்றுப்படை வரிகளால் அறிய முடிகின்றது. கந்தபுராணத்தில் முருகனின் வாகனமாகக்களிறு குறிப்படப்படவில்லை யாயினும் மயில், ஆடு என்பவற்றை கந்தன் வாகனமாகக் கொண்டவன் என்பதைக் கந்தபுராணம் 'புது மயிலூர்பரன்' (அவை. 13) 'மேடமிசை ஊர்பரன்' (4 : 13 : 198) என மொழிகின்றது. முருகன் ஆட்டுக்கிடாவை வாகனமாகக் கொண்ட வரலாற்றைக் கூற எழுந்ததே கந்தபுராணத்தின் தகரேறுபடல மாகும். (1 : 15) சுவாமிமலை முருகனுக்கு யானையும், திருச்செந்தூர் முருகனுக்கும், சிக்கல் சிங்காரவேலவனுக்கும் ஆடும் வாகனமாக விளங்குகின்றமை குறிப்பிடற் பாலதாகும்.

**முருகனின் கொடி**

முருகனுக்கு கோழியும், மயிலும் கொடியாக விளங்கியதை 'கோழி யோங்கிய வென்றடு விறற்கொடி' (38) 'வாரணக் கொடியொடு வயிற்படநிற்கு' (219) 'பல் பொறிமஞ்சை வெல் கொடியதவ' (112). 'ஆண்டலைக் கொடியொடு மன்னி அமைவர' (227), 'சேவலங்கொடி' (210–211) என்ற

திருமுருகாற்றுப்படை வரிகள் விளக்கி நிற்கின்றன. கந்தபுராணமும் முருகன் கோழிக் கொடியுடையவன் என்பதை 'ஆண்டலை உயர்ந்தவன்' (5 : 2 : 7) 'சேவலை உயரிய தேவநாயகன்' (5 : 1 : 32), என்ற வரிகளால் குறித்து நிற்கின்றமை ஒப்புநோக்கற் பாலதாகும்.

### முருகனின் மாலை

முருகன் வெட்சிமாலையினை அணிந்திருந்தானெப்தை "செச்சைக் – கன்னியன்" (208) எனத் திருமுருகாற்றுப்படை மொழிகின்றது. கந்தபுராணமும் முருகனை 'செச்சையுஞ்சூடிய குமர' (1 : 14 : 69), 'செச்சை மௌலியான்' (6 : 24 : 214) என்று கூறுவது ஒப்புநோக்கற்பாலதாகும்.

### முருகனின் ஆறுபடைவீடுகள்

தமிழ்நாட்டில் முருகன் கோயில் கொண்டு விளங்கும் முக்கிய ஆறு முருகத்திருத் தலங்களை 'ஆறுபடைவீடுகள்' என அழைப்பது தொன்றுதொட்டு இன்றுவரை நிலவும் சைவ சமயமரபாகும். திருமுருகாற்றுப்படையான திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருஆவிநன்குடி, திருஏரகம், குன்றுதோரிடல், பழமுதிர்சோலை என்ற ஆறு இடங்களில் முருகன் எழுந்தருளியிருந்து திருவருள் பாலிப்பதை வரிசைப்படுத்தி விவரிப்பதாக அமைந்து விளங்குகின்றது. திருமுரு காற்றுப்படை கூறும் வரிசை ஒழுங்குமுறை யிலேயே முருகன் வீற்றிருக்கும் சிறப்பினை 'திருப்பரங்குன்றமர் சேயைப் போற்றுவோம்' என்றும் (12), 'சீரலைவாய் வருசேயைப் போற்றுவோம்' என்றும் (13), ஆவினன் குடிவரும்மலற் போற்றுவாம்' (14), என்றும் 'ஏரகத் தறு முகனடிக ளேத்துவாம்' (15) என்றும் 'குன்று தொறாடிய குமரற் போற்றுவாம்' (13) என்றும் பழமுதிர்ச்சோலையும் பகவற் போற்றுவாம்' (17)என்றும், கந்தபுராணத்தில் தனித்தனிப் பாடல்கள் வருவது ஒப்புநோக்கற் பாலதாகவுள்ளது. முருகன் உறையும் மேற்குறிப் பிட்ட ஆறு தலங்கங்களையே 'ஆறுபடை வீடுகள்' என அழைப்பர். முருகனின் இந்த ஆறுபடை வீடுகளை அருணகிரிநாதரும் குறிப்பிடுகின்றார். முருகன் போர் புரிவதற்குத் தங்கியிருந்த போர்ப்பாசறைகளே ஆறுபடைவீடு எனவும், முருகனை வழிபடச் செல்வோருக்கு வழிகூற அவர்களை ஆற்றுப்படுத்தி அனுப்புத லாகிய ஆற்றுப்படையினையே ஆறுபடை வீடுகள் எனவும் அறிஞர் கருதுவர் (Kandaswamy 1997 : 148). ஆறுபடைவீடுகள் எவை என்பதில் மாறுபட்ட கருத்துகளும் நிலவிவருகின்றன. இலங்கையிலுள்ள கதிர்காமத்தையும் முருகனின் ஒரு படை வீடாகக் கொள்ளும் மரபுண்டு. கஞ்சிபுரத்தி லுள்ள குமரகோட்டத்து முருகனும் மேலே குறிப்பிடப்பட்டுள்ள படைவீடுகளில் உறைவ தாகக் கூறும் கந்தபுராண திருநகரப்படலம் (106) குறிப்பானது. ஆறுபடைவீடுகளின் தனிச் சிறப்பை எடுத்துக் காட்டுவதாகவுள்ளது. 'தணிகை வெற்பு' என்ற பெயர் முதன்முதலில் கந்தபுராணத்திலேயே காணப்படுகின்ற தெனலாம். எமது சரீரத்தில் இருக்கின்ற ஆறு ஆதாரங்களுக்கு ஒப்பவே மண்ணுலகில் முருகனுக்கு ஆறுபடைவீடுகள் அமைந்து விளங்குகின்றன எனச் சிலர் குறிப்பிடு கின்றனர்.

### மலையுறை கடவுள்

முருகன் மலையும் மலைசார்ந்த நிலமுமாகிய குறிஞ்சிநிலக் கடவுளாக விளங்கியதைத் தொல்காப்பியம் (பொருள். அகம். சூ. 5) குறிப்பிடுகின்றது. இவ்வாறே

திருமுருகாற்றுப்படையும், கந்தபுராணமும் முருகன் மலையுறை கடவுளாக விளங்குவதை விளக்கி நிற்கின்றன. இவ்விரு நூல்கள் கூறும் திருப்பரங்குன்றம், திருவேரகம், திருவாவினன்குடி, குன்றுதோறிடல் என்ற படைவீடுகள் மலையுறை கடவுளாக முருகன், விளங்குவதைக் காட்டி நிற்கின்றன. "குன்று தோறாடலும் நின்றதன் பண்பே" (217) 'விண்பொருநெடுவரைக் குறிஞ்சிக் கிழவ' (267) என்ற திருமுருகாற்றுப்படைக் குறிப்புகளும், கந்தபுராணம் கூறும் 'குன்றுதோறாடியகுமர' (கடவுள் வாழ்த்து, 16), 'கந்தவரை', (1 : 14 : 126) 'கந்தவெற்பு' (5 : 4 : 1) 'தனிகை மால்வரை', (6 : 24 : 418 – 220) 'வேங்கடகிரி' (4 : 4 : 163 ; 1 : 23 : 6) ஆகிய குறிப்புகளும் முருகன் மலையுறை கடவுள் என்பதை உறுதிப்படுத்துகின்றன. திருத்தணிகை முதலான நிலவுலகத்திலுள்ள மலைகளில் முருகன் உறைதலை திருநகரப் படலம் (பாடல் 106) குறிப்பிடுகின்றது. அத்துடன் முருகன் மலைமீது கோயில்கொண்டு விளங்கும் சிறப்பினை கந்தபுராணத்தில் உற்பத்திக் காண்டத்திலுள்ள தேவகிரிப்படலம் (1 : 21 ) தனியாகச் சித்தரிக்கின்றமை குறிப்பிடற் பாலதாகும்.

**முருகன் உறையும்பிற இடங்கள்**

முருகன் 'ஆறுவீடுகள்' மலைகள் என்பதற்றில் மட்டுமன்றி, இயற்கை எழில்நிறைந்த இடங்களிலெல்லாம் இருக்கின்றார் என நக்கீரர் கூறுகின்றார். காட்டிலும், சோலையிலும், அழகுபொருந்திய ஆற்றிடைக்குறையிலும், ஆறுகளிலும், குளங்களிலும், வேறுபல ஊர்களிலும், நாற்சந்தியிலும், முச்சந்தி ஐஞ்சந்தியும், புதுமையாகிய பூக்களையுடைய கடம்பமரத்திலும், ஊருக்கு நடுவே எல்லாரு மிருக்கும் மரத்தடியிலும், அம்பலத்திலும், ஆத்தீண்டுக்கற்றியுடைய இடத்திலும் முருகன் அமர்ந்துறைவானென்பது திருமுருகாற்றுப் படையில் பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

*'காடுங்காவும் கவின்பெறு துருத்தியும்*
*யாறுங்குழலும் வேறுபல்வைப்பும்*
*சதுக்கமுஞ் சந்தியும் புதுப்பூங்கடம்பும்*
*மன்றமும் பொதியிலுங் கந்துடை நிலையிலும்"*

(திருமு. 223–226) என வருகின்றது.

இம்மாதிரியே கந்தபுராணமும் முருகன் உலவுகின்ற இடங்களை

*"குளந்திஞல வும்நதி குறைந்திடு துருத்திக்*
*கனத்திஞலவும் நிரைகொள் கந்துடை நிலைத்தாந்*
*தளத்திஞல வும்பனவர் சாலையுல வும்..."*

(1:14:4)

என நக்கீரரின் திருமுருகாற்றுப்படை நெறியில் குறிப்டுவது ஒப்புநோக்கற் பாலதாகும்.

**முருகனின் பெற்றோர்**

முருகன் சிவனின் நெற்றிக் கண்களிலிருந்து தோன்றியதாகக் கூறப் பெறினும் முருகன் தாய்த்தெய்வத்தினின்றும் தோன்றிய செய்தியை திருமுருகாற்றுப்படை முருகனை 'மலைமகள் மகனே' (257) 'கொற்றவை சிறுவ' (258) 'பழையோள் குழவி' (259), 'அறுவர் பயந்த அறுமர் செல்வ' (255) எனக் குறிப்பிடுகின்றது. கந்தபுராணமும் கந்தவை 'இமையத்தவள் சேய்' (4 : 13 : 31 ) 'உமைய மகன் (1 : 11 :99), 'கவுரி தன்குமரன்' (1: 13 : 21) 'கொற்றவை சிறுவ' (4 : 4 : 398) 'அறுவரை அனையாகப் பெற்றோன்' (3:7:36) எனக் குறிப்பிடுவது ஒப்புநோக்கற் பாலதாகும். மேலும் முருகன் சிவன் மகன் என்பதைத் திருமுருகாற்றுப்படை ஓரிடத்தில் மட்டும் 'ஆலமர் கடவுட்புதல்வ' (256) எனக்

குறிப்பிடுகின்றது. கந்தபுராணத்தில் முருகன் சிவனுடைய மகன் என்ற குறிப்பு நூற்றி முப்பத்திமூன்று இடங்களிலும், முருகன் உமை மகன் என்ற செய்தி பதினான்கு இடங்களிலும் காணப்படுகின்றன. (இராமலிங்கம், 1988 : 327–332) இவ்வாறு சக்தியினதும் சிவனது மகனாக இவ்விரு இலக்கியங்களும் முருகனைக் குறிப்பிடுகின்றமை ஒப்பு நோக்கற்பாலதாகும்.

**முருகனின் மனைவியர்**

தெய்வயானையும், வள்ளியம்மையும் முருகனின் மனைவியர் என்பதை திரு முருகாற்றுப்படையும், கந்தபுராணமும் குறிப்பிடு கின்றன. தெய்வயானையின் திருமணத்தை 'மறுஇல் கற்பின்வாள் நுதல் கணவன்' (6) என்றும், வள்ளியம்மையின் திருமணத்தை 'வள்ளியொடு நகை அமர்ந்தன்றே' (102) எனவும் திருமுருகாற்றுப்படை கூறுகின்றது. இவ்விரு திருமணங்களும் முறையே திருப்பரக் குன்றத்தி லும், திருச்சீரலை வாயிலும் நிகழ்ந்ததாக திருமுருகாற்றுப்படை குறிப்பிடுகின்றது. முருகன் தெய்வயானையின் கணவன் என்பதை 'யானை நாமம் மின்னாயகன்' (6 : 24 : 265) என்றும், முருகன் வள்ளிமணாளன் என்பதை 'வேடர் நங்கை தன்னாயகன்' (6 : 24 : 265) என்றும் கந்தபுராணம் கூறுவது ஒப்புநோக்கற் பாலதாகும். மேலும் கந்தபுராணத்திலுள்ள 'தெய்வயானையம்மை திருமணப்படலமும் (5 : 2), வள்ளியம்மை திருமணப்படலமும் (6: 24) இவ்விரு திருமனங்கள் பற்றி விரிவாக விளக்கி நிற்கின்றன. முருகனின் வள்ளி திருமணம் தமிழ் பண்பாட்டிற்கு ஓர் உரைக்கல்லாக இன்றும் கொள்ளத்தக்கது.

**வேல் வணக்கம்**

வேல் வணக்கம் மிகவும் தொன்மை வாய்ந்தது. பண்டைத் தமிழர் முருகனை வேல் வடிவத்தில் வணங்கினார். சிலப்பதிகாரம் கூறும் 'வேற்கோட்டம்' (சிலம்பு 9 : 9 –13) வேலுக்குரிய கோயிலாகும். வேல் முருகனின் தெய்வீகக் குறியீடு எனலாம். முருகன் சூரனை அழித்த கருணைச் செயல்கள் வேலின் வெற்றியாக திருமுருகாற்றுப்படை குறிப்பிடுகின்றது. முருகன் தனது வேலினால் சூரனைத் தடிந் செயலையே 'சூர முதல் தடிந்த சுடர் இலைநெடுவேல்' (46) எனத் திருமுருகாற்றுப் படை மொழிகின்றது. முருகனுடைய வேலினை "வேல்" (265), 'செவ்வேல்' (61), 'எஃகு' (111), 'நெடுவேல்' (273, 46) என்ற பெயர்களினாலும் நக்கீரர் குறிப்பிடுகின்றார். வேலின் வெற்றிச் சிறப்பை

*"வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட*
*தீரவேல் செவ்வேல் திருக்கைவேல் - வாரி*
*குளித்தவேல் கொற்றைவேல் சூர்மார்பும் குன்றும்*
*துளைத்தவேல் உண்டே துணை'*

எனத் திருமுருகாற்றுப்படை வெண்பாவும் (3) கூறுகின்றமை நோக்கற்பாலதாகும். கந்த புராணமும், வேலின் முதன்மையைப் புலப் படுத்தும் வகையில் 'எப்படைக்கும் நாயகமானதொரு தனிச்சுடர் நெடுவேல்' (1: 18 : 38) என மொழிகின்றது. மேலும் வேல் (6: 24 : 265), 'செவ்வேல்' (4 : 11 : 13) 'எஃகு' (1 :21 :10) 'சுடர்வேல்' (4 :13 : 374) 'நெடுவேல்' (4 : 13 : 256, 'கொற்றவேல்' (3 : 12 : 49), 'வீரவேல்' (4 : 2 : 19) என்ற பெயர்கள் கந்தபுராணத்திலும் காணப்படுகின்றமை ஒப்புநோக்கற்பாலதாகும். கந்தபுராணத்தில் வேல் முருகனுடைய ஆயுதமாக மட்டுமன்றி, முருகனை வடிவமாகவே கூறப்பெற்றிருப்பது முக்கிய செய்தியாகும். 'வேற்கடவுள்' (6 : 23 : 126), 'கடவுட் செவ்வேல்' (4 : 13 : 483), 'தெய்வச் செவ்வேல்' (4 : 13 : 482), 'உடம்பிடித் தெய்வம்' (4 : 13 : 487) என்ற கந்தபுராணக் குறிப்புக்கள் வேல்முருக வடிவம் என்பதை நன்கு புலப்படுத்துகின்றன. சிறிய

அளவிலான வேற்கோயில்கள் காணப்படினும், மூலஸ்தானத்தில் வேலைக் கொண்டுள்ள பெரிய அளவிலான வேற்கோயிலாக இன்று யாழ்ப்பாணம் நல்லூர்க் கந்தசாமி கோயில் விளங்குவது குறிப்பிடற்பாலதாகும்.

### போர்க்கடவுள்

பண்டைத் தமிழர் முருகனை ஒரு போர்த் தெய்வமாக வணங்கினர். இதனை 'போர்மிகு பொருந' (276), 'செருவில் ஒருவ' (263). 'பொருளிறல்மன்ன' (263)னில் தானைத்த லைவ' (260) ஆகிய திருமுருகாற்றுப்படை நாமங்கள் புலப்படுத்துகின்றன. கந்தபுராணமும் யுத்தத்தில் வெற்றி பெற்றுத்தரும் போர்க் கடவுளாகவே கந்தனைக் குறிப்பிடுகின்றது. கந்தபுராணம் கூறும் சேனையற் தலைவன்' (5 : 5 : 4) 'வீரவீரன்' (4 : 11 : 15) 'விறல்மிகு அறுமுகன் (1 : 18 : 37 ), 'கொற்றவன்' (5 : 1 : 26) 'விற்புலவ' (4: 13 : 10) ஆகிய பெயர்கள் முருகன் போர்க் கடவுள் என்பதையே சுட்டிநிற்கின்ற எனலாம்.

### சூரனைக் கொன்றமை

முருகன் சூரனைக் கொன்ற செயலினையே, திருமுருகாற்றுப்படை 'சூர்முதல் தடிந்த சுடரிலை நெடுவேல்' (46) எனக் கூறுகின்றது. முருகன் சூரனைத் தடிந்த செய்ல 'சூரபன்மன் வதைப் படலம்' (4 : 13) என்ற ஒருபடலமாகவே கந்தபுராணத்தில் காணப்படுகின்றது. சூரனை 'சூர்' (2 : 12 : 43; 2 : 10:8) என்ற சொல்லினால் கந்தபுராணம் சுட்டுவது இங்கு ஒப்புநோக்கற் பாலதாகும்.

### முருகவழிபாட்டு முறைகள்

முருகன் வேதாகம முறையிலும் அதற்குப் புறம்பான வழிகளிலும் வழிபடப்பட்டதை திருமுருகாற்றுப்படையும் கந்தபுராணமும் குறிப்பிடுகின்றன. முருகனை வேள்வி வேட்டும், உச்சியில் தலைகுவித்தும், திருப்பாதங்களில் வீழ்ந்தும் வணங்கியதை திருமுருகாற்றுப்படை குறிப்பிடுகிறது. சிறிய தினை அரிசியை மலரொடு கலந்து வைத்தும் ஆட்டினை அறுத்தும் கோழிக் கொடியுடன் முருகனை வரிசைப்பட நிறுத்தியும் முருகனை வழிபடப்பட்டனரென்பதை

*'சிறுதினை மலரொடு விரைஇ மறிஅறுத்து*
*வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ'*

(திரு. மு. 218–219)

என்ற திருமுருகாற்றுப்படை வரிகளாலறியலாம். மேலும் மிகுந்த வலிமை பொருந்திய கால்களையுடைய கொழுத்த ஆட்டுக்கடாவை வெட்டி அதன் குருதியில் நுண்ணிய வெண்மையான அரிசியைக் கலந்து அவற்றைப் பிரப்பங் கடைகளில் பலியுணவாகப் படையல் செய்து முருகனை வழிபட்ட செய்தியை திருமுருகாற்றுப் படை

*'மதவலி நிலை இயமாத்தாள் கொழுவிடைக்*
*குருதியொடு விரைஇத் தூவெள்ளரிசி*
*சில் பலிச் செய்து பல் பிரப்புஇரீஇச்'*

(திருமு.232–234)

எனக் குறிப்பிடுகின்றது. கந்தபுராணமும் முருகனுக்குப் பலியை இட்டு வெண்ணிறம் பொருந்திய அரிசி, மஞ்சள்மா, மலர் ஆகியவைகளைத் தூவி ஆட்டைவெட்டி முருகனுக்கு நடத்திய விழாவினைக்

*'காலை யதற்பின் கடவுட்பலி செலுத்தி*
*வாலரிசி மஞ்சள் மலர்சிந்தி மறியறுத்துக்*
*கோல நெடுவேற் குமரன் விழாக் கொண்டாடி'*

(6 : 24 : 40).

எனக் கூறுவது ஒப்புநோக்கற்பாலதாகும்.

### வேலன் வெறியாட்டம்

முருகவழிபாட்டில் இடம்பெறும் 'வேலன் வெறியாட்டினை'
இவ்விருசால்களும் குறிப்பிடுகின்றன. முருகன் வேலன் மேல்வந்து தோன்றியாடும் வேலன் / வெறியாட்டு வழிபாட்டையே திருமுருகாற்றுப் படை,

*'வேலன் தைஇய வெறி அயர்களதும்'*
(திருமு. 222)

எனக் கூறுகின்றது. கந்தபுராணமும், 'முருகனை முற்கொண்டு நிகழ்த்தப்படும் வெறியாட்டத்தை' 'வேலனை முற்கொண்டு வெறியாட்டு நேர்வித்தான்' (6 : 24 : 40) எனக் கூறுவது ஒப்புநோக்கற்பாலதாகும்.

### குரவைக் கூத்து

முருகவழிபாட்டில் குரவைக்கூத்து சிறப்புற்றிருந்ததை திருமுருகாற்றுப்படையும், கந்தபுராணமும் புலப்படுத்துகின்றன. குறவர்கள் தமது சுற்றத்தாருடன் மகிழ்ந்திருந்து குரவைக் கூத்தாடினர் என்பதை 'குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து தொண்டகச் சிறுபறைக் குரவை அயர' (196–197) எனத் திருமுருகாற்றுப்படைக் குறிப்பிடுகின்றது. கந்தபுராணமும் பெரிய கால்களையுடைய கடலை வெட்டி தனது சுற்றத்தோடு இனிதாக விருந்தருந்தி தொண்டகப்பறை ஒலிக்க குரவைக் கூத்தாடி முருகனை நம்பியரசன் வழிபட்ட செய்தியை

*'... தாட் கொழுவிடையைக்*
*கெண்டி யொருதன் கிளையோ டினி தருந்தித்*
*தொண்டகம தார்ப்பக குரவைமுறை தூங்குவித்தான்'* (6:24:39)

எனக் கூறுவது ஒப்புநோக்கற்பாலதாகும்.

### முருக நாமங்கள்

முருகனது தெய்வீகப் பெருமைகளை விவரிக்கும் முருக நாமங்களும் முருக சொற்றொடர்களுமாக திருமுருகாற்றுப்படை "அறுவர் பயந்த ஆறமர் செல்வ, கடவுட் புதல்வள், மலைமகள் மகனே, மாற்றோர் சுற்றே, கொற்றவை சிறுவ, பழையோன் குழவி, தானைத்தலைவ, மாலை மார்ப, நூல்அறி புலவ, செருவில் ஒருவ, பொருவிறல்மன்ன, அந்தணர் வெறுக்கை, அறிந்தோர் சொல்மலை, மங்கையர்கலை, மைந்தர்ஏனே, பெருஞ்செல்வ, குறிஞ்சிக்கிழவ, புலவர்ஏறே, அரும்பெறல்மரபிற் பெரும் பெயர் முருக, இசைபேரான, சேஎய், நெடுவேஎன், பெரும்பெயர்இயவுள், மதவலி, போர்மிகு பொருந, குரிசில் (255–276) என்பவற்றைக் குறிப்பிடுகின்றது. கந்தபுராணம் கூறும் கொற்றவை சிறுவ (4 : 4 : 398) தமிழ்ப் புலவ (4 :12:456), தடக்கை வேலுடை அண்ணல் (3:7:34), சேனையந்தலைவ (5:4:4) செல்வ (4:7:30) மலர்மாலை புனைந்த தந்தை (1: 14 : 82), அலங்கல் மார்ப (4 : 13 : 446) நெடுவேல்முருகன் (4 : 3 : 70) முதலிய நாமங்கள் சிறப்பாக ஒப்புநோக்குதற்குரியவை. நுணுகி நோக்கும் போது கந்தபுராணம் கூறும் முருக நாமங்கள் பலவற்றிற்கு திருமுருகாற்றுப்படையில் வரும் முருக நாமங்கள் அடிப்படையாக உள்ளமை தெளிவாகின்றது.

### முருகனின் மந்திரம்

திருமுருகாற்றுப்படை முருகனுடைய ஆறெழுத்து மந்திரத்தை

*'ஆறெழுத்து அடங்கிய அருமறைக்கேள்வி*
*நாஇயல் மருங்கின் நவிலப்பாடி'*
(திரு. 186–187)

எனக் குறிப்பிடுகின்றது. 'நம. குமாராய' என்பதே ஆறெழுத்து மந்திரம் என நச்சினார்க் கினியர் குறிப்பிடுகின்றார். (துரை அரங்கசாமி: 1972 : 175) 'முருக' (269) என்ற மூன்றெழுத்தை பெரும் பெயர் எனத் திருமுருகாற்றுப்படை கூறுவதால் 'முருக' என்பதை முருகனின் மந்திர மந்திரமாகக் கொள்ளலாம். 'முருகன்' என்ற பெயர் கந்தபுராணத்தில் இருபத்தெட்டு இடங்களில் இடம்பெற்றுள்ளமை (இராமலிங்கம் : 1988 : 365) ஒப்புநோக்கற் பாலதாகும். 'சரவணபவ' என்பதை முருகனுக்குரிய ஆறெழுத்து மந்திரமாகக் கொள்வதற்கும் இவ்விரு இலக்கியங்களும் துணைபுரிகின்றன.

**வழிபாட்டின் பயன்**

முருகவழிபாட்டினால் பெறலரும் பரிசாகிய *முக்திப் பேரின்பம்* கிடைக்கும் என்பதைத் திருமுருகாற்றுப்படை,

'இருள்நிற முந்நீர் வளைஇய உலகத்து
ஒரு நீ ஆகித் தோன்ற விழுமிய
பெறவரும் பரிசில் நல் குமதி'
(திருமு. 293–295)

என மொழிதலாலறியலாம். ஆன்மாக்களின் பிறவிப் பிணியை நீக்கி முக்தி கொடுப்பவன் கந்தனே என்பதைக் கந்தபுராணமும்,

'கல்லகங் குனந்த செவ்வேற் கந்தனோர்
தருவதாகி
வல்வியர் கிரியை ஞான வல்லியின்
இளையாய்ச் குழப்
பல்லுயிர்க் கருளைப் பூத்துப் பலநெறி
காய்த்திட்டன்பர்
எல்லவர் தமக்கு முத்தி இருங்கனி
உதவும் என்றும்' (6 : 24 : 258)

எனக் கூறுவது ஒப்புநோக்கற்பாலதாகும்.

**முடிவுரை:**

இவ்வாறாக இவ்விரு இலக்கியங்களிலும் பொதுக் கூறுகளாகக் காணப்படும் முருக நெறி பற்றிய கருத்துக்களை ஒப்புநோக்கும்போது முருகநெறியின் தனிச்சிறப்புகளை அறிந்துகொள்ள முடிவதுடன், திருமுருகாற்றுப் படை கூறும் முருக நெறிமரபில் கந்தபுராணமும் அமைந்து விளங்கும் சிறப்பு நன்கு தெளிவாகின்றது.

(இது ஓர் உண்மைக் கதை அல்ல)

# மலை ஏறும் நதிகள்?

தம்பி இராசலிங்கம்
(அவுஸ்திரேலியா)

அன்று மாலை தொடங்கிய கடும் மழை, சில மணித்தியாலங் களாக பெய்து ஓய்ந்த பின்னர் தொடர்ந்தும் தூறிக்கொண்டு இருந்தது. குளிர் காற்றும் விட்டு விட்டு வீசிக்கொண்டிருந்தது. நேரம் இரவு 10 மணியாகிவிட்டது. ஊர் உறக்கத்திற்கு ஏற்கனவே போய்விட்டிருந்தது.

வஸந் பல நாட்களாக ஓய்வில்லாமல் இன்றுவரை வேலைகள் பல செய்யவேண்டி இருந்தமையால் அவன் பிகக்களைப் படைந்தி ருந்தான். எனவே அவன் தனது உறவினர் களையும், நண்பர்களையும் ஒருவாறு வழி அனுப்பி வைத்துவிட்டு தனது படுக்கை அறைக்குச் சென்று அறையின் பிரகாச மின் விளக்கை அணைத்துவிட்டு, பிரகாசமற்ற மென் விளக்கை ஏற்றிவிட்டு, மனைவியின் வரவை எதிர்பார்த்து இனிய நினைவுகளுடன் தன் கட்டிலில் காத்திருந்தான்.

வஸந்தின் அறைக்கதவு தட்டப்படும் சத்தத்தைத் தொடர்ந்து, தானாகவே கதவைத் திறந்து கொண்டு வஸந்தின் மனைவி "மது" வஸந்தின் படுக்கை அறைக்குள் நுளைந்து கதவை உட்புறமாகத் தாளிடுவதை வஸந் அவதானித்தான். ஆனால் மதுவின் சினேகிதி கள் தான் வஸந்தின் அறைக்கதவைத் தட்டிய பின்பு திறந்து. மதுவை உள்ளே தள்ளி அனுப்பினார்கள். என்பது வஸந்திற்குத் தெரிந்திருக்க ஞாயமில்லை.

கதவை உட்புறமாகத் தாளிட்ட வஸந்தின் மனைவி (மது), அமைதியாக வந்து கட்டிலில் அமர்ந்து, கீழே நிலத்தைப் பார்த்தபடி மௌனமாக இருந்தாள்.

அன்றுதான் அவர்கள் இருவருக்கும் முதலிரவு. அன்று காலையில் தான் இருவருக்கும் திருமணம் நடந்தேறியது. ஆனாலும் மதுவின் முகத்தில் கல்யாணக் களையையோ அல்லது சந்தோஷத்தினையோ வஸந்தினால் காண முடியவில்லை.

வற்றிய குளம் போல மது "உம்" என்று ஏதும் பேசாமல் இருந்தது, பல எதிர்ப்பார்ப்பு களுடன் காத்திருந்த வஸந்திற்கு சங்கடமாக இருந்தது. அதனால் அவனே மதுவிடம் மெதுவாகப் பேசத் தொடங்கினான்.

மது! இங்கே பாரும், ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறீர்? உடம்பிற்கு ஏதும் சுகமில்லையா? என்று கேட்டான். அதற்கு மது "இல்லை" என்று மட்டும் பதில்சொல்லிவிட்டு மீண்டும் அமைதியாகவே இருந்தாள், வஸந் மீண்டும் பேசத் தொடங்கினான். மது, நான் இப்பசொல்வது உமக்கு சினிமாவில் வருவது போல் தோன்றலாம். ஆனாலும் நான் கூற வேண்டியதை இன்று கூறியே ஆகவேண்டும் என்பதனால் கூறுகிறேன் என்று அவன் தனது பேச்சைத் தொடர்ந்தான். இன்றில் இருந்து எமக்கிடையில் ஏதும் ஒளிவுமறைவு இருக்க வேண்டாம். நாம் இறுதிவரை ஒருவருக்

கொருவர் விட்டுக்கொடுத்து அன்பாக இருப் போம். உங்கள் குடும்பம் எங்கள் குடும்பத்திலும் பார்க்க மிக வசதியான குடும்பம் என்றாலும், நான் எக் காலத்திலும் எனது சுயகௌரவத்தை விட்டுக்கொடுக்கமாட்டேன். உனக்காக நானும் எனக்காக நீயும் என்று ஒற்றுமையாக வாழ் வோம். ஒருவருடைய சந்தோஷத்தை ஒருவர் புரிந்து நாங்கள் வாழ்வோம். எங்களுக்கிடையில் என்ன பிரச்சினை என்றாலும் பிரச்சினை யிலுள்ள உண்மையை மனம்விட்டு பேசித் தீர்த்துக்கொள்வோம். அப்படி நாம் ஒருவேளை பிரியவேண்டிய நிலை ஏற்பட்டாலும், பிரச்சினையை மனம் விட்டுப் பேசித் தீர்க்க முயல்வோம். அப்படி தீர்க்கமுடியாதுபோனால், சந்தோஷமாக ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து பிரிந்து செல்வோம். இதுவரையில் எனக்கு யாருடனும் காதல் என்று ஒன்றும் இருந்தது கிடையாது. காதலை நான் எதிர்ப்பவனுமல்ல. இனிமேல்தான் நான் உம்மை காதலிக்க வேண்டும் என்று கூறி மதுவின் முகத்தை உற்று நோக்கி, அவள் கையை மெதுவாகப் பிடித்தான்.

வஸந் இவ்வளவு நேரமும் கூறிய வற்றை கீழே நிலத்தைப் பார்த்தபடியே கேட்டுக்கொண்டிருந்த மது, வஸந் பிடித்த கையை மெதுவாக உதறிவிட்டு, மெதுவாக விம்மத் தொடங்கினாள், விம்மலைக் கேட்ட வஸந், மதுவின் நாடியை தொட்டு உயர்த்திய போது அவளது கண்களில் இருந்து நீர் வடிவதை மங்கல் வெளிச்சத்திலும் அவதானித்தான்.

"ஏன் அழுகிறாய் மது?" என்று வஸந் கேட்டபோது, மது எல்லாவற்றையும் போட்டு உடைத்துவிட்டாள், தான் "நாதன்" என்பவனை உயிருக்குயிராக காதலித்ததாகவும், பெற்றோர் தன்னை பயமுறுத்தி, ஏமாற்றி, ஏதோ மயக்க மருந்து தந்து, உங்களிற்கு என்னை திருமணம் செய்து வைத்துவிட்டார்கள் என்றும், எப்பொழுது நான் தன்னிடம் வந்தாலும், என்னை நாதன் ஏற்பதாகக் கூறியுள்ளார் என்றும் சிறு குழந்தைபோல் கூறி மெதுவாக அழுதாள்.

அழவேண்டாம் மது இப்பொழுது அழுவதனால் ஒரு பிரயோசனமும் இல்லை. உமக்கு விருப்பமில்லாமல் நடந்த இத் திருமணத்தை நான் எனக்கு சாதகமாக எடுக்க விரும்பவில்லை. நீர் விரும்பியவருடன் செல்ல விரும்பினால் நானே உம்மை நாளையே சேர்த்து வைக்கிறேன் என்றும் கூறி, உமக்கு நாதனுடன் சென்று வாழ பூரண சம்மதமா என்று கேட்டான், மது தன் தலையை மேலும் கீழுமாக ஆட்டிவிட்டு மீண்டும் விம்மத் தொடங்கினாள், நாதன் இருக்கும் இடத்தைப்பற்றி மதுவிடம் கேட்ட போது நாதன் வேலை செய்யும் கந்தோர் விலாசம் மட்டும் தன்னிடம் இருப்பதாகவும், ரயிலில் போனால் ஆறு மணித்தியாலங்களில் போய்விடலாம் என்றும் விம்மியவாறு அவள் கூறினாள், சரி மது தயவுசெய்து இப்ப அழ வேண்டாம் இப்ப நீர் கட்டிலில் படுத்துத் தூங்கும் நாளை காலையில் நான் உம்மை நாதனிடம் செல்ல ரயில் ஏற்றிவிடுகிறேன். என்று கூறிவிட்டு, தரையில் ஒரு பாயை விரித்துப் போட்டு அதில் வஸந் படுத்துவிட்டான். ஆனால் அவனால் நித்திரை கொள்ள முடியவில்லை.

மறுநாள் காலை 4.30 மணிக்கு வீட்டிலுள்ள யாருக்கும் தெரியாமல் ஒரு சூட்கேஸில் சில உடுப்புகளுடன் மதுவை தனது காரில் கொண்டுபோய், நாதனிடம் செல்வதற் காக மதுவை ரயில் ஏற்றிவிட்ட பின் வீட்டிற்கு சென்றபோது, ஏனையோர் மதுவைப்பற்றி விசாரிக்க, ராத்திரி மதுவிற்கு அவளின் உற்ற சினேகிதியிடம் இருந்து ஒரு தொலைபேசி அழைப்பு வந்ததாகவும், அவ் உயிர்ச்சினேகிதி தன் கணவர் ஒரு விபத்தில் காலமாகிவிட்டார் என்றும், வேறு யாரும் தன்னருகே துணைக்கு

இல்லையென்றும், அதனால் மதுவை உடனடியாக தன்னிடம் வரும்படி வேதனையுடன் கெஞ்சிக் கேட்டதாகவும், அதனால் நான் மதுவை அவளின் சினேகிதியிடம் செல்வதற்காக ரயில் ஏற்றிவிட்டு வருவதாகவும் பொய் சொன்னான்.

அன்றைய பகல் பொழுது கழிந்து மாலைக் கதிரவன் வர்ணஜாலம் காட்டி கடலினுள் மறைகின்ற மாலை நேரம், முதல்நாள் நடைபெற்ற திருமணத்திற்கு வர முடியாதவர்கள் சிலர் வஸந்தின் வீட்டிற்கு வருகை தந்திருந்தார்கள். அவர்கள் தாங்கள் கொண்டு வந்திருந்த அன்பளிப்புப் பொருட்களை வஸந்திடம் கொடுத்துவிட்டு வஸந்தின் மனைவி மதுவைப் பற்றிக் கேட்டபோது, மது தனது மிக நெருங்கிய சினேகிதியின் கணவர் அகால மரணமடைந்ததனால், அச்சினேகிதி உடனடியாக மதுவை தன்னிடம் வரும்படி போனில் மன்றாடிக் கேட்டதனால், மது அச்சினேகிதியிடம் போய்விட்டார் என்று அதே பொய்யை மீண்டும் வஸந் கூறினான். சிறிது நேரம் வஸந்திடம் உறவினர்கள் கதைத்துவிட்டு அவர்களுக்கு அளிக்கப்பட்ட இரவு உணவை உண்ட பின்னர், எல்லோரும் வஸந்தின் வீட்டின் பின் ஹோலில் தொலைக்காட்சியில் வஸந்தின் சினேகிதன் ஒருவன் எடுத்த வஸந், மது அவர்களின் திருமண வீடியோ படத்தை பார்த்துக் கொண்டு இருக்கிறார்கள். கடிகாரம் எட்டு முறை அடித்து ஓய்கிறது. மழை மீண்டும் இடிமின்னலுடனும், காற்றுடனும் பெய்யத் தொடங்கிவிட்டது.

வீட்டின் அழைப்பு மணியைக் கேட்டு, வீட்டு வாசலுக்கு சென்று வாசல் கதவைத் திறந்த வஸந்திற்கு அதிர்ச்சி மழையில் நனைந்த மது, நிலத்தைப் பார்த்தபடியே கொண்டுபோன அதே சூட்கேசுடன் நிற்கிறாள், கதவை மெதுவாகச் சாத்திக்கொண்டு வஸந்தும் வீட்டிற்கு வெளியே வந்து, நாதனை நீர் சந்திக்க முடியவில்லையா மது? என்று கேட்டான் வஸந்தை ஒரு முறை நிமிர்ந்து பார்த்த மது மீண்டும் கீழே பார்வையைச் செலுத்தியபடி விம்மத் தொடங்கினாள். என்ன நடந்தது? நீர் நாதனை சந்தித்தீரா இல்லையா? என வஸந் சற்று உரக்கக் கேட்டான். சந்தித்தேன் ஆனால் அவர் என்னை ஏற்க மறுத்துவிட்டார். நான் எவ்வளவோ எடுத்துச் சொல்லியும், அணில் கடித்த பழம் தனக்கு வேண்டாம் என்று ... மது தொடர்வதை இடைமறித்த வஸந், இங்கே பார் மது, மேலே எனக்கு ஒன்றும் சொல்ல வேண்டாம் இதற்கு மேல் நான் கேட்பதும் முறையல்ல, நீர் சொல்வதும் அழகல்ல, இதைப்பற்றி எமது வாழ்க்கையில் உம்மை நான் ஒருபோதும் கேட்கமாட்டேன். என்னை நம்பி நீர் திரும்பி என்னிடம் வந்துவிட்டீர் மது, அதுவே எனக்குப் போதும், நீர் உமது மிக நெருங்கிய சினேகிதியின் கணவர் அகால மரணமடைந்த தனால், சினேகிதி அவசரமாக வரும்படி போனில் கேட்டு, சினேகிதியிடம் சென்றுள்ளாய் என்று வீட்டாருக்கு நான் பொய் கூறிஉள்ளேன், சில சொந்தக்காரர்களும், சினேகிதர்களும் வீட்டின் பின் ஹோலில் தொலைக்காட்சியில் எமது திருமண வீடியோ படத்தை பார்த்துக்கொண்டு இருக்கிறார்கள். உள்ளே வா மது என்று வஸந் தனது ஒரு கையால் அவளது கையிலுள்ள சூட்கேசை வாங்கிக்கொண்டு, மறுகையால் அவளது இடுப்பை அணைத்தவாறு அவளை உள்ளே அழைத்துச் சென்றான். அவள் விம்மி அழுதவாறு மெதுவாக உள்ளே சென்றாள், அவளின் சிவந்த கண்களிலிருந்து வடிந்த கண்ணீர் கன்னத்தை நனைத்திருந்த மழை நீருடன் இரண்டறக் கலந்தது.

# பேராசிரியர் கைலாசபதியும் 19ஆம் நூற்றாண்டு ஈழத்துத் தமிழ் இலக்கியமும்

பேராசிரியர் கலாநிதி எஸ். சிவலிங்கராஜா
தலைவர்,
தமிழ்த்துறை
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்.



தமிழியல் ஆய்வாளராகவும் புகழ்பெற்ற திறனாய்வாளராகவும் தன்னை நிலைநிறுத்திக் கொண்ட பேராசிரியர் கைலாசபதி, ஈழத்துத் தமிழ் இலக்கிய வரலாற்றிலே சிறப்பாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டு ஈழத்துத் தமிழ் இலக்கிய ஆய்விலே ஆர்வத்துடன் ஈடுபட்டுழைத்தமை பற்றிய எனது நோக்காக இச்சிறுகட்டுரை அமைகின்றது.

பல்கலைக்கழக மாணவனாகக் கைலாசபதி இருக்கும் பொழுதே பொதுவான ஈழத்து இலக்கிய வரலாற்றிலே ஓரளவுக்குக் கரிசனை உடையவராக விளங்கினார். இக் கரிசனைக்குக் காரணமாக அமைந்தவர்கள் பேராசிரியர் க. கணபதிப்பிள்ளையும் பேராசிரியர் க. வித்தியானந்தனுமே எனக் கருதலாம்.

தினகரன் பத்திரிகை ஆசிரியராகப் பணிபுரிந்த காலத்திலே இக்கரிசனை இன்னும் அதிகரிக்கும் சூழ்நிலை உருவாகியது. சிறப்பாக ஈழத்து நவீன இலக்கிய ஆர்வமே மேலோங்கியது எனலாம்.

பல்கலைக்கழக விரிவுரையாளராகப் பணிபுரிந்த காலத்திலேயும் சங்க இலக்கியம், பக்தி இலக்கியம், திறனாய்வு முதலான துறைகளிலே சிறப்பார்வம் உடையவராகத் திகழ்ந்தபோதும் ஈழத்து நவீன தமிழ் இலக்கியத்திலும் அதிக ஆர்வம் காட்டியே வந்தார். இந்த ஆர்வம் கொழும்புப் பல்கலைக்கழகத்திலே அவர் பணியாற்றியபோது மேலும் முனைப்புப் பெற்றது. கொழும்புப் பல்கலைக்கழகத் தமிழ்ச் சிறப்பு மாணவர்களுக்கான பாடவிதானத்திலே ஈழத்துத் தமிழ் இலக்கியம் என்ற பகுதியையும் இணைத்துக் கொண்டார். ஈழத்துத் தமிழ் இலக்கிய வரலாறு தனிப்பாடமாக முதன் முதலிலே பேராசிரியர் கைலாசபதியினாலேயே அறிமுகப்படுத்தப்பட்டது என்பர்.

கைலாசபதி யாழ்ப்பாண வளாகத் தலைவராகவும் தமிழ்த்துறைப் பேராசிரியராகவும் பணியாற்றிய காலத்திலே ஈழத்துத் தமிழ் இலக்கிய வரலாற்றைத் துலக்க வேண்டுமென்ற ஆர்வம் மிக்குடையவராகவே விளங்கினார். ஈழத்து இலக்கிய வரலாற்றைத் துலக்கி நிலைநிறுத்தும் பணி யாழ்ப்பாண வளாகத்தின் கடமை என்று கருதினார். இலட்சியக் கனவுகளோடு தாம் உருவாகிய மனிதப்பண்பியற் பீடத்தின் துணையோடு இதனைச் சாத்தியமாக்க முனைந்தார். தமிழில், இந்து நாகரிகம், வரலாறு, மெய்யியல், சமூகவியல் முதலான துறைகளினூடு, தனித்தனியாகவும் ஒன்றிணைந்தும் ஆய்வுகள் செய்து எமது இலக்கிய வரலாற்றைச் சரியாகவும் தெளிவாகவும் வெளிக் கொணரவேண்டும் என்ற உந்துதல் கைலா

சபதியிடம் இருந்ததை அவரின் மாணவனாக இருந்த நான் நன்கு அறிவேன்.

ஈழத்து இலக்கிய வரலாற்றைக் குறிப்பாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டு ஈழத்து இலக்கிய வரலாற்றை ஆய்வு செய்யவேண்டுமென்ற எண்ணம் பல காரணங்களாற் கைலாசபதியிடம் உருவாகியது. ஈழத்து இலக்கிய வரலாற்றிலே சிறப்பாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டு பற்றிய ஆய்விலே தாம் ஈடுபட்டமைக்கான காரணத்தைக் கைலாசபதி பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

"ஈழத்து நவீன தமிழ்இலக்கிய ஆய்வில் ஆர்வத்துடன் ஈடுபட்டு வந்திருக்கும் நான் அதன் ஊற்றுக்களையும் மூலகங்களையும் தேடிய பொழுது பின்னோக்கிச் செல்ல வேண்டியிருந்தது. பத்தொன்பதாம் நூற்றாண் டிலே அரும்பிய சில செல்நெறிகளும் கருத் தோட்டங்களும் இருபதாம் நூற்றாண்டிலே மலர்ச்சி பெற்று மேலும் செழுமையடைவதைக் காணமுடிந்தது." (முகவுரை – ஈழத்து இலக்கிய முன்னோடிகள்)

இத்தகைய எண்ணப்பாங்குடன் பத்தொன்பதாம் நூற்றாண்டு ஈழத்துத் தமிழ் இலக்கிய வரலாற்றை ஆய்வு செய்யவும் செய்விக்கவும் கூடிய சூழல் யாழ்ப்பாண வளாகத்திலே கைலாசபதிக்குக் கிடைத்தது.

பத்தொன்பதாம் நூற்றாண்டு ஈழத்து இலக்கிய வரலாறு, செம்மையாகச் சமூக, பொருளாதார, அரசியற் பின்னணியிலே ஆய்வு செய்யப்படவில்லை என்ற 'மனக்குறை'யும் கைலாசபதியிடம் காணப்பட்டது. சிலநூல்களும் கட்டுரைகளும் வெளிவந்தபோதிலும் அவற்றிலே போதாமை இருப்பதை அவதானித் தார் என்பதை அவரது பின்வரும் கூற்றுப் புலப்படுத்தும்.

"விஞ்ஞானத்தைத் தமிழில் பெயர்த்ததிலும் அகராதிகளை அரும்பாடு பட்டுத் தயாரித்ததிலும் பத்தொன்பதாம் நூற்றாண்டு
ஈழத்தமிழகம் முன்னின்றது என்ற பட்டியல் தயாரித்துப் பெருமைப்படுவதிலே பயனெதுவும் இல்லை: (ஈ.இ.மு. 23)

யாழ்ப்பாணக் கல்லூரியைச் சுவீகரித்து யாழ்ப்பாண வளாகம் அமைக்கப் பட்டபொழுது அக்கல்லூரியின் நூலகமும் சுவீகரிக்கப்பட்டது. அந்த நூலகத்திலே ஈழத்து இலக்கிய வரலாற்று மூலகங்களைக் கண்டறி யக்கூடிய ஏடுகள், நூல்கள், ஆவணங்கள், கையெழுத்துப்பிரதிகள், பத்திரிகைகள் முதலானவை (18ஆம் 19ஆம் நூற்றாண்டிற் குரியவை) இருந்தன. அவற்றை முறையாகப் பயன்படுத்தவேண்டுமென்று கைலாசபதி கருதினார்.

யாழ்ப்பாணத்திற்கு வளாகம் வந்ததும் யாழ்ப்பாணத்திலே இருந்த புலமையாளர்கள், பண்டிதர்கள், எழுத்தாளர்கள், புலவர் பரம்பரையினர் தம்வசம் இருந்த ஏடுகள், நூல்கள், பத்திரிகைகள் கையெழுத்துப்பிரதிகள் கடிதங்கள் முதலானவற்றை யாழ்வளாக நூலகத்திற்கு அன்பளிப்பாகவும் விலையாகவும் கொடுத்தனர். இவற்றைச் சேகரிப்பதிலும் ஒழுங்குபடுத்துவதிலும் அப்போது நூலகராக விருந்த ஆ. சிவனேசச் செல்வன் கைலாச பதிக்கு வலக்கரமாக நின்று அர்ப்பணிப்புடன் பணியாற்றியமையும் குறிப்பிடத்தக்கது.

யாழ்ப்பாண வளாக நூலகம் பற்றிக் கைலாசபதி பின்வருமாறு கூறுகின்றார்.

"யாழ்ப்பாணத்திலே பல்கலைக்கழக வளாகம் ஆரம்பிக்கப்பட்ட காலமுதல் அங்குள்ள நூலகத்திலே இலங்கைத்தமிழ் நூல்கள், சஞ்சிகைகள், பத்திரிகைகள், ஏடுகள், இலங்கைத் தமிழ்ப்புலவர்களின் கடிதங்கள் முதலிய பல்வகைப்பட்ட ஆவணங்கள் சேகரிக்கப்பட்டு வருகின்றன. பத்தொன்பதாம் நூற்றாண்டு இலங்கைத் தமிழ் ஆய்வுக்கு வேண்டிய அடிப்படை சான்றாதாரங்கள் அங்கு கணிசமான அளவு இருக்கின்றன."
(நூழைவாயில் நாவலர், நூற்றாண்டுமலர்)

இவற்றைக் கைலாசபதி நன்கு பயன்படுத்தியதோடு மற்றைய ஆய்வாளர் களையும் பயன்படுத்தும்படி தூண்டினார். யாழ்ப்பாணப் பல்கலைக்கழக நூலகத்தின் மீது இந்திய அமைதி காக்கும் படையினர் குண்டு வீசியபொழுது இந்த ஆவணங்களின் பெரும்பகுதி அழிந்தொழிந்து போனமையும் குறிப்பிடவேண்டியதே.

மனிதப்பண்பியற் பீடப்பீடாதி பதியாகவும் வரலாற்றுப் பேராசிரியராகவும் பணியாற்றிய கலாநிதி, கா. இந்திரபாலாவுட னான உறவும் தொடர்பும் ஈழத்து இலக்கிய வரலாற்றை மீட்டெடுக்கவேண்டுமென்ற கைலாசபதியின் எண்ணப்பாங்குக்கு வலுவூட்டு வதாக அமைந்ததெனலாம்.

பேராசிரியர் கா. சிவத்தம்பியின் வருகையோடு யாழ்ப்பாண வளாகத்தின் தமிழியல் ஆய்வுப் பரப்பு மேலும் விசாலிக்கத் தொடங்கியது. கைலாசபதியும் சிவத்தம்பியும் இணைந்து கருத்தரங்குகள் நடத்தியும் ஆய்வு மாணாக்கரை ஈழத்து இலக்கிய வரலாற்றாய் விலே ஊக்கப்படுத்தியும் வந்தனர். கைலாச பதியின் எண்ணங்கள் ஈடேறச் சிவத்தம்பி பெரிதும் உதவினார்.

யாழ்ப்பாணச் சமூகத்தை நன்கு விளங்கிக் கொண்டு தமது நோக்குநிலையில் இருந்து வழுவாமல் ஈழத்து இலக்கிய வரலாற்றை மீட்டெடுக்கக் கைலாசபதி பெரிதும் விரும்பினார். அதன் விளைவாக முதுதத்துவ மானிப்பட்ட ஆய்வினை மேற்கொள்ள வந்த அனைத்து ஆய்வு மாணவர்களுக்கும் ஈழத்து இலக்கியம் பற்றியே செய்யும்படி பணித்தார். இந்தவகையிலே மனோன்மணி சண்முகதாஸ், யோகேஸ்வரி கணேசலிங்கம், சித்திரலேகா மௌனகுரு, சி. வன்னியகுலம், துரை மனோகரன், சிவலிங்கராஜா முதலானோர் கைலாசபதியின் நெறிப்படுத்தலில் ஈழத்து இலக்கியம் பற்றிய விடயங்களிலேயே தமது முதுமாணிப்பட்ட ஆய்வினை மேற்கொண்டனர். இதுபற்றிக் கைலாசபதி பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

நாவலர், தாமோதரம்பிள்ளை, செந்தி நாதையர், துரையப்பாபிள்ளை, விபுலாநந்தர், சோமசுந்தரப்புலவர், சுவாமி ஞானப்பிரகாசர் முதலாய தமிழ்த் தொண்டர்கள் குறித்தும் தமிழ்ப்பத்திரிகைகள் குறித்தும் நமது பல்கலைக்கழகங்களில் முதுமாணிப்பட்டதிற் கான ஆய்வுக் கட்டுரைகள் எழுதப்பட்டிருக் கின்றன. குறிப்பிட்டபுலவர்கள் பற்றிய நுண்ணாய்வுகளாகவும் காலத்தின் விளக்கமா கவும் இவை அமைந்துள்ளமை கருதத்தக்கது"
(நா.நூ. மலர் 1979)

முதுமாணிப்பட்ட ஆய்வு மாணவர் களுக்கு மாத்திரமன்றித் தமிழ்ச்சிறப்பு நிறைவாண்டு மாணவர்களுக்கும் ஈழத்து

இலக்கியம் தொடர்பான ஆய்வேடுகளையே சமர்ப்பிக்கவேண்டுமென்று ஊக்கமளித்தார். பேராசிரியர் கைலாசபதியின் இக்கருத்தினைப் பேராசிரியர் சிவத்தம்பி சிறப்பாக முன்னெடுத்தார். இன்றுவரை இம்மரபு தொடர்கின்றது. இம்மரபுக்குக் கால்கோள் இட்டவர் கைலாசபதியே.

1979 ஆம் ஆண்டு வெளிவந்த நாவலர் நூற்றாண்டுவிழா மலரின் பதிப்பாசிரியப் பணியினை ஏற்று, இதுவரை வெளிவந்த நாவலர் மலர்களிலும் பன்மடங்கு சிறப்பான மலரொன்றினை வெளியிட்டார். இம்மலர் பல்துறை நோக்கில் நாவலர் என்னும் பகுதியையும் வழி வழி நாவலர் என்னும் பகுதியையும் கொண்டு மிகச்சிறப்பாக வெளிவந்தது. இம்மலர் கைலாசபதியின் ஆளுமை வெளிப்பாட்டினையும் ஈழத்து இலக்கியத்தின்பால் அவர் கொண்டிருந்த ஈடுபாட்டினையும் ஒழுங்கே வெளிப்படுத்துகின்றது. 18ஆம் 19ஆம் நூற்றாண்டு ஈழத்துத் தமிழ் இலக்கிய ஆய்வின் தேவையையும் பயனையும் நன்கு உணர்ந்த கைலாசபதி நாவலர் ஆய்வு மலரிலே பின்வருமாறு கூறுகின்றார்.

"நாவலர் இயக்க வளர்ச்சியின் காரணமாகவும், இந்நாட்டின் பொதுவான கலாசார எழுச்சியின் பெறுபேறாகவும் அண்மைக்காலத்தில் இலங்கைத் தமிழ் இலக்கியம் பலரது கவனத்தைக் கவர்ந்துள்ளது. படைப்பிலக்கியத் தேவைகளின் விளைவாகத் தோன்றிய தேசிய இலக்கிய இயக்கம், தொடக்கத்திலே சமகால இலக்கியங்களுக்கே முதன்மையளித்ததாயினும், தவிர்க்க இயலாதபடி விரைவிலேயே இலங்கைத் தமிழ் இலக்கியப்பாரம்பரியம் முழுவதையும் தழுவித் தனதாக்கிக் கொள்ள முனைந்தது. ஆற்றலும் அழகும் நிறைந்த பழைய படைப்புகளிலிருந்து நவீன ஆக்கங்களுக்கு உயிர்ச்சத்துப் பெற வேண்டியதன் அவசியத்தை உணர்ந்தது. இவ்வியக்கத்தின் விளைவுகளில் ஒன்றாகவே நாவலர் ஆய்வுகள் சரித்திர நோக்கிலும் சமூகவியற் கண்ணோட்டத்திலும் நடைபெறலாயின. பதினெட்டாம் பத்தொன்பதாம் நூற்றாண்டுகளைச் சேர்ந்த தமிழிலக்கியம் துருவி ஆராயப்படும் நிலை தோன்றியது."

"சரித்திர நோக்கிலும் சமூகவியற் கண்ணோட்டத்திலும்" எனக் கைலாசபதி குறிப்பிடுவது மிகுந்த கவனத்திற்குரியது. நாவலர் ஆய்வுகள் மாத்திரமன்றி ஈழத்து இலக்கிய வரலாறும் மேற்காட்டிய வகையிலேயே மேற்கொள்ளப்படவேண்டும் என்ற கருத்து நிலையில் அவர் உறுதியாய் இருந்தார். நாவலர் ஆய்வுக்கு ஊடாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இலக்கியச் செல்நெறியைச் சமூகவியற் கண்ணோட்டத்திலே ஆய்வு செய்து பல உண்மைகளை வெளிக்கொணர்ந்தார். பத்தொன்பதாம் நூற்றாண்டின் முக்கியத்துவத்தனைக் கைலாசபதி பல இடங்களிலும் வற்புறுத்திக் கூறியுள்ளார். வகை மாதிரிக்கு அவரின் பின்வரும் கூற்றினைச் சுட்டிக் காட்டலாம்.

கலை, இலக்கியம், சமய நம்பிக்கை, ஒழுக்கவியல் ஆகிய துறைகளில் பாரம்பரிய உணர்முனைப்பாகச் செயல்படுவதைக் காணலாம். ஆனால் அதே வேளையில் வெவ்வேறு காலப்பகுதிகளில் பாரம்பரியத்திற்கு வார்சுகளாக இருப்பவர்கள் தமது பாரம்பரியக் கூறுகளில் சிற்சில பொருத்தமின்மைகளும்

குறைபாடுகளும் இருப்பதைக் கண்டு அவற்றிற்குப் பரிகாரம் தேட முற்படுவதையும் காண்கிறோம். பத்தொன்பதாம் நூற்றாண்டில் அத்தகைய ஒரு உணர்வு இலங்கைத் தமிழ் இலக்கிய உலகில் ஏற்பட்டது. பொதுவாகத் தமிழ் கூறும் நல்லுலகிற்கு இது பொருந்துமாயினும் பல்வேறு காரணங்களால் தமிழகத்திலும் பார்க்க இலங்கையிலே, அதிலும் குறிப்பாக யாழ்ப்பாணப்பிரதேசத்திலே பத்தொன்பதாம் நூற்றாண்டு பல மாற்றங்களைக் கண்டதோடு, பின்னர் வந்த மாற்றங்கள் பலவற்றிற்கு அத்திவாரம் இடப்பட்ட காலப்பகுதியாயும் அமைகின்றது." (ஈ. இ.மு)

யாழ்ப்பாணத்திலே எனக் கைலாசபதி அழுத்திக் கூறுவதற்குரிய காரணங்களில் ஒன்று இதுகாலவரை நிகழாத மாற்றமாக வேலைப்புலப் புலமைப்பாரம்பரியமும் ஈழத்துத் தமிழ்ப் புலமைப்பாரம்பரியமும் நேருக்கு நேர் சந்திக்கும் களமாக யாழ்ப்பாணப்பிரதேசம் அமைந்தமையும் எனலாம்.

இந்த வகையிலே 19 ஆம் நூற்றாண்டினை அணுகிய கைலாசபதி "நவீன காலப்பகுதியின் தோற்றத்தைக் குறிக்கும் காலக்கோட்டினைப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் நடுப்பகுதி அளவில் வரைந்து கொள்ளலாம் எனத்தோன்றும்" என்றும் குறிப்பிடுகின்றார். இக்கருத்து நிலையை உறுதிப்படுத்தும் பொருட்டும் கைலாசபதி 19 ஆம் நூற்றாண்டு பற்றிய ஆய்விலே கவனம் செலுத்தினார் எனக் கருதலாம்.

1974-82 வரையான காலப்பகுதியிலே கைலாசபதி எழுதிய கட்டுரைகளிற் கணிச மானவை ஈழத்து இலக்கியம் தொடர்பான வையாகவே இருந்தன. தான்வரித்துக் கொண்ட அணுகுமுறைவழி வழுவாது சமூக பொருளா தார அரசியற் பகைப்பலத்திலே பத்தொன்பதாம் நூற்றாண்டு ஈழத்துத் தமிழிலக்கியம் பற்றிய பல கட்டுரைகளை எழுதினார். அவற்றிலே சில தொகுக்கப்பட்டு ஈழத்து இலக்கிய முன்னோடி கள் என்ற நூலாக வெளி வந்துள்ளது. 19ஆம் நூற்றாண்டு ஈழத்துத்தமிழ் ஆளுமைகளினூடு எவ்வாறு இலக்கிய வரலாற்றை அணுகலாம் ஆராயலாம் என்பதற்கு மிகச்சிறந்த எடுத்துக் காட்டாக இந்நூல் விளங்குகின்றது.

ஈழத்து இலக்கிய வரலாற்றிலே சிறப்பாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டு இலக்கியங்களிலே கைலாசபதி முனைப்பாக ஈடுபட்டிருந்த காலத்திலே அவரது மாணவனா கவும் உதவி விரிவுரையாளராகவும் அமையும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. பத்தொன்பதாம் நூற்றாண்டு ஈழத்து இலக்கியமும் கைலாச பதியும் என்னும் இச் சிறுகட்டுரையில் எனக்கும் அவருக்கும் இருந்த உறவையும் தொடர்பையும் பற்றிக் குறிப்பிடுவதும் தவிர்க்க முடியாத தாகின்றது.

தமிழ்ச்சிறப்பு மாணவனாக இருந்த காலத்திலே சங்க இலக்கியம், காவியம், புராணம், சிற்றிலிக்கியம் முதலானவற்றில் அதிகம் ஈடுபாடு காட்டி வந்தேன். இந்த ஈடுபாட்டிற்கு அத்திவாரம் இட்டவர் பண்டிதர் க. வீரகத்தி என்பதும் குறிப்பிடத்தக்கது. தமிழ்ச்சிறப்பு இறுதியாண்டிலே 'மூலப்பாடத் திறனாய்வு' என்னும் பாடத்தினைக் கைலாசபதி கற்பித்தார். அவரின் கற்பித்தற் பாணியும் திறனும் தனியே ஆராயப் படவேண்டியவை. மூலப்பாடத்திறனாய்வுப் பாடத்திலே நான் காட்டிய ஆர்வத்தினைக் கண்ட கைலாசபதி

ஈழத்துத் தமிழ் இலக்கியங்களைச் சிறப்பாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டினை உனது சிறப்புத் துறையாகக் கொள்ள வேண்டுமென்று பணித்தார்.

நான் விரிவுரையாளராக நியமிக்கப் பட்டதும் முதுமாணிப்பட்டத்திற்குச் சுன்னாகம் அ. குமாரசுவாமிப்புலவர் பற்றிய நுண்ணாய் வினைச் செய்யும்படி ஏவித் தாமே எனது நெறியாளராகவும் இருந்தார். அவரின் நெறிப்படுத்தலிலே குமாரசுவாமிப்புலவர் பற்றிய நுண்ணாய்வினைச் செய்து கொண்டிருக்கும் பொழுது **6.12.1982** இல் கைலாசபதி காலமானார். கைலாசபதியின் நெறிப்படுத் தலிலே தொடங்கிய ஆய்வு பேராசிரியர் க. வித்தியானந்தனின் நெறிப்படுத்தலிலே நிறைவுற்றது இரு பேராசிரியர்களினதும், நோக்குநிலையையும் அணுகுமுறையையும் ஒருங்கே 'அனுபவிக்கும்' வாய்ப்பு எனக்குக் கிட்டியது.

குமாரசுவாமிப்புலவர் பற்றிய ஆய்விலே என்னை ஆர்வத்துடன் ஈடுபடுத்த விரும்பிய கைலாசபதி, ஏககாலத்திலே வித்துவ சிரோமணி கணேசையர் பற்றிய ஆய்வினைச் செய்யும்படியும், அதனை யாழ்ப்பாணப் பல்கலைக்கழக வெளியிடாக நூலுருவாக்கமும் ஒழுங்குகளையும் செய்து தந்ததோடு அந்த ஆய்வுக்காக எனக்கு நிதியுதவியையும் பெற்றுத் தந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

சுன்னாகம் அ. குமாரசுவாமிப்புலவர் பற்றிய ஆய்வினை மேற்கொள்ளத் தொடங்கி யதும் புலவரவர்களின் நூல்கள், கட்டுரைகள், கண்டனப்பிரசுரங்கள், பத்திரிகைக்குறிப்புக்கள், கடிதங்கள், முதலானவற்றை ஒன்றும் விடாமல் ஆழ்ந்து படிக்கும்படி குறிப்பிட்டார். அத்துடன் அப்போது சீவந்தராய் இருந்த குமாரசுவாமிப் புலவரின் மகன் முத்தக்குமாரசுவாமிப்பிள்ளை யைக் கண்டு உரையாடித்தகவல்களைக் 'கறக்க' வேண்டுமென்றும் கட்டளையிட்டார். அவரின் கட்டளையைச் சிரமேற்கொண்டு திரு முத்துக்குமாரசுவாமிப்பிள்ளையை அவரது மயிலணி, சுன்னாகத்திலுள்ள 'புலவரகம்' என்னும் இல்லத்திலே பலமுறை சந்தித்து உரையாடினேன்.

சுன்னாகம் அ. குமாரசுவாமிப் புலவரின் நூல்களை மாத்திரமன்றி, அவர் காலத்து அறிஞர்கள் எழுதிய நூல்களையும், அவ்வறிஞர்களின் வரலாற்றையும் கண்டறிய வேண்டுமென்றும் ஆலோசனை கூறிய கைலாசபதி. இவை பற்றிய தேடலுக்கு உதவிபுரியக் கூடியவர்களாகப் பின்வரு வோரைச் சந்தித்து உரையாடும் படியும் கட்டளையிட்டார்.

பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை
திரு. கா.சி குலரத்தினம்
வ.ம. இரத்தினேஸ்வர ஐயர்
வித்துவான் F.X.C. நடராசா
ச. அம்பிகைபாகன்
அப்போதைய பேராயர். சபாபதி குலேந்திரன்
பேராயர். எஸ். ஜெபநேசன் (அப்போது யாழ்ப்பாணக் கல்லூரி அதிபர்)

இவர்களைக் கண்டு உரையாடியதன் பயனாகப் பல தகவல்களையும் சில அரிய ஆவணங்களையும், நூல்களையும் கடிதங் களையும் பெற்றுக் கொள்ளம் வாய்ப்பு எனக்கக் கிட்டியது. இவை கைலாசபதியின் வழிகாட்டலி னாற் கிடைத்த 'பொக்கிஷங்கள்' என்றே கருதுகின்றேன்.

19ஆம் நூற்றாண்டைத் தெளிவாகவும் சரியாகவும் விளங்கிக் கொள்ள மிஷனரிமாரின் குறிப்புக்களையும் அறிக்கைகளையும் கடிதங்களையும் தெண்டித்துப் பார்க்கும்படியும் கூறினார். ஓரளவுக்கு அவற்றைப் பார்க்கம் வாய்ப்பும் சாத்தியமாயிற்று. படப்பிரதி வசதி (Photo copy) இல்லாத காரணத்தினால் அவற்றைப் பிரதி செய்ய வேண்டி இருந்தது. சிலர் அரிய நூல்களையும் கையெழுத்துப் பிரதிகளையும் கடிதங்களையும் எனக்கெனத் தந்துதவினர். அரிய ஆவணங்கள் சிலவும் கடிதங்கள் சிலவும் இன்றும் என் வசம் உண்டு. இவற்றிற்கெல்லாம் மூலகாரணமாக இருந்தவர் பேராசிரியர் கைலாசபதியே.

இரண்டு ஆண்டுகள் இராசவீதியிலுள்ள அவரின் வீட்டிற்கு அயலிலே குடியிருந்த மையால் மாலை வேளைகளில் அவருடன் தனியேயிருந்து உரையாடும் பெரும்பாக்கியமும் எனக்கு கிடைத்தது. பெரும்பாலும் ஈழத்து இலக்கியம் பற்றியதாகவே எமது உரையாடல் அமையும். என்னைக் கண்டதும் 'என்னை புதிதாகப் படித்தீர், புதிய தகவல்கள் ஏதாவது கிடைத்ததா? என்றுதான் கேட்பார். அதற்குப் பயந்து புதிய தகவல்களுடன்தான் அவரிடம் செல்வேன். ஆய்வு முயற்சிகளைத் தூண்டித் துரிதப்படுத்தவதற்குக் கைலாசபதிக்கு நிகர் கைலாசபதியேதான். இவர் தனது ஈழத்து இலக்கிய முன்னோடிகள் என்ற நூலின் முகவுரையிலே எனது பெயரையும் குறிப்பிட்டமை அவரது பெருமனதையும் அவர் என்மேல் கொண்டிருந்த அன்பையும் புலப்படுத்துகின்றது.

ஈழத்து இலக்கிய வரலாறு பற்றிச் சிறப்பாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டு பற்றி சமூகவியல் நோக்கிலே தமக்கே உரித்தான மாக்சியப்பார்வையில் பெருநூல் ஒன்று எழுதவேண்டுமென்ற நோக்கம் அவரிடம் இருந்ததை நான் நன்கு அறிவேன் அதற்கான முயற்சிகளில் அவர் ஈடுபட்டிருந்தார் அவரின் முயற்சி நிறைவு பெற்றிருந்தால் பத்தொன்பதாம் நூற்றாண்டு ஈழத்து இலக்கிய வரலாறு தெளிவாகத் துலங்கி இருக்கும் என்பதில் ஐயமில்லை.

# ஈழத்தில் எழுந்த புராணங்கள்



**தமிழாசான் நாகலிங்கம் - குழந்தைவேலு,**
பழைய மாணவன்,
ஓய்வுபெற்ற கமநல சேவை ஆணையாளர்.

தமிழ் நாட்டிலே சோழ மன்னர் ஆட்சிக் காலத்திலேயே புராணங்கள் தோன்றலாயிற்று. அவை, காவிய இலக்கணமரபு தழுவி இயற்றப்பட்டனவாகும். அடுத்து வந்த நாயக்கர் காலத்திலே தமிழ்நாட்டுத் தலங்கள் பற்றி பல தல புராணங்கள் எழுந்தன. அதே கால கட்டத்தில் ஈழத்திலும் பல தல புராணங்கள் எழுந்தன. அவை வடமொழிப் புராண இலக்கண அம்சங்கள் சிலவற்றையும் காவிய இலக்கண மரபுகளையும் தழுவியவையாக விளங்குகின்றன. வடமொழி கூறும் ஐந்து இலட்சணங்களான சர்க்கம், பிரதி சர்க்கம், வம்சம், மனுவந்தரம், வம்சான சரித்திரம் என்பனவாகும். வடமொழி வழி வந்த புராணங்களைத் தொடர்ந்து தலமகிமை, அடியார் வரலாறு, விரத மகிமை ஆகியன கூறும் நூல்களும் புராணங்களாகவே வழங்கப்பட்டன.

இன்று கிடைக்கும் ஈழத்துப் புராணங்களில் காலத்தால் முந்தியது "தட்சணகைலாய புராணம்". இது வடமொழியில் உள்ள மச்சேந்திப் புராணத்தைத் தழுவி எழுந்ததால் வடமொழிப் புராணச்சாயலைக் கொண்டதாக விளங்குகின்றது. எனினும் பெருங்காப்பிய இலக்கணப் பண்புகளான வாழ்த்து, வணக்கம், வருபொருள், முதலான காவிய இயல்புகள் ஓரளவு பெற்ற தல புராணமாக விளங்குகின்றது. ராம-ராவண யுத்தத்தின் பின் ராமன் இலங்கை நகராட்சியை விபீஷனனுக்குக் கொடுத்து ராவணனைக் கொன்ற 'பிரமஹத்தி தோசம்' நீங்க தென் கைலையை வணங்கிக் கோயிலமைத்த கதையையும் சோடி அரசனான 'வரராம தேவன்' புராணங் கேட்கும் நாளில் இத்தல வரலாறு கேட்டுப் பெரும் பொருளோடு சென்று அதனைத் திருத்தியமைத்த வரலாறும் எஞ்சிய பொன்னை கிணற்றிலிட்டு காவல் வைத்துச்செல்ல, அவன் புதல்வனான குளக்கோட்டன். அதுவறிந்து மேலும் பொருள் கூட்டிக் கோவிலைப் பெருப்பித்துக் குளங்கட்டிய கதையும் அவன் மரபில் வந்த கஜபாகு (ஸ்ரீ சங்க போதி) என்ற மன்னன் பௌத்தனாக மாறி (ஸ்ரீ சங்க போதி) எனும் பெயருடன் அநுராதபுரத்திலிருந்து அரசோச்சிய பின் தென் கைலை நாதனுக்குத் திருப்பணி செய்ததும் அதன்பின் ஆரியச் சக்கரவர்த்தியான செகராசசேகரன் சைவம் வளர்த்த செய்தியும் இப்புராணத்தில் காணப்படுகின்றது. இந்நூலின் முதற்கண் அமைந்துள்ள இலங்கை மண்டலச் சருக்கம், ஈழநாட்டின் வளங்கூறுவதாக அமைந்துள்ளது. புராணச் செய்யுட்கள் அந்தாதித் தொடைகளாக அமைந்திருப்பது இதன் சிறப்பாகும்.

ஆரியச் சக்கரவர்த்திகள் காலத்திலே தோன்றிய இன்னொரு தல புராணம் திருக்கரசை புராணம் ஆகும். திருகோணமலைக்கு அருகில் மகாவலி கங்கைக் கரையில் 'கரசை' என்ற இடத்தில் கோவில் கொண்டிருக்கும் சிவபிரானைப் போற்றுவதாக இந்நூல் விளங்குகின்றது. நூலாசிரியர் பற்றிய செய்திகள் தெரியவில்லை. நான்கு சருக்கங்களைக்

கொண்டு விளங்குகின்றது. ஆசிரியருடைய கற்பனைத் திறன் பாராட்டத்தக்கதாக அமைந்துள்ளது. இக் காலத்தில் எழுந்ததாகக் கருதப்படும் 'வியாக்கிரபாத புராணம்' பற்றி யாதும் கூற முடியாத நிலை உள்ளது.

போர்த்துக் கீசர், காலத்திலே எழுந்த புராணம் 'ஞானானந்த புராணம்' ஆகும் இது கத்தோலிக்க மதத்தைப் பரப்புவதற்காக எழுந்த புராணமாகக் கருதப்படுகின்றது. ஒல்லாந்தர் காலத்திலே சிவராத்திரி புராணம், ஏகாதசி புராணம், பிள்ளையார் கதை ஆகிய விரத மகிமை கூறும் புராணங்கள் எழுந்துள்ளன. சிவராத்திரி புராணம் சிவராத்திரி விரதத்தின் வரலாற்றையும் அதனைப் போற்றிடும் முறையினையும் கூறவெழுந்த நூலாகும். வரத பண்டிதர் இயற்றிய இந்நூல் 9 சருக்கங் களையும் 691 செய்யுட்களையும் கொண்டதாகும். ஏகாதசி புராணம் திருமாலுக்குரிய சிறந்த விரதமாகிய ஏகாதசி விரதத்தைப் பற்றிய புராணமாகும். இப்புராணத்தில் ஏகாதசி விரதத்துக்குரிய கால நிர்ணயம், உருக்கு மாங்கதன், வீமன் ஆகியோரின் வரலாறுகள் கூறப்படுகின்றன. மூன்று சருக்கங்களையும், 258 செய்யுட்களையும் இது கொண்டுள்ளது. பிள்ளையார் கதை, விநாயகரின் விரத மகிமை கூறும் நூலாகும். அகவல் பாலில் அமைந்த இந்நூலில் விநாயகர் தோன்றிய வரலாறு, அவரது வீரச் செயல்கள், அவரின் முக்கி யத்துவம். அவரது பிர மகிமை, அவரின் விரதம் அனுஷ்டித்துப் பயன் பெற்றவரின் வரலாறு முதலானவை கூறப்பட்டுள்ளன.

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் எழுந்ததான புராணம், கோட்டுப் புராணம், கனகி புராணம் என்பவை குறிப்பிடத்தக்கவை. சமூக நோக்கில் பாடப்பெற்ற புராணமாக தாலபுராணம் விளங்ககின்றது. இதனை அச்சுவேலி நீ காசிநாதப் புலவர் பாடியுள்ளார். பனை வட இலங்கை மக்களின் வாழ்க்கையோடு ஒன்றித்துப் போன மரமாகும். மக்களின் ஜீவனோபாயத்திற்குப் பயன்படுவது. பொருளாதார நோக்கிலே பனைக்குப் பெறுமதி உண்டு. இதன் எல்லாப் பாகங்களையும் மக்கள் தமது பல்வேறு தேவைகளுக்குட்ப பயன் படுத்துவர். இதனால் பூலோக கற்பகதரு என்றழைக்கபடுகின்றது. ஐரோப்பியர் வருகை யால் பனையின் பயன்பாடு குன்றுவதைக் கண்ட புலவர் பனையின் மகத்துவத்தைப் புலப்படுத்தத் தால புராணத்தைப் பாடினார் எனக் கொள்ள லாம். சமூகச் செய்திகளைப் பாடுபொருளாகக் கொண்ட புராணங்களில் கோட்டுப் புராணம் குறிப்பிடத்தக்கதாகும். 19ஆம் நூற்றாண்டிலே நடைபெற்ற பிரபல்யம் வாய்ந்த வழக்குகளில் விளைவேலி வேதக்குட்டிஐயரின் மரண சாதன வழக்கு அமைந்தது. இலங்கை முழுவதும் பரபரப்பாகப் பேசப்பட்ட இவ்வழக்கிலே அக்காலத்தில் புகழ் கெற்ற அத்துவக்காத்தாக (அற்பவேற் அப்புக்காத்து) விளங்கிய கடல் என்பவர் உட்படப் பல பெரிய மனுசர் சிறைத் தண்டனை பெற்றனர். இவ் வழக்குப்பற்றி வழங்கும் பாடல் ஒன்று வருமாறு.

"ஆனைக்கோட்டை ராமலிங்கம்
அப்புக் காத்துக் கடலரும்
சேனைத் தலைவராகின்ற
சிறந்த கோட்டுச் சுப்பரும்
பூனை நாக முத்தரும்
புழுகு கந்தப் பிள்ளையும்
ஏனையோரும் பட்டபாடு
இலம்புதற்கு இல்லையே"

மரபு வழிப் புலவர்களால்ப் புனிதமான இலக்கிய வடிவமாகக் கொள்ளப்பட்ட புராணம் என்ற இலக்கிய வடிவத்தினூடாகச் சமூகச் சீரழிவொன்றை உட்பொருளாகக் கொண்டு

பாடப்பட்டது. கனகிபுராணம் வண்ணார் பண்ணைச் சிவன் கோயில் தேவதாசிகளில் ஒருத்தியாள் கனகி மீது பாடப்பட்டது. இதனை நட்டுவச் சுப்பையனார் பாடினார். கனகியின் வருகைக்கு நட்டுவனொருவனே காரணமாக இருந்தாளென்பதைச் சிலேடையாகக் கூறும் பாடல் வருமாறு

"நட்டுவனொருவனாலே
நாடக சாலை வந்தாள்
செட்டியில் ஒருவர்பட்டார்
சேணியர் இருவர் பட்டார்
மட்டுவில் குருக்கள் பட்டார்
கொக்குவில்ச் சுப்பன் பட்டார்
மட்டிகள் இவரைப் போலப்
பட்டடோர் பலபேர் அந்தோ"

# ஆளுமை விருத்தி

**Mrs.Thevaranchany Sivaskaran,**
*(MBA, MCP, BBA(Hon),*
*Head, Dept of Management Studies,*
*University of Jaffna.*



ஆளுமை என்பது மக்களின் அதிமுக்கியமான பண்புகளை விபரிப்பதற்குப் பயன்படுத்தப்படுகின்றது. ஒவ்வொருநபரும் வித்தியாசமான ஆளுமைப் பண்பைக் கொண்டுள்ளனர். அதற்கேற்ப ஒவ்வொரு நடத்தை மாதிரிகளும் வேறுபட்டமையும் ஆளுமை ஆனது ஒருவரது நடத்தையை மாற்றியமைக்கின்ற ஒன்றாகும். எனவே முகாமைத்துவ நோக்கில் ஆளுமை என்பதனை பின்வருமாறு வரையறுக்கலாம். "ஒருவர் நிலைமைக்கேற்ப நடந்துகொள்ளும் விதம் அல்லது குறித்த சூழ்நிலைக்கேற்பவும் மற்றவர்களுக்கேற்ப நடந்துகொள்ள விரும்பும் விதம் ஆளுமை எனலாம்.

ஆளுமையின் முக்கிய அம்சங்கள்

1) ஆளுமைப் பண்புகள் ஒரு நபரது உளவியல் ரீதியான பண்புகளாகும்.
2) ஆளுமை குறித்து நிலைமைகளின் போது ஒருவர் எவ்வாறு நடந்து கொள்வார் என்பதனை எதிர்வு கூறுவதாக அமையும்.

ஆளுமையில் அடிப்படையான மாற்றங்கள் செய்யப்படமுடியும். அதாவது வெட்கப்போக்குடைய மக்கள் அதிகளவில் முற்போக்கானவர்களாக ஆகமுடியும். எனவே ஒருவரது ஆளுமைப் பண்பு மாற்றமடையக்கூடிய ஒன்று.

ஒருவரது ஆளுமை எவ்வாறு விருத்தியடைகின்றது என்பதை மேற்பட்டவர் விளங்கிக் கொள்வாராயின் அவரை திறமையாகக் கையாளமுடியும். சாதாரணமாக ஆளுமைவிருத்தியானது, 3 காரணிகளால் ஏற்படலாம்.

1) தனிநபரது அடிப்படையான தன்மை
2) அவர் தொடர்புபடும் மக்களின் குழுக்கள்
3) அவர் புதிய நடத்தையைக் கற்றுக் கொள்ளும் விதம்

குறித்த கூறமுடியாத சில ஆளுமைப் பண்புகள் அவரது பிறப்பில் இருந்தே தீர்மானிக்கப்படுபவை. எனினும் மற்றவர் களுடன் அவர் கொண்டுள்ள தொடர்பின் ஊடாகவும், அவர் குறித்த உறுதியான நடத்தைகள்சிலவற்றைக் கற்றுக் கொண்டதனூடாகவும் அவரது ஆளுமையில் ஏற்கனவே விருத்தி ஏற்பட்டுள்ளது. ஒருவர் அடிக்கடி வேலைக்கு வராமல் விடுவதும், குறைவான செயற்றிறனைக் கொண்டிருக்கும் அவர் முன்னைய தொடர்புகளின்மூலம் விருத்தி செய்துள்ள ஆளுமைப் பண்புகளின் விளைவாக இருக்கலாம். ஒருவரது ஆளுமையை அவருடன் சிறந்த தொடர்புகளை வைத்துக் கொள்வதன் மூலம் விருத்தி செய்யலாம். சாதாரணமாக ஒருவரைப் பாராட்டுதல், மதித்தல், வெகுமதிகள் பரிசாக வழங்குதல், நல்லுறவை வைத்திருத்தல்

என்பன ஆளுமையை விருத்தி செய்யும். ஆளுமையை அளவிடுவதனால் குறித்த சூழ்நிலையில் ஒரு நபர் எவ்வாறு நடந்து கொள்வார் என எதிர்வு கூறமுடியும். ஊழியரை விருத்தி செய்வதற்கான திட்டங்களை வடிவமைக்கலாம். வேலைச் செய்முறைகளை மாற்றி அமைத்தல், பொறுப்புக்களைக் கையளித்தல்.

ஆனால் ஆளுமையை மதிப்பிடும் போது பல பிரச்சனைகளை நேர்கொள்ள வேண்டி ஏற்படுகின்றது. ஆளுமை மாற்றமடைகின்ற ஒன்றாக இருப்பதனால் ஒருவரது ஆளுமை பற்றிய தற்போதய அளவீடு எதிர்காலத்திற்குச் சரியானதாக இருக்காது. ஆளுமை மதிப்பீடு பக்கச்சார்பானதாக அமையலாம். ஒரே தன்மையான அளவீட்டு நுட்பம் பயன்படுத்தப்படுவதில்லை. ஒருவரது ஆளுமையை மதிப்பிடு வதற்கு பின்வரும் மதிப்பீட்டு முறைகளைப் பயன்படுத்தலாம்.

1. வினாக்கொத்து வழங்குவதன்மூலம்
2. சக ஊழியர்/மேலுத்தியோகத்தர் மூலம் மதிப்பிடல்
3. நேர்காணல் முறை
4. உத்தேசிக்கும் பரீட்சைகள் மூலம் மதிப்பிடல்
5. குழுரீதியான கலந்துரையாடலுக்கு அனுமதித்தல்.

பின்வரும் முறைகளைப் பயன்படுத்துவதன்மூலம் ஒருவரது ஆளுமையை விருத்தி செய்யலாம்.

1. பயிற்சித் திட்டங்களை அறிமுகப்படுத்தல்
2. கருத்தரங்குகள், செயலமர்வுகள், விரிவுரைகள் என்பவற்றை ஒழுங்கு செய்தல்.
3. ஊழியருக்கு சவாலான வேலைகளை ஒப்படைத்தல்.
4. அதிகாரங்களைக் கையளித்தல்
5. பயனுறுதிமிக்க தலைமைத்துவப் பாங்கை பிரயோகித்தல்

## References


- Moorhead, Gregory, Griften, Ricky W. Organizational Behaviour - 5th Edition 2001.
- Robbins step ten p. Organizational Behaviour concepts 1998.

# செழிக்கவே வையம் நாளும்

**கலாநிதி, கவிவேழம் ஜெயக்குமார் குமாரசாமி**
செங்குந்தா பழைய மாணவன்
டென்மார்க்

யாழ்ப்பாணம் செங்குந்த இந்துக் கல்லூரி பவளவிழாக் காணும் மகந்தான இந்நன்நாளிலே, மேற்படிக் கல்லூரியை உலகம் போற்றும் வகையில் மகத்தான பணிபுரிந்த அதிபர்கள், ஆசான்களை நினைவு கூரும் இவ்வேளை, இன்று நம்மத்தியில் வாழ்ந்து கொண்டிருக்கின்ற முன்னாள் ஆசான்களான மதிப்பிற்குரிய திரு. S. சிவ சரவணபவன் சர்மா, மதிப்பிற்குரிய திரு. M. சண்முகலிங்கம் ஆகிய தியாகிகள் அன்று தமது வழமையான கற்பித்தல் சேவைக்கு புறம்பாக எமது கல்லூரியில் தாம்கொண்ட கடும் பற்றுதலினால் ஆற்றிய உன்னத பணிகளைக் கருத்திற் கொண்டு, திரு. தம்பி இராசலிங்கம் அவர்கள் தலைமையில் அவுஸ்திரேலியா பழைய மாணவர் சங்கம் ஏகமனதாகத் தீர்மானித்தபடி, அவ்விரு பேராசான்களைக் கௌரவிக்குமுகமாக மேற்படிக் கல்லூரியின் அவுஸ்திரேலியக் கிளையினர் கல்லூரி பவளவிழாவிற்கு என மனமுவந்து வழங்கும் வாழ்த்துப்பா.

செந்தமிழ் மரபே தாங்கி சைவமும் தழைத்தே ஓங்க
செங்குந்த இந்து நீமுன் கந்தனின் மடமாய் நின்றாய் !
கந்தவேள் புராணம் தாங்கி காலாட்சே பம்தாம் செய்தாய்!
கந்தன் நல்லூராம் கோயில் அந்நியர் அழித்த அந்நாள்
குந்தமாம் கைவேல் கோயில் சித்திரவே லாயுதராய் ஆங்கண்
அயலிலே தோன்ற நீயே ஆவன எல்லாம் செய்தாய்!
சைவமும் தமிழும் மூச்சாய் தழைத்திட அருளும் அன்னாய்!
அந்நியர் ஆட்சிப் போழ்தில் அருந்தொண்டு தாங்கிச், சங்க
மடமெனத் திண்ணைப் பள்ளி வடிவெனத் தமிழைக் காத்தாய் !

அதன்பின்னே அயலூர் உள்ள அனைத்துஆண் பெண்கள் கல்வி
கண்களைத் திறக்க வந்தாய்! கல்லூரித் தகைமை பெற்றாய் !
செங்குந்த இந்துக் கல்லூரி எனும் வடிவாய் என்றும்
அகிலத்தை அறிவால் காத்தே அருள்தரும் அன்னாய்! நீயே
கல்லூரி வடிவில் தோன்று காண்விழா பவளம் என்னும்
பெருவிழாக் கொண்டாட் டத்தால் புளகிதம் ஆகு தம்மா !
உந்தனின் வளர்ச்சி தாங்கி உழைத்த உத்தமர் பல்லோர் !
அதிபர் ஆசான்கள் அன்னார் ஆலயம் ஆக்கிச் சென்றார் !
அன்றைய நாளை எண்ண ஆனந்தக் கண்ணீர் பொங்கும் !
இந்த நன்னாளில் இங்கே இருக்கின்றார் இருவர் முன்னாள்
சரவண பவனாம் சர்மா சண்முக லிங்க னாரும்
சிற்பிகள், குழந்தை காக்கும் சிறப்புறு காவல் காரர் !

இருவரும் நல்லூர் கந்தன் இறைவனாய் வந்தே அன்று
கறையிலாக் கடமை தந்தே கல்லூரித் தாயைக் காத்தார் !
பல்லோரும் ஏத்தத்தோன்றும் பண்புறு ஆசான் உள்ளே
செதுக்கும்உன் சிற்பி போல்வர் சரவண பவனாம் சர்மா
கல்லூரிச் சின்னம் ஒன்றைக் கருத்துடன் படைத்தே தந்தார் !
உள்ளுவ தெல்லாம் உயர்வு உள்ளல் "தாரகமாய்" தந்தே
வள்ளுவர் வழியில் நல்ல வளம்பெற வகுத்தே வைத்தார் !
செங்குந்த பெருமை சாற்ற "சுடரொளி" பெயரைச் சூட்டி
சிறப்புறு மலர்கள் தோன்றி செகமது போற்றச் செய்தார் !
கல்லூரி மாதா போற்று மந்திர மயக்காய் எங்கள்
மாணவர் இணைந்தேபாட கல்லூரி கீதம் யாத்தார் !
கற்பித்தல் பணியினூடே கலைப்பணி கல்லூரிக்காய்
கலைவிழா தோன்றச்செய்தார் கலைச் செல்வி ஆசானென்றே
உலகமே போற்றும் சிற்பி சரவண பவனே ஐயா !
சரஸ்வதி தேவி யாக செதுக்கினீர் செங்குந் தாவை !
காலத்தை கடந்த ஆசான் கல்லூரி வாழ்த்தும் ஞான்றும் !

சண்முக லிங்க னாராம் குழந்தையே ! குழந்தை காக்க
ஒழுக்கமே வகுத்தே வைத்தீர் பிரம்பினால் படிக்கச் செய்தீர் !
கூடும் ஆங்கிலமும் ஆங்கே குடியியல் பாடம் மற்றும்
தேடரும் கலைகள் யாவும் சேர்ந்துகை வரவே பெற்ற
பாடரும் புகழ்மிக் காராய் பலநலன் நிறைந்த தீர !
மாணவர் தலைவர் என்றும் சாரணத் தொண்டர் என்றும்,
சிரமதா னங்கள் என்றும் மாணவர் மன்றம் என்றும்
விளையாட்டுப் போட்டி என்றும் வழிவகை, தலைமை கொண்டு
வகுத்தபே ராசான் நீங்கள் ! கலைவிழா குழுவில் நின்றும்
கலைத் தமிழ் மரபைக் காத்தீர் ! கல்லூரி அதிபர் ஆகி
கடமையால் கவர்ந்தே நின்றீர் ! நாடகம் சினிமா என்றும்
நடிப்புடன் இயக்கம் என்றும் எழுத்திசை பாடல் என்றும்
எதையெதை விட்டீர் ஐயா ! நகைச் சுவை ஆசான் ஆகி
பொதுப்பணி ஆற்றி வாழும் பெருமகன் குழந்தை யென்னும்
சண்முக லிங்க னாரே தாங்களும் தங்கள் போல
ஐயராம் சர்மா சிற்பி சரவண பவனும் என்றும்
கல்லூரி போற்றும் எங்கள் கந்தனாம் கடவுள் பேரார் !
பவளமாம் விழாவில் இந்நாள் அதிபரோ கல்லூரித்தாய்
ஈன்றவோர் மைந்தர் ஆவர் பால குமாரும் கந்தன்
பெயர்படைத் துள்ள தாலே எங்கள் கல்லூரித் தாயாம்
செங்குந்த இந்து இந்த செகமதில் நிலைத்தே வாழ்வள் !
கடவுளர் கோயில் ஆகி அறநெறி வகுப்பாள் ஞான்றும் !
மாணவர் உலகைக் காப்பள் ! வையகம் செழிக்கச் செய்வாள் !!

(இது ஓர் உண்மைக் கதை அல்ல)

# நான் கடவுளைக் கண்டேன்

தம்பி இராசலிங்கம்
(அவுஸ்திரேலியா)

செந்தில்நாதன் இங்கிலாந்தில் தனது கலாநிதிப் பட்டப் பின்படிப்பிற்குப் பின்னர், மூன்று ஆண்டுகள் லண்டனில் உள்ள பிரபல தனியார் கம்பனியில் உயர்வேலையும் செய்துவிட்டு, இங்கிலாந்தில் தான் சம்பாதித்த பெருந்தொகைப் பணத்துடன் நிரந்தரமாக லண்டனை விட்டு தனது தாய் நாடாகிய இந்தியா திரும்புகிறான்.

தனது ஒரே அன்புச் சகோதரியும், இரு சகோதரர்களும் திருமணம் செய்து குடியும் குடித்தனமும் ஆகிவிட்டபடியால், கடைசி மகனாகிய தனக்கு இனி தனது திருமணத்தில் ஒரு தடையும் இல்லை என்று எண்ணும்போதே செந்தில்நாதனுக்கு மிகவும் சந்தோசமாக இருந்தது.

தமிழ் நாட்டிலுள்ள காஞ்சிபுரம்தான் இவனது சொந்தஊர், அந்தக்காலத்தில் இவனது பெற்றோர்கள் பரம்பரை பரம்பரையாக காஞ்சிபுரம் பட்டு நெசவுத்தொழிற்சாலைகள் வைத்து பெரும் பணக்காரர்களாக வாழ்ந்து வந்தார்கள். செந்தில்நாதனின் பெற்றோர் களிற்கு சொந்தமான இரு பெரும் பட்டு நெசவுத் தொழிற்சாலைகளிலும் மொத்தமாக சுமார் 850 இற்கும் மேற்பட்ட தொழிலாளர்கள் வேலைசெய்து வந்தார்கள். தமிழ் நாட்டிலுள்ள பிரபலமான பல பெரிய புடவைக் கடைகள் இவர்களது இரு பட்டுத்தொழிற்சாலைகளில் இருந்தேதான் அதிகளவு காஞ்சிபுரம் பட்டுச் சேலைகளையும், பட்டு வேட்டி சால்வைகளையும் விற்பனைக்காக கொள்வனவு செய்வார்கள். இவர்களும் நியாயமான விலைகே கடைகளுக்கு மொத்தமாக விற்பார்கள். கடைக்காரர்களும் நாணயம் தவறாது இவர்களுடன் நடந்து கொள்வார்கள். அனேக கடைக்காரர்கள் உயர்விலை கொடுத்து நல்ல தரமான பட்டுச் சேலைகளை விரும்பி மொத்தமாக கொள்வனவு செய்து தமது வியாபாரத்தை திறம்பட செய்து வந்தார்கள்.

அனேகமாக தீபாவளி, தைப்பொங்கல், புதுவருடப்பிறப்பு போன்ற ஒவ்வொரு விசேடநாட்கள் வருவதற்கு முன்னர், ஆகக் குறைந்தது இரு மாதங்களாவது இரவு பகலாக காஞ்சிபுர பட்டுச்சேலைகள் நெய்யப்படும். அவ்வளவு ஓடர்கள் பல கடைகளிலிருந்து வந்து குவிந்திருக்கும். சிலவேளைகளில் பல ஓடர்களை ஏற்பதா அல்லது விடுவதா என்றுகூட நிர்வாகத்திற்கு யோசிக்கத் தோன்றுவதுண்டு. அந்த அளவிற்கு ஓடர்கள் தொடர்ந்து வந்துகொண்டே இருக்கும்.

தற்போது எல்லாம் நெசவுத்தொழில் யந்திரமயமாக்கப்பட்டதாலும், சேலை அணிவதையே அநாகரியம் என்று எண்ணும் பெண்களின் மனப்போக்கினாலும், தரமில்லா சேலைகளின் ஏமாற்று வியாபாரத்தாலும்,

மேற்கத்தைய நாடுகளின் நவநாகரிக உடை மோகத்தினாலும், வடஇந்திய மாற்று உடைக் கவர்ச்சியாலும், வடஇந்திய கம்பனிகளின் கீழ்த்தரமான பல சலுகைகளாலும் அளவிற் கதிகமான வருமானத்தை சம்பாதிக்க விரும்பி யதால் உண்டான நாணயமற்ற வியாபாரத் தாலும், சீனாவிலிருந்து விலை குறைந்த தரமற்ற சேலைகளின் இறக்குமதியாலும், நீதி நேர்மையற்ற ஏமாற்று வியாபாரத்தாலும் நாளுக்கு நாள் காஞ்சிபுர நகர பட்டுச்சேலைத் தொழிற்சாலைகள் தமது உற்பத்திப்பொருட் களை நியாயமான விலைக்கு மொத்தமாக கடைகளிற்கு விற்க முடியாமல் படிப்படியாக ஒவ்வொரு தொழிற்சாலையாக வீழ்ச்சிகாணத் தொடங்கியது.

செந்தில்நாதன் இங்கிலாந்திலிருந்து தனது ஊரான காஞ்சிபுரம் வந்ததில் இருந்து அவனது பெற்றோர்கள் அவனுக்கு பெண் பார்க்கத் தொடங்கிவிட்டார்கள். அவனோ தனக்கு இந்தியாவில் ஒரு நல்ல வேலை கிடைத்த பின்னர்தான் திருமணத்தைப் பற்றி யோசிக்கமுடியும் என்று கூறி தட்டிக்கழித்துக் கொண்டே வந்தான்.

செந்தில்நாதன் இங்கிலாந்தில் இருந்து காஞ்சிபுரம் திரும்பியதைக் கேள்விப் பட்ட செந்தில்நாதன் உற்ற நண்பன் பாலகுமார் செந்தில்நாதன் வீட்டிற்கு வந்து செந்தில் நாதனையும் அவனது பெற்றோர்கள் தாங்கள் தங்களின் நெருங்கிய உறவினர் ஒருவரின் மகளின் வளைகாப்பு கொண்டாட்டத்திற்கு ஈரோடு என்ற ஊரிற்கு செல்ல இருப்பதாகவும், அதனால் செந்தில்நாதனை மட்டும் விருந்திற்கு சென்று வரும்படியும் அன்பாக கேட்டுக் கொண்டிருந்துவிட்டு, செந்தில்நாதனை தவறாது அடுத்த சனிக்கிழமை விருந்திற்கு வரும்படி மீண்டும் ஒருமுறை ஞாபகப்படுத்தி விட்டு விடைபெற்றுச் சென்றுவிட்டார்.

செந்தில்நாதன் அடுத்த சனிக்கிழமையன்று மாலை 6.00 மணியளவில் பாலகுமார் வீட்டிற்கு ஒரு அன்பளிப்புப்பொருளுடன் சென்றிருந்தார். செந்தில்நாதனை பாலகுமார் மிக அன்புடன் வரவேற்று, வரவேற்பு மண்டபத்தல் இருந்த மிக விலையுயர்ந்த சோபாவில் அமர வைத்தான். பின்பு சுவரில் பொருத்தப்பட்டிருந்த மிகவும் பெரியதும் தட்டையானதுமான தொலைக் காட்சியில் செய்திகளைப் போட்டான். செந்தில் நாதன் தலையைத் திருப்பி அங்கும் இங்கும் இலேசாகப் பார்த்தபோது எல்லாமே மிகமிக விலையுயர்ந்த பொருட்களாகவே இருப்பதை அவன் கண்டுகொண்டான்.

பாலகுமார் வீட்டிற்கு செந்தில்நாதன் சென்றதிலிருந்து அதுவரையில் வெளியில் வராமல் சமையல் அறையிலேயே இருந்த பாலகுமாரின் மனைவியை, பாலகுமார் வலுக்கட் டாயமாக அழைத்து செந்தில்நாதனுக்கு அறிமுகம் செய்து வைத்தான். சமையல் அறையைவிட்டு வெளியே வந்த பாலகுமாரின் மனைவி தூரத்தே நின்று செந்தில்நாதனுக்கு தனது வணக்கத்தை தெரிவித்துவிட்டு ஒரு ஓரமாக சிறிது நேரம் நின்றுவிட்டு, மீண்டும் உள்ளே சென்றுவிட்டார்.

"தன் மனைவியின் பெயர் மாலதி என்றும், ஐந்து மாதத்திற்கு முன்னர்தான் புதிதாக வேலைக்கு சேர்ந்தது தன்னுடன் வங்கியில் வேலை செய்பவள் என்றும், தங்களுக்கு மூன்று மாதத்திற்கு முன்னர்தான் கோவிலில் மாலை மாற்றி மிக சுருக்கமாக

திருமணம் நடைபெற்றதாகவும், தன்னுடன் வேலை பார்க்கும் மாலதியை தான் காலித்து திருமணம் முடித்ததாகவும், அவளது பெற்றோர் கள் இக்காதல் திருமணத்தை மிக எதிர்த்து, எமது திருமணத்தில் கலந்துகொள்ள வில்லை என்றும் பாலகுமார் கூறினான், தனக்கு பெற்றோர்கள் இல்லை ஆனால் மாலதிக்கு பெற்றோர்கள் மிக நல்ல வசதியாக இருந்தும் காதல் திருமணத்தை எதிர்த்து முற்றாக ஒதுங்கிக்கொண்டார்கள் என்றும், தமது திருமணத்தின் பின்னர் மாலதியின் பெற்றோர் களும், ஏற்கனவே திருமணம் முடித்த அவளது மூத்த இரு அண்ணன்மார்களும் மாலதியை முற்றாக ஒதுக்கி, அவளுடனான தொடர்பை முற்றாகவே துண்டித்துவிட்டார்கள்" என்றும் கூறி பாலகுமார் மிக மிக வருத்தப் பட்டான்.

அன்றைய இராப்போசன விருந்து சிறப்பாகவே இருந்தது, விருந்தின்போதும் மாலதி மிகக் குறைந்த நேரம் தான் உணவு மேசையடியில் நின்று உணவு பரிமாற உதவி செய்தாள். மிகுதி நேரமெல்லாம் சமையல் அறையிலேயே நின்று கொண்டாள். செந்தில் நாதன், பாலகுமார், மாலதி ஆகியோர் எல்லோரும் மாமிசம் உண்ணாதவர்கள் என்பத னால், விருந்து ஏறத்தாழ திருமணவீட்டுச் சாப்பாடுபோலவே இருந்தது எனலாம். அவர்கள் எல்லோரும் பிறவிச் சைவர்கள். ஆனால் பாலகுமார் வெளிக் கடைகளிலும், கிளப்பு களிலும் மதுவும் மாமிசமும் உண்பதை செந்தில் நாதன் அறியமாட்டார். அவர்கள் உணவு உண்ணும்போது, "திருவள்ளுவர் சாப்பிடும் போது ஒரு ஊசியும், ஒரு கிண்ணத்தில் தண்ணீரும் பக்கத்தில் வைத்துக் கொண்டு சாப்பிடும் வழக்கம் ஏன் என்று உங்களுக்குத் தெரியுமா? என்று பாலகுமார் கேட்டார். அதற்கு செந்தில்நாதன் திருவள்ளுவரின் மனைவி வாசுகி, தான் இறக்கும் தறுவாயிலும் இதற்கு விடை அறியாமல் " திருவள்ளுவர், கம்பன்" அவர்களின் வழித்தோன்றலாய் வந்த நெசவுத் தொழில் செய்யும் பரம்பரையில் வந்தவர்கள் தான் தாங்கள் என்று எங்கள் தாத்தாவின் கொள்ளுத்தாத்தா அடிக்கடி கூறுவாராம்" என்று செந்தில்நாதன் கூறினான். மாலதி, தாங்களும் நெசவுத்தொழில் செய்யும் பரம்பரை யைச் சார்ந்தவர்தான் ஆனால் இப்பொழுது நெய்வதில்லை என்று மெதுவாகக் கூறினார்.

விருந்து முடிந்து பாலகுமாரும் செந்தில்நாதனும் வரவேற்பு மண்டபத்தில் பேசிக்கொண்டிருந்தபோது கதைக்கு இடையில் தான் வங்கியில் ஓர் உயர்அதிகாரியாகப் பதவி வகித்தாலும், அச் சம்பளம் தனக்குப் போதாமை யால், வேறு சிலருடன் சேர்ந்து கூட்டுத் தயாரிப்பில் ஒரு படம் எடுப்பதாகவும் அப் படத்தை முடிப்பதற்கு மேலும் ஒரு தொகைப் பணம் தனக்குத் தேவைப்படுவதாகவும், அவ் உதவியை நீர் செய்தால் நான்கு மாதத்திற்குள் வங்கியிலும் பார்க்க 5 வீத அதிக வட்டியுடன் அப் பணத்தை திருப்பி தந்துவிடுவதாகவும் பாலகுமார் கூறுகிறான். கிட்டத்தட்ட எவ்வளவு பணம் வேண்டும் என்று செந்தில்நாதன் பாலகுமாரைக் கேட்டான். அதற்கு பாலகுமார் கூறிய தொகையை கேட்டதுமே செந்தில்நாதன் திகைத்தான். ஆனால் வெளியில் காட்டிக் கொள்ளவில்லை. பின்னர் சிறிது நேரம் பொதுவாக கதைத்துக் கொண்டிருந்துவிட்டு இரவு 10.00 மணியளவில் தனக்கு இராப்போசன விருந்து அளித்தமைக்கு, அவர்களுக்கு தனது நன்றியைத் தெரிவித்துவிட்டு செந்தில்நாதன் தனது வீடு திரும்பினான்.

இரண்டு கிழமைகளின் பின்னர் செந்தில்நாதனுக்கு டில்லியில் ஓர் புதிய உயர்பதவி வேலை கிடைத்தது, அவன் டில்லி செல்வதற்கு இரு நாட்களுக்கு முன்னர், தனது நண்பன் பாலகுமாருக்கு, அவன் கேட்ட மிகப்பெரிய அத்தொகைப் பணத்தை வங்கி வட்டிக்கே கடனாகக் கொடுத்து அதற்குரிய பற்றுச்சீட்டுப் பத்திரத்தையும் பெற்றுக்கொண்டு டில்லிக்கு சென்றுவிடுகிறான்.

1950 ஆம் ஆண்டு தொடக்கம் கிட்டத்தட்ட 1980ஆம் ஆண்டுவரை காஞ்சிபுர பட்டுநெசவுத் தொழில் மிக உச்சக்கட்டத்தில் இருந்ததெனலாம். பல பெரிய பணக்காரர்கள் எல்லாம் தத்தமது மகளின் திருமணத்திற்கு நேரடியாக நெசவுத் தொழிற்சாலைக்கே வந்து, விசேட ஓடர்கொடுத்து மிகவிலை உயர்ந்த தரமான காஞ்சிபுரம் பட்டுச் சேலைகளை வாங்குவார்கள், நெசவுத் தொழிலாளர்களும் மிக பயபக்தியுடன் தம்தொழிலில் ஈடுபடுவார்கள். அன்றைய நாட்களில் வசதிபடைத்த மக்கள் எல்லோரும் தத்தமது சிறு பெண் பிள்ளைகளுக்கு காஞ்சிபுரம் பட்டில் முழுப் பாவாடை சட்டைகளும், வளர்ந்த பெண்களுக்கு காஞ்சிபுரம் பட்டுச்சேலைகளும் வாங்குவார்கள். அந் நாளில் காஞ்சிபுரம் பட்டுப் புடவையைப் பற்றி வெளிவந்த சினிமாப் பாட்டுக் கூட மிகப் பிரபல்யமானது என்பது வேறு விடயம். காஞ்சிபுரம் பட்டிற்கு இந்தியா, இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், கனடா, இங்கிலாந்து போன்ற பல நாடுகளில் ஒரு தனி மதிப்பே இருந்தது. அக்காலம் மீண்டும் திரும்பி வராதா என்று செந்தில்நாதனின் பெற்றோர்களும் ஏனைய நெசவுத்தொழில் முதலாளிமார்களும் பல ஆண்டுகள் ஏங்கியதுதான் மிச்சம், இறுதியில் ஒரு வழியும் இல்லாமல் வேறுசில பட்டுநெசவுத் தொழிற்சாலை முதலாளிமார்களைப் போல செந்தில்நாதனின் பெற்றோர்களும் தமது இரு பெரிய பட்டுநெசவுத் தொழிற்சாலைகளையும் மிகக் குறைந்த விலைக்கே விற்றுவிட்டு சென்னைக்கு நிரந்தரமாக வந்து குடியேறிவிட்டார்கள்.

ஐந்து மாதத்தின் பின்னர் பெற்றோர்களைப் பார்ப்பதற்காக லீவில் செந்தில்நாதன் டில்லியிலிருந்து சென்னை திரும்புகிறான். ஒரு கிழமையை தன் பெற்றோர்களுடன் கழித்த பின்னர், பாலகுமாரைப் பார்ப்பதற்காக செந்தில்நாதன் காஞ்சிபுரம் செல்கிறான். ஆனால் செந்தில்நாதனை வரவேற்பதற்கு பாலகுமாரின் மனைவி மட்டுமே வீட்டில் இருந்தாள். பாலகுமார் எங்கே என்று கேட்டதற்கு பதில் கூறாமல் பிஸ்கட்டுகளும் தேனீரும் தந்து மரியாதையாக உபசரித்தாள். பாலகுமாரின் வீட்டில் இருந்த பெரிய தொலைக்காட்சிப் பெட்டி, விலையுயர்ந்த சோபா, குளிர்சாதனப்பெட்டி, விலையுயர்ந்த சாப்பாட்டு மேசை போன்றனவற்றைக் காணவில்லை. வீட்டில் இருந்த விலையுயர்ந்த பொருட்கள் அனைத்துமே தவணைமுறைக் கடனில் வாங்கப்பட்டன என்று செந்தில் நாதனுக்கு தெரிந்திருக்க ஞாயமில்லை. சிறிது நேரத்தில் பாலகுமாரின் மனைவி மாலதி சமையல் அறையில் இருந்து வெளியே வந்து, அந்த வரவேற்பு மண்டபத்தில் செந்தில் நாதனுக்கு சற்று தூரத்தே ஒரு சிறிய மரக் கதிரையில் மெதுவாக அமர்ந்தாள்.

பாலகுமார் இப்ப வருவாரா என்று செந்தில்நாதன் கேட்டதும், அவள் தனது வாயைப் பொத்திக்கொண்டு மெதுவாக விம்மத் தொடங்கினாள். செந்தில்நாதனுக்கு பெரிய தர்மசங்கடமாகப் போய்விட்டது. சிறிது நேர

மௌனத்தின் பின்னர் இவன் ஆறுதலாக விசாரித்தபோது, தன்னை திருமணம் முடிக்க முதல் தொடக்கம் நீண்ட காலமாக பாலகுமார் தான் படமெடுப்பதாக ஊர் எல்லாம் கடன் வாங்கி குடிக்கும், போதைக்கும், சூதாட்டத் திற்கும், மற்றைய கெட்ட பழக்கங்களுக்கும் கண்மூடித்தனமாக செலவழித்தபடியால் வாங்கிய கடன்களை அடைக்க முடியாமல் தான் வேலைசெய்யும் வங்கியிலும் மிகப் பெருந் தொகைப் பணத்தை திருடிவிட்டு வங்கி நிர்வாகத்திற்கு தெரிய வருமுன்னர் தன்னைத் தேடவேண்டாம். என்று ஒரு கடிதம் எழுதி வைத்துவிட்டு ஒரு மாதத்திற்கு முன்னர் வீட்டை விட்டு எங்கோ சென்றுவிட்டார் என்று வழிந்த கண்ணீரைத் துடைத்தபடிக் கூறினாள்.

பாலகுமார் எழுதிய அந்தக் கடிதத்தை பார்க்கலாமா என்று செந்தில்நாதன் கேட்ட தற்கு, உள்ளே சென்று கடிதத்தை எடுத்து வந்து கொடுத்தாள், அதை அவன் வாசித்த போது அதில் "மாலதி நான் உனக்கு சுருக்கமாக எழுதிக்கொள்வது நீ என்னை தேடவேண்டாம். உன்னை நீயே காப்பாற்றிக்கொள். வேலையை மட்டும் விட்டுவிடாதே. இனி உன்னைக் காப்பாற்ற ஒருவரும் முன்வரமாட்டார்கள். எனது கெட்ட நண்பர்கள் என்னை இந்த நிலைக்கு கொண்டுவந்துவிட்டார்கள். நான் என் முடிவை தேடிக்கொள்கிறேன். நீ என்னைத் தேட முயற்சிப்பதோ அல்லது எனக்காக காத்திருப் பதோ பலன் தராது. இரண்டு மாதக் கர்ப்பிணியாக இருக்கும் உன்னை உனது பெற்றோரும் உன்னுடன் இல்லாத இந்த நேரத்தில் நான் உன்னைவிட்டு ஒரேயடியாகச் செல்வதற்கு மன்னித்துக்கொள் இப்படிக்கு உன் கணவன்" என்று இருந்தது. செந்தில்நாதன் சிறிது நேரம் மாலதிக்கு ஆறுதல் வார்த்தைகள் கூறிவிட்டு தனது வீட்டிற்குத் திரும்பிவிட்டான்.

மறுவாரம் பெற்றோர் சம்மதத்துடன் செந்தில்நாதன் திருமணம் முடித்து தன் மனைவியுடன் தான் வேலை செய்யும் இடமாகிய டில்லிக்கு செல்கிறான். அவனது திருமணத்தில் தான் எத்தனை சிக்கல்கள், பிரச்சினைகள், இழுபாடுகள் பொருத்தமான ஒரு ஆளை தேர்ந்தெடுத்து உறுதிப்படுத்துவதில் தான் எத்தனை கஷ்டங்கள் உற்றார் உறவினர்களின் தேவையற்ற தலையீடுகள். மனதை மாறச் செய்து திருமணத்தைக் குழப்ப முயற்சிக்கும் உறவுக்காரர்கள் சிலர் உள்ளதை உள்ளபடியே கூறி, முடிவெடுக்கும் பொறுப்பை உரியவர் களிடம் விட்டுவிட்டு ஒதுங்குவோர் ஒரு சிலரே எப்படியோ ஒருவாறு பல சிரமங்களுக்கு மத்தியில் திருமணம் நடந்தேறிவிட்டது. இப்பொழுது டில்லியில் செந்தில்நாதனின் குடும்ப வாழ்க்கை சந்தோஷமாகப் போய் கொண்டிருக்கிறது. அவர்கள் டில்லி வந்து இரண்டு மாதத்தில் புது மனைவியும் தன் படிப்பிற் கேற்ற ஓர் உயர் பதவியைத் தேடிக்கொண்டு விட்டாள். ஆன்மீகம், யோகா, தியானம், அறம், தானதர்மம் போன்ற பல வாழ்க்கைத் தத்துவங்களை செந்தில்நாதன் தன் புது மனைவியும் மற்றவர்களுக்கு தம்மை பெருமைப் படுத்திக் காட்டிக்கொள்ளாத மிக வசதியான வாழ்க்கை வாழ்ந்துகொண்டி ருக்கிறார்கள். செந்தில்நாதன் அவள் வேலை செய்வதையோ அல்லது வேலை செய்யாமல் இருப்பதையோ அவள் கைகளிலேயே விட்டுவிட்டான். அவளுக்கு அவ்வளவு பூரண சுதந்திரம் உண்டு என்பதை அவளும் அறிவாள். இவ்வாறு இவர்களின் குடும்ப வாழ்க்கை

சந்தோஷமாக 7வருடங்கள் உருண்டோடி விட்டன. ஆனாலும் வருடத்திற்கு இரு தடவைகளாவது செந்தில் நாதன் சென்னைக்கு தன் குடும்பத்துடன் லீவில் வந்து தன் பெற்றோர்களுடன் இரண்டு அல்லது மூன்று கிழமைகள் தங்கி செலவிடுவதை தவறாமல் செய்து வருகிறான்.

இரண்டு நாட்களின் முன்னர் செந்தில்நாதன் தன் கந்தோர் வேலை விடயமாக தனியே காசிக்கு செல்கிறான். காசியில் ஒரு நாள் மாலை இவன் வீதியால் நடந்து கொண்டிருக்கும் பொழுது, எதிரே ஆறு ஏழு சந்நியாசிகள் கூட்டமாக அதே வீதியால் எதிரே வந்துகொண்டிருந்தனர். இவன் அவர்களை விலத்தும்பொழுது அச்சந்நியாசிகள் கூட்டத்தி லிருந்து ஒரு சந்நியாசி இவனை நோக்கி அருகே வந்து, என்னைத் தெரிகிறதா என்று கேட்டார். காவி உடை, மிக மெலிந்த உடல், மிகநீண்ட தாடி, மீசை, தலையில் ஓரடிக்குமேல் நீண்ட முறுக்கேறிய சடைமுடி, உருத்திராட்ச மாலைகள், திருநீற்றுப் பூச்சு என்பவற்றால் இவனால் உடனடியாக அடையாளம் காணமுடியாவிட்டாலும் சொற்ப நேரத்தில் அச் சந்நியாசி பாலகுமார்தான் என்று அடையாளம் கண்டுகொண்டான். தான் காசியிலுள்ள ஒரு ஆச்சிரமத்தில் ஆறு வருடங்கள் ஆன்மீகம் கற்றுத்தேர்ந்து துறவு பூண்ட சந்நியாசி என்பதையும் மறந்து, தனது மனைவி மாலதியைப் பற்றி விசாரிக்கிறார். ஆறு வயதில் உன் மகன் கண்ணன் நன்றாக இருக்கிறான். அவனைப் பார்க்கணுமா? என்று செந்தில்நாதன் பாலகுமாரை திருப்பிக் கேட்கிறான். "வேண்டாம் வேண்டாம் அவங்களை நான் எந்த முகத்தை வைத்துக் கொண்டு பார்ப்பேன்? அவங்களைப் பார்ப்பதற்கு எனக்கு என்ன யோக்கியதை இருக்கிறது? நீயும் காஞ்சிபுரம் திரும்பிப் போகும்போது, என்னைப் பார்த்ததாக ஒருவரிடமும் தயவுசெய்து சொல்லாதே. நான் இங்கேயே இறுதிவரை என் காலத்தை கழிக்க விரும்புகிறேன். காஞ்சிபுரம் வந்தால் கிராமத்து சனமே என்னைக் கொன்றுவிடுவார்கள்" என்று மெதுவாகக் கூறிவிட்டு அச் சந்தியாசி கள் கூட்டத்துடன் சேர்ந்து விரைவாக நடந்து சென்று மறைந்துவிடுகிறார் அந்த துறவு பூண்ட சந்நியாசியாகிய பாலகுமார்.

காசியில் தன் அலுவலக வேலைகளை இரண்டு நாட்களில் சரிவர முடித்துவிட்டு செந்தில்நாதன் தனது டில்லி வீட்டிற்குத் திரும்புகிறான். அவன் வீட்டை அடையும் போது இரவு 10.00 மணியாகிவிட்டது. வீட்டு அழைப்பு மணியை அழுத்தாமல், தன்னிடமிருந்த மேலதிக வீட்டுத் திறப்பினால் வாசற்கதவை திறந்து உள்ளே சென்று மின்விளக்கை ஏற்றுகிறான். அங்கே அவன் கண்ட காட்சி "செந்தில் நாதனின் 4 வயது மகள்மீது கைபோட்டு அணைத்துத் தூங்கிக் கொண்டிருக்கிறான் 6 வயது மகன் கண்ணன் அவர்கள் அருகே நிம்மதியாகத் தூங்கிக்கொண்டிருக்கிறாள் அவ்விரு குழந்தைகளின் தாய் மாலதி, நான் அவளை எழுப்பாமல் மனநிம்மதியுடன் அவன் உடைகளை மாற்றத்தொடங்குகிறான்.

# நிம்மதி எங்கே?

தம்பி
அவுஸ்திரேலியா

அத்திபாரம் அதிக ஆழம் கீழே செல்ல
கட்டடங்கள் அதிக தூரம் மேலே செல்லும்

கொழுப்பளவு குருதியிலே கூடிச்செல்ல
இருதயத்தின் ஆயுட்காலம் குறைந்தேசெல்லும்

காட்டுவெள்ள வேகம்மெல்ல அதிகரிக்க
விருட்சமரமும் வேருடனே சாய்ந்தேபோகும்

ஆசை எண்ணம் மனதினிலே பெருக்கெடுக்க
மனிதநேயம் இதயத்திலே அடங்கிச் செல்லும்

பார்வை வேகம் மெல்லமெல்ல அதிகரிக்க
காட்சிவேகம் படிப்படியே குறைந்தே செல்லும்

இயற்கை நிலையின் சமநிலையைக் குழப்பி விட்டால்
பூமித்தாயின் அரவணைப்பு மறைந்தே போகும்.

தலைக்கனமும் தன்திணிவைக் கூட்டிவிட்டால்
பூமித்தாயும் தன்னருகே இழுத்துக்கொள்ளும்

உண்டியலிற் காசுபணம் போட்டுவிட்டால்
வேண்டும்வரம் உனக்கெதுவும் கிடைத்திடாது

குண்டூசி தன்தலையை இழந்துவிட்டால்
தடைகளின்றி அதிகதூரம் புகுந்தேசெல்லும்

வைத்தியரின் மருந்துகளை பூட்டிவைத்தால்
வைத்தியம்தான் தெரிந்திடாது உடலினின்று

இறைவனுக்கு அதிகலஞ்சம் கொடுப்பதாலே
இதயபாரம் உன்னைவிட்டு அகன்றிடாது

இதயபாரம் உன்னைவிட்டு இறங்கவேண்டின்
வறியமக்கள் இதயங்களைக் குளிரவைப்பீர்.

# செங்குந்த இந்துக்கல்லூரி அபிவிருத்திச்சங்க செயற்திட்ட அறிக்கை 2008 ஜனவரி 22 முதல் இன்றுவரை

**தியாகராஜா,**
செயலாளர்,
பாடசாலை அபிவிருத்திச்சங்கம்.



1934 ஆம் ஆண்டு காலப்பகுதியில் இந்தச் சூழலில் ஒரு சைவப் பாடசாலை உருவாவதற்கு இறைவன் திருவருள் கூடி இந்து போட் இஸ்தாபனத் தலைவர் திரு. ஆர் இராசரத்தினம் அவர்கள் அதற்குரிய காணிக்காகப் பலரிடமும் தொடர்பு கொண்டு ஈற்றில் சோதிட வைத்தியச் சிகாமணி திரு. ச. இளையதம்பி அவர்கள் மனம் உவந்து கொடுத்த தற்போது கல்லூரி இருக்கும் இக்காணியில் சங்கமடம் என்னும் பெயரில் ஒரு பாடசாலை ஆரம்பிக்கப்பட்டது.

இப்பாடசாலையின் வளர்ச்சி வருடாவருடம் உயர்ந்து செங்குந்த இந்துக் கல்லூரியாகி பல கல்வி மான்களையும் நல்ல பிரசைகளையும் உருவாக்கி இன்று மிகச் சிறப்பாக இயங்குகின்றது. இதன் வளர்ச்சிக் காக உதவிய அனைத்து பெரியோர்களுக்கும் நன்றி தெரிவித்துக் கொண்டு, இன்றைய கல்லூரி அபிவிருத்திச் சபையினரால் மேற்கொள்ளப்பட்ட கல்வி பௌதீக வளங்கள் சார்ந்த செயற்திட்டங்கள் பின்வருமாறு

1. ஏனோதானோ என இயங்கிக் கொண்டிருந்த கல்லூரியின் சிற்றுண்டிச் சாலை பகிரங்க கூறுவிலைக்கு விடப்பட்டு, ஒழுங்கு முறைக்கு அமைக்கப்பட்டது. இதே முறை ஒவ்வொரு வருடமும் பின்பற்றக் கூடிய முறையில் அமைந்துள்ளது.
2. இக்கல்லூரியில் க.பொ.த சாதாரணதரம் க.பொ.த உயர்தரம் படித்து சிறந்த பெறுபேறுகள் பெற்ற பிள்ளைகளைக் கௌரவித்து பரிசுகளும் கொடுக்கப்பட்டது. இதற்கான நிதியினை அவுஸ்திரேலியாவில் உள்ள எமது கல்லூரியின் பழைய மாணவர்களான திரு.தம்பி இராஜலிங்கம், திரு.சிறீபதி, திரு.எஸ்.துரைசிங்கம் ஆகியோர் தந்துதவினார்கள்.
3. பாடசாலையின் பிரதான மண்டபத்திற்குச் சிறந்த முறையில் மின் இணைப்புச் செய்து கொடுத்துள்ளோம். இதற்கான நிதியின் ஒரு பகுதியை பன்முகப்பட்ட வரவு செலவுத் திட்டத்தின் மூலம் பெற்றுக் கொண்டோம்.
4. ஆங்காங்கு சிதைவடைந்திருந்த கல்லூரி யின் கூரைகள் திருத்திக் கொடுத்துள் ளோம்.
5. மேல்மாடிக் கட்டிடத்திற்கு மழைநீர் அடிக்கா வண்ணம் மறைப்புச் சுவர் அமைத்து, அதே மாடிப் பாதுகாப்பிற்காகப் படிக்கட்டிற்கு இரும்புக் கதவும் அமைக்கப்பட்டது.
6. நூலகம் அமைந்துள்ள மாடி அறைக்கு மரக் கதவு பொருத்தப்பட்டது.
7. இதுவரைகாலமும் அசிங்கமாகக் காட்சி கொடுத்துக் கொண்டிருந்த உள் முற்றத்தின் பெரும்பகுதி துப்பரவு செய்யப்பட்டு அழகுபடுத்தப்பட்டது.
8. கல்லூரியின் முக்கிய பல தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளக் கூடியவகையில் ஒரு றோனியோ மெசினும் கொள்வனவு செய்து கல்லூரியின் பாவனையில் உள்ளன.

இதற்கான விதியினை அவுஸ்திரேலியா, பழைய மாணவர் சங்கத்தினர் தந்து உதவினார்கள்.

9. மாணவர்களின் துவிச்சக்கர வண்டிகள் வெய்யிலும் மழையிலும் இருந்து பாதுகாப்பதற்காக ஒரு கொட்டகை அமைத்துக் கொள்வதற்காக நாம் உதவி கேட்ட போது
திரு. சி. தனபாலசிங்கம் ரூபா 10.000/–
திரு. க. கந்தசாமி ரூபா 5000/–
திரு. S. றஞ்சன் ரூபா 5000/–
திரு. S. ஜெனிஸ் 5000/–
கல்லூரி மாணவர்கள் 700/–

டாக்டர் திரு.க. கணேசலிங்கம் மஸ்கெலியா 15000/– ரூபாவும் கல்லூரி மாணவர்கள் ஒரு பாக் சீமேந்தும் முருகையா குடும்பத்தினர் உரிய பனை மரங்களும் பழைய மாணவன் தர்மசீலன் அவர்கள் இரண்டு டிப்பர் கிறசரும் உதவினர். மிகுதிப் பணத்தைச் சிலரிடம் முற்பணமாக கடன் பட்டு எழுப்பது அடிநீளத்தில் மொத்தம் ரூபா 116000/– செலவில் உறுதியானதாக அமைத்துள்ளோம்.

10. கணினி அறையின் பாதுகாப்பைப் பலப்படுத்துவதற்காக அவுஸ்திரேலியா பழைய மாணவர் சங்க உதவியில் இரும்பு வலையினால் மறைப்பு அமைத்து கதவும் போடப்பட்டது. இவ்வேலைத் திட்டங்களைச் சிறப்பாக நிறைவேற்றும்போது ஏற்பட்ட பற்றாக்குறைகள் எமது அபிவிருத்திச் சங்க நிதியில் இருந்து நிறைவு செய்யப்பட்டன.

சிலவேலைத் திட்டங்களை ஆரம்பிப்பதற்கு முற்பணம் தேவைப்பட்ட போதெல்லாம் உதவி புரிந்த அபிவிருத்திச் சங்க உறுப்பினர்கட்கும் அவுஸ்திரேலியா, உள்ளூர் பழைய மாணவர் சங்கத்தினருக்கும், ஏனைய அன்பர்கட்கும் எமது நன்றிகள். மேலும் இக்கல்லூரியின் சகல வளர்ச்சியிலும் கருணை உள்ளம் கொண்ட அனைவரும் உதவி செய்ய வேண்டும் எனக் கேட்டுக்கொண்டு இன்றைய விழாவின் சகல நிகழ்வுகளும் சிறப்பாக அமைய எமது நல் வாழ்த்துக்கள்.



இ. சோபனா, 11[B]

# கொடுமை

மணமான பெண்ணுக்கு
மாமியார் கொடுமை
வரன் வந்த பெண்ணுக்கு
வரதட்சணைக் கொடுமை
பிள்ளையில்லாப் பெண்ணுக்கு
பின் மலடி என்ற கொடுமை
கல்வியில்லாப் பெண்ணுக்கு
கற்றவர் கொடுப்பது முட்டாள் என்ற கொடுமை
கணவனை இழந்த பெண்ணுக்கு
கண்ணீரோடு விதவை என்ற கொடுமை
பெற்றோர் இல்லாத பெண்ணுக்கு
பெரும் அநாதை என்ற கொடுமை
கொடுமை கொடுமை கொடுமை
கொடுப்பது அந்த வலிமை.

# துயரங்கள்

துடிக்கும் மனிதனின் நெஞ்சம்
பிஞ்சு மனசும் அதில் – வலி
கண்ட வழிகளும்
அதிற் கலந்து வரும் கண்ணீர் துளிகளும்
துயரம் கண்ட இதயமும்
அதில் பெரும் துன்பம் கண்ட மனசும்
என்றும் மறக்கத்தான் முடியுமா?
நீண்ட துயரங்களினால்
அதில் ஏற்பட்ட பிரிவுகளும்
என்று அழியாத ஓர்
மனிதனின் வாழ்க்கையினிலே
இந்தப் பெரும் அவலமாக
இன்றும் என்றும்.....



உ. தர்சன், *G.C.E O/L*



Foot Ball Team 2008 - 2009



Volley Ball Team 2008 - 2009



Cricket Team 2008 - 2009

# சுனாமி

சுனாமியே நீ ஏன் வந்தாய்
ஏன் என்னை மாத்திரம் தவிக்கவிட்டாய்

மணல் வீடு கட்டி மகிழும் பருவத்தில்
மண்ணோடு போனது என் உறவு

கடலில் உடைந்தாடும் ஓர் ஓடம் கூட
கண்பார்க்க கரை வந்து சேரும்

என் உறவை கடல் அடித்துச் செல்ல
கைநீட்டிப் பார்த்தேன் முடியாத கோலம்

என் நிம்மதி போனது எங்கே
என் கண்மணி உறவுகளை இனி
எப்போ நான் காண்பேன்

சுனாமியே நீ இன்னொரு முறை வராதே.



**உ. லபேசன், 9ᴬ**

# சிவந்த மண்



இலங்கையிலே நான் பிறந்த மண் சிவந்த மண்
என் கால் வைத்து நடந்த மண்ணும் சிவந்த மண்
இப்போது நான் வாழும் மண்ணும் அதே மண்
இன்று மனித இரத்தத்தால் சிவந்த மண்ணும் அதே மண்

விவசாயிகளின் நம்பிக்கை சிவந்த மண்
அவர்களின் வாழ்வை ஒளிமயமாக்கியதும் அதே மண்
விவசாயிகளின் வாழ்வின் மூலதனமும் அதே மண்
அவர்களின் உற்பத்தியின் நம்பிக்கை நட்சத்திரமும் அதே மண்

குயவர்களின் வாழ்வை வளம்பெற வைத்ததும் அதே மண்
அவர்களின் உற்பத்தியின் வளமும் அந்தமண்
பல மட்பாண்டங்கள் உருவானதும் அதேமண்ணால்
குயவனின் முழு நம்பிக்கையுமே எம் நாட்டு சிவந்த மண்.

**பர்மிலன்,** தரம் 13

# வரலாறு சுமந்த சமாதானம்

என்னருமைத் தாய் மண்ணே
எப்படி இருக்கிறாய் நீ
சன்னமும் சத்தமும் ஓய்ந்து
இலங்கையில் சமாதானப்புறா – பறக்குதாமே
குண்டு பட்ட தென்னைகள் குலை தள்ளி வளர்ந்துள்ளனவா?

யாழ்ப்பாணத்தில் பனைச்சீசன் தொடங்கிற்றா?
நுவரெலியா உருளைக்கிழங்கு யாழ் நோக்கி வருகிறதா?
வல்லை வெளியிலே வந்தமரும் சைபிரிய கொக்குகளை
தொல்லை தரும் உங்கள் வீரர்களின் எறிகணைகள் இப்பவும் – துரத்துகிறதா?
பாணிப்பனாட்டு பருத்தித்துறை வடை கருப்பணி என்று
தேடித்தின்றோமே அது ஓர் வசந்த காலம்
அந்த பசுமை நினைவு மறையுமா?

கோட்டை முனியப்பரும் நல்லூர்க் கந்தனும் குறைஇன்றி உள்ளாரா?
தெல்லிப்பளை துர்க்கை அம்மனைக் கேட்டதாகச் சொல்லுங்கோ
இலங்கைத்தாய் அவள்
இரு தசாப்தங்களாக
சுமக்கும் சமாதானக் கருவை
சுகப்பிரசவமாக்க
யார் நீட்டப்போகிறார் பாசக்கரம்?



புக்காரா குண்டால் புலம்பெயர்ந்த நம்மக்கள்
நில்லாமல் இல்லம் திரும்புவாரா
இலங்கை மக்கள் வாழ்வில்
ஆரோக்கியமான சமாதானம்
நிரந்தரமாய் சரிவருமா ! – இல்லை
பள்ளிதான் ஒழுங்காய் நடந்திடுமா?
படித்துத்தான் பட்டம் பெறுவோமா?
யார் பதில் சொல்வார்கள்?
என் பேனை முனை கேட்கிறது.

ம. பகிரதன்

# இயற்கையின் சீற்றம் சுனாமியின் கொடூரம்
# கடலே பதில் கூறு

அலைந்து வரும் அலைகளிலே
மிதந்து வரும் கானங்களை
மீட்டிய நெஞ்சம் இன்று
மிரளுவதும் ஏனோ?
மின்சார வேகத்திலே
மின்னலெனப் பாய்ந்த
சுனாமியினாலோ?



ஆனந்தத்தில் மிதந்த
ஆயிரம் ஆயிரம் நெஞ்சங்கள்
மண்ணோடு மண்ணாய்
போனதும் ஏனோ? – கடல்
காவெடுக்க கரைக்கு
விரைந்ததும் ஏனோ?

கடலே நிஜத்திலும் மணல்
கோட்டைகளைக் கட்டிய – கனவு
சிறுவர்கள் இன்று கல்லறைகளிலும்
அதனால் கதறிய நெஞ்சங்கள்
மீளாத்துயரில் மீண்டதும் ஏனோ?

கடலே ! உன் வெறிக்கு
காரணமானது யாரோ? – பதில்
கூறிட முன்வருவாயோ?
உலகமே உனைக் கண்டு கதிகலங்க
கண்மணி நானே கவி வடித்தேனே
கனாக் காணும் வயதினிலே
கல்லறையில் மிதக்கும்
சிறுவருக்குப் பதில் கூற
முன்வருவாயோ?

உலகத்தில் உனைக் காண

உல்லாசப் பயணிகளுக்கும்
ஊர் சுற்றும் ஊதாரிகளும்
உய்யாரமாய் வந்திட – நீ
உயர்ந்து காவெடுக்க
காரணமும் ஏதோ – உள்ளமதைத்
தொட்டு உண்மை கூறிடுவாயோ?

கடலின் கரையிலே தினம்
காத்திருக்கும் நெஞ்சங்களுக்குக்
கனவையே அளித்திட்ட
கடலே ! கண்ணால் வழிந்திடும்
நீரை நீயே தீர்த்திடுவாயோ
நிஜமாய் பதில் கூறிடுவாயோ?

காசுக்காய் உனை மீனவர்கள் – துடுப்பிட்டு
வலித்ததனால் – சீறினாயோ?
உடல் வலித்திடவே – உலகமறிய வாழ்வுக்கு
உலை வைத்து பழி தீர்த்தனையோ?
பதில் தேடும் பாலகி நான்
வினவுகின்றேன் – பதில் கூறு?
உண்பதில் வரும் வரைக்கும் – வாழ்வில்
காத்திருப்பேன்.

ஏய் கடலே ! கடைசி வரை
காத்திருப்பேன்.

நீ காவு எடுக்கக் காரணம்
யார்?

பதில் கூறு?



**வி. வித்தியா**
2010 கலைப்பிரிவு

# நாம் காணும் உலகம்

ஆயிரம் கனவுகள் கண்களில்
ஆற்றிடத் தெய்வம் நெஞ்சினில்
ஓடிடும் உறவுகள் நெஞ்சினில் – ஆனால்
மனப்பயம் மட்டும் கண்களில்

ஏனோ கலங்குகிறாய்?
எதையோ தேடுகிறாய்?
சாவு நமக்கொன்றும் புதுதில்லையே?
உயிருக்கும் பெறுமதி இங்கில்லையே

ஒவ்வொரு விடியலும் சாபமோ?
தமிழரின் கனவுகள் கலைந்திடுமோ
சாதிக்கப் பிறந்தவர் நாமில்லையோ?
தோல்விகள் எங்கள் தலைவிதிதான்

எதிர்கால வாழ்க்கை நரகத்திலோ
யமனின் தூதர் தமிழர்களோ
அந்நியர் ஆதிக்கம் எம்மீதோ
உலகத்தின் பழிபாவம் நாம் தானோ?

தமிழராய்ப் பிறப்பது சாபமோ?
நரகம் என்பது ஈழநேசமோ?
அன்பு பரிவு இங்கில்லையோ?
அடக்கு முறைதான் நியாயமோ?

முரட்டுத்தனமான அரசியலால் ஏற்பட்ட
கருத்து வேறுபாட்டால்
முற்றிக்கொண்டு இருதசாப்தம் ஆயிற்று
முரண்பாடு மட்டும் நீங்கவில்லை

நால் மதமும் தவமும் இனிய நாட்டில்
அண்ணவாய் தம்பியாய் வாழவேண்டியவர்
மோதலில் ஈடுபடல் முறைதானோ
இரத்தப் பாசம் இங்கில்லையோ?

காலச்சுவடுகளில் உதித்து உதிர்ந்த மலர்கள்
காலப் பதிப்புக்களில் வந்து போன பக்கங்கள்
துயரங்களைத் துடைக்க வந்து போன கண்ணீர்கள்
ஒருநாள் நிஜமாக உருமாறும்.

பா. கணநாதன்
தரம் 13



## My Best Friend

My best friend is Vithusana. She is 12 years old. She lives at No. 47, Vinayagar Veethy, Nallur North. Her father is a business man. Her mother is a house wife. She has one sister and two brothers. She likes to study History. Her favourite colour is blue. Her pet is a cat. She likes to eat fish. She likes to wear skirt and blouse. Her hobby is reading story books.

*G.Selvija*
*Grade - 7A*

## Problems of Learning English

English is not our mother language it's our second language. So we won't use English language like Tamil. All the people who are in our country don't know English well. Some of the people know English. So all are facing difficulties to study English from their childhood. Basement is important to study a language. If they don't study basically. It is difficult to speak English.

English is not compulsory subject. So the pupils don't study carefully. They don't give importance to study this language. So it will become a problem to them. So if we make all of us to study English government should change their education system and should keep English as compulsory subject.

And teacher resource also not enough to teach English. If pupils concentrate and paying attention in English it won't become a problem.

***K.Dishanthan***
*A/L - 2011*

# Peace - My dream

I have a very pleasant dream. It is to see a beautiful, friendly, peaceful country. I like to be a criminal investigator, when I grow up. So that I can help the people to live peacefully in a country without crimes.

Sri Lanka is a beautiful country. It is the home of four main ethnic groups who are of different religious faiths. But almost daily there are disputes among them. There are a certain group of tamils who are not for peace and some sinhalese are selfish and extreme in their views. But I think all are humans with the same blood circulations in their bodies. There is no difference of colour in their blood.

I think every one snoura think seriously about this situation, so that we can build a beautiful country where peace exists. This will also help us to develop the country and make it prosperous. This is what I have been dreaming of since i was a little child.

***U.Asothan***
*Grade - 9A*

# My Pretty Doll

My doll my doll
My pretty doll
With twinkling eyes
Every all admire

Her name is sweety
I call her Rosy
As her cheeks so Rosy
With apple red chin

When I wind her up
She dances left and right
Then top less on the floor
And up in the air

She tards to and fro
Kneels down on the floor
Her eyes twinkle fine
As lighting in the sky.

My rosy doll
I love you forever
Come and dance eith me
To make me happy too.

***Tensika***
*Grade - 6B*

# Information Technology and Business Communication

Information technology or IT is the equipment and the methods use to handle information. Modern information technology combines electronics and transmitted. Radios, Televisions, Telephones, Fax-Machines and Computers are some of the types of equipment used of information technology. Computers are linked together with the Internet through telephone and satellite facilities. Soft ware like e-mail and voice mail can be use to access and transmit information.

The telephone and television have now become part of our life. In the same way, the computer and the internet will become essential features of our life. We will automatically turn to for communication, entertainment, education, medical advice or shopping. If we want to buy a house or sell a house, use the internet. Commercial transactions can also be done on the World Wide Web, by passing banks shops and middleman. Internet users can get all the information they need.

Access to information anywhere to the world is available at one's fingertips through the World Wide Web. The progress of information technology will also result in more effective and human ways of preventing , detecting and treating disease. Computer generated three dimensional images of body areas will enable doctors to have to clear picture prior treatment.

***V.Barmilan***
*A/L -2010*

# My Self

My name is Ajinthan. I live at Kalviyankadu. My father is Arulgnanam. My mother is Thayanithy. My father is a driver and my mother is a house wife. There are six members in my family. I have three brothers and one sisters. I' m a student of J/Senguntha Hindu College. I' m in Grade 6. My friends call me Agi. My date of birth is 15th August 1998. My hobbies are stamp collecting and photography. I go to school by bus. I like to learn English. My ambition is to be a doctor.

***A.Ajinthan***
*Grade - 6A*



## Friend ship

Some ships are gold
Some ships are silver
Some ships are good
Some ships are old
But the ship is
Friend best ship.

***B.Rangitha***
**O/L - 2009**

## World of Peace

I Wish the world
Were a world of peace,
Then I' m sure it would be
A world of ease
Between the nations
There'd be friendly relations
And there would not be
A single war
Sri Lanka being friendly
Neighbours
People from both
Our nations needs peace
Solution.

***R.Srichanthirika***
*O/L - 2009*

# நாடு போற்ற நல்லவராக வாழ்வதற்கு...

"மனிதன் என்பவன் தெய்வமாகலாம். அவன் வாரி வாரி வழங்கும் போது வள்ளல் ஆகலாம்" என்றொரு பாடல் இருக்கிறது. ஆம். பிறப்பால் மனிதனாய் பிறந்த ஒருவன் தனது நடத்தைகளால், வாழ்க்கை முறைகளால் தெய்வமாக உயரமுடியும் என்பது இதில் இருந்து புலனாகின்றது.

ஒரு குழந்தையின் ஆரம்பப் பாடசாலை அன்னையின் மடியாகும். பின்பு வீடு, பாடசாலை. சமூகம் என்று குழந்தையின் தொடர்புகள் விரிந்து செல்கின்றது. தாயானவள் தன் உதிரம் தந்து சேயை உருவாக்குகின்றாள். பத்து மாதம் சுமந்து பெற்று பாலூட்டிச் சீராட்டி அயராது பல நாட்கள் கண் விளித்து "கண்ணை இமை காப்பது போல" வளர்ப்பவள் எம் தாய். எனவே நாம் முதலில் கண்கண்ட தெய்வங்கள் அன்னையும் தந்தையும் ஆகும். வானுக்கு ஒளியைக் கொடுப்பது சூரியன் சந்திரன் போன்றும் வாழ்க்கைக்கு ஒளி கொடுப்வர்கள் தாயும் தந்தையுமே. அவர்களை மதித்து அவர்கள் சொற்கேட்டு நடப்பது நம் தலையாய கடமையாகும். "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்", "அன்னையைப் போல் ஒரு தெய்வ மில்லை", "தாயிற் சிறந்ததொரு கோயிலு மில்லை, தந்தை சொல் மிக்க மந்திரமில்லை" என்னும் பொன்மொழிகள் அன்னை தந்தையின் சிறப்பை உணர்த்துவனவாக அமைகின்றன.

நான்கு குரவர்களாக மதித்துப் போற்றப் படுபவர்கள் "மாதா, பிதா, குரு, தெய்வம்" என்பவர்களாவார். "எழுத்தறிவித்தவன் இறைவன் ஆவான்." எனவே எழுத்தறிவு ஊட்டிக் கல்வி தரும் தெய்வம் குரு ஆவார். குருவை மதித்துப் போற்ற வேண்டும். அவர் தரும் பாடங்களை எல்லாம் ஒழுங்காகச் செவிமடுத்துக் கற்கவேண்டும். பாடசாலைக்கு ஒழுங்காகச் செல்லுதல் வேண்டும். ஆசிரியர் களை வீதியிற் கண்டால் அவர்களுக்கு மரியாதை செலுத்த வேண்டும். வயதுக்கு மூத்தவர்களை மதித்து நடத்தல் வேண்டும். ஏழைகள், வயோதிபர்கள், அங்கவீனர்களைக் கண்டால் அவர்களை ஏளனம் செய்யாது அனுதாபம் காட்டி உதவி செய்ய வேண்டும். எனவே நாடு போற்ற நல்லவர்களாக வாழ வேண்டுமாயின், வீட்டிற்கு நல்ல பிள்ளை யாகவும், சமூகத்துக்கும் உதவுபவர்களாய் மாறவேண்டும். எமது நாட்டில் தமிழ் மொழிக்கும், சமயத்துக்கும் தொண்டு செய்த பெரியார்கள் பலர் உள்ளனர். அவர்களுள் ஆறுமுகநாவலர், சேர். பொன். இராமநாதன், விபுலானந்த அடிகள் போன்ற பலர் முன்பு நாடு போற்றும் நல்லவர் களாக வாழ்ந்தனர். அவ்வாறே பிற நாடுகளில் மகாத்மா காந்தி, ஆபிரகாம் லிங்கன் போன்ற பல பெரியார்கள் தோன்றி நாட்டுக்கும் சமூகத்துக்கும் தொண்டு செய்தனர். அதனாற் றான் அவர்களின் பூதவுடல் அழிந்தாலும் புகழுடல் அழியாது நிலைத்து இன்றும் பலர் போற்ற நிலைத்து வாழ்கின்றது.

அதேபோல நாடு போற்றும் நல்லவர்களாக வாழ வேண்டுமாயின், பஞ்சமாபாதகங்கள் எனப்படும் "பொய் பேசுதல், களவெடுத்தல், மது அருந்துதல், மாமிசம் புசித்தல், நெறி கெட்டு வாழ்தல் போன்ற தீய பண்புகளைவிட்டு விலகி நடப்பது நன்று. பிற உயிர்கள்மீது

இரக்கமுடையவர்களாக வாழவேண்டும். தீய பழக்கங்கள் உடையவர்களை நல்லவர்களாக மாற்ற முயற்சிக்கலாம். முடியாவிட்டால், அவர்களுடன் நட்பு வைக்காது விலகி நடப்பது சிறந்தது. நல்லவர்களையே நண்பர்களாகக் கொள்ளவேண்டும்.

"அன்பே சிவம்" என்று சைவசமயம் கூறுகின்றது. அன்புதான் கடவுள் என்று கிறிஸ்தவ மதமும் ஏனைய மதங்களும் கூறுகின்றன. இதனையே தெய்வப்புலவர் திருவள்ளுவரும் தனது "அன்புடைமை" என்னும் அதிகாரத்தின்மூலம் அழகாகக் கூறுகின்றார். எந்த மதமும் அன்புக்கு முக்கியத்துவம் கொடுப்பதால் மனிதர்கள் இன, மத, மொழி வேறுபாடின்றி ஒற்றுமை யாக வாழவேண்டும். நாம் எமது சமயத்திற்கு எவ்வாறு மதிப்புக் கொடுக்கிறோமோ அதேபோல பிறருடைய மொழி, சமயத்திற்கும் மதிப்புக் கொடுத்து நடக்க வேண்டும்.

சுயநலம் கருதாது தன்னைப்போல பிறரையும் எண்ணி பிறருக்கு விட்டுக் கொடுக்கும் மனப்பாங்கு உள்ளவர்களா கவும் வாழவேண்டும். உடல்விருத்தி, உளவிருத்தி, சமூகவிருத்தி என்பன உடையவர்களாக நாம் விளங்குவோமாயின், நாடு போற்றும் நல்லவர்களாக உயரமுடியும். அத்துடன் சுத்தம் காத்துச் சுகத்தைப் பேணி வாழ்வோமாயின் நோயற்ற வாழ்வு அனை வருக்கும் கிடைக்கும். "நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்" என்பது முதுமொழி. ஆளுமைவிருத்தி எமக்கு நன்மதிப்பைத் தேடித்தரும்.

பேராசை, கோபம், பொறாமை என்பன மனிதனை ஆட்டிப்படைக்கும் பேய்களாகும். எனவே மனிதனிடம் பொறுமை, நீதி, நேர்மை, ஒழுக்கம், இரக்கம் போன்ற குணங்கள் விருத்தியடையும்போது அவன் தெய்வத் திற்கு சமனாகின்றான். தன்னை உருக்கி ஒளி கொடுக்கும் மெழுகுவர்த்தியைப்போல் தியாக மகப்பாங்கு வளரும்போது நாம் நாடு போற்றும் நல்லவர்களாக விளங்குவோம் என்பதில் சிறிதேனும் ஐயமில்லை.

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் –
வானுறையும்
தெய்வத்துள் வைக்கப்படும்."

**தே. சுவேத்தா, 10$^{B}$**

# மத்திய கால ஆசியாவில் இஸ்லாம் மதத்தின் பரவலும் அதனால் இந்தியாவில் ஏற்பட்ட தாக்கங்களும்

முஸ்லிம் பேரரசு மத்தியகால ஆசியாவின் மிகவும் பலம் பொருந்திய பேரரசாக விளங்கியது. இக்காலப்பகுதியில் துருக்கியில் ஒட்டோமன் பேரரசு தோன்றி முஸ்லிம் பேரரசை மேலும் வலுவூட்டியது இஸ்லாம் சமயம் புதிய பிரதேசங்களைக் கைப்பற்றிப் பரவிச் சென்றது. வடமேல் கைபர் கணவாயூடாக இந்தியாவை நோக்கியும் இஸ்லாமிய சாம்ராஜ்யம் விரிவடைந்தது.

இஸ்லாம் சமயத்தின் ஆரம்ப கர்த்தாவாகிய முகமத்ர் நபி அவர்கள் கி.பி. 632 இல் மரணமடைந்ததை அடுத்து ஆட்சிப் பாதுகாப்பு சமயப் பிரசாரம் என்பனவற்றிற்குப் பொறுக்காக கலீபா நியமிக்கப்பட்டார். இஸ்லாமியப் பரவலுக்குத் தடையாக அமைந்தவற்றை வெற்றி கொள்வதற்கு 'ஜிகாத் போர்" எனும் புனிதப் போர் நடைபெற்றது. இந்தியாவில் பரவிய இஸ்லாம் சமயம் பல தாக்கங்களை ஏற்படுத்தியது.

அவையாவன:

1. வடமேல் மேற்கு இந்தியாவில் முஸ்லீம் ஆட்சிப் பரம்பல்
2. டில்லி சுல்தான் பேரரசு
3. மொகாலயப் பேரரசு
4. தக்கணத்தில் பகமன் இராச்சியம்

என்பனவாகும்.

**வடமேல் மேற்கு இந்தியாவில் முஸ்லீம் இராச்சியம் பரவியமை**

கி.பி 700 களின் முற்பகுதியில் ஆரம்பமான அரேபியரின் ஆக்கிரமிப்பு வடமேல் மேற்கு இந்தியப்பகுதிகளில் மிக நீண்ட காலத்திற்கு உறுதிமிக்க இஸ்லாமிய ஆட்சிப் பரம்பலிற்கு ஏதுவாகியது மத்தியகாலத்தில் சீனாவிற்கும் அரேபியாவிற்கும் இடையே இடம்பெற்று வந்த கடல் மற்றும் தரைமார்க்கப் பட்டுப் பாதை வர்த்தகத்தில் அரேபியர்கள் தமது ஆதிக்கத்தை நிலைநாட்ட விரும்பினர். இதனால் இந்தியாவில் மேற்குப் பகுதிகளைத் தமது ஆட்சிக்குட் படுத்தினர். கி.பி.1711 இல் முகமத்இப்னுகாஸிம் தலைமையிலான படை இந்தியாவின் சிந்துப் பிரதேசத்தைக் கைப்பற்றியது.

மேற்கிந்தியப் பிரதேச மக்கள் பௌத்தம், இந்து எனச் சமய ரீதியாகப் பிளவுபட்டிருந்தமை, ஆட்சி செய்த தாஹிர் மன்னது பலவீனம், பாதிப்புற்ற சிறுபான்மையினரின் ஆதரவு, உள்நாட்டு மக்கள் மூட நம்பிக்கையடிப்படையில் யுத்தத்திலீடுபடாமை, அரேபியரின் போராற்றல் என்பனவற்றின் காரணமாகவே மேற்கு இந்தியாவை இலகுவாக அராபியர் ஆக்கிரமித்தனர்.

150 ஆண்டுகள் மேற்கிந்தியா அராபியராட்சிக்குட்பட்டிருந்தது இவ்வேளையில் வட இந்தியா பல சிறிய இந்து இராச்சியங் களைக் கொண்டிருந்தது. அவற்றிற்கிடையே ஒற்றுமையின்மை காணப்பட்டது. ஆப்பானிஸ்தானில் சுயாதீன முஸ்லீம் ஆட்சி பரவியிருந்தது. முஸ்லிம் ஆட்சியாளர்கள் கலீபாக்களின் அரசியல் ஆதிக்கத்தில் இருந்து விடுபட்டுச் சுயாதீன முஸ்லீம் ஆட்சியை ஆப்கானிஸ்தான் கஜ்னி பிரதேசத்தில் அமைத்தனர். கஜ்னி பிரதேச முதல் மன்னன் அலிப்ஜிதின், அவனைத் தொடர்ந்து சபுக்திஜின், மக்முத் போன்றோர் ஆட்சிபுரிந்தனர்.

கோரி முகம்மதுவின் ஆட்சிக்காலத்தில் இந்தியாவில் முஸ்லீம் ஆட்சிப்பரவல் பல விதங்களில் இடம் பெற்றது. கோரிபிரதேச முஸ்லீம் ஆட்சியாளர்கள் கி.பி 1151 இல் கஜ்னி இராச்சியத்தைக் கைப்பற்றினர். முதன் முதலில் போலன் கணவாயூடாக வட இந்தியாவிற்குப் படையெடுத்து வந்த முல்தான் கஜ்னியைக் கைப்பற்றிப் பின் வட இந்தியாவிலும், கிழக்கிந்தியாவிலும் பல பகுதிகளில் முஸ்லீம் ஆட்சியை ஸ்திரப்படுத்தி பிற்காலத்தில் முஸ்லிம் பேரரசு உருவாக வழிவகுத்தான். கோரி மஹ்முத்தீனின் மரணத்தையடுத்து குதுபுத்தீன் அய்பெக் தலைமையில் டில்லியை மையமாகக் கொண்டு புதிய அரச வம்சத்தின் ஆட்சி ஆரம்பமானது.

### டில்லி சுல்தான் பேரரசு (கி.பி.1200 - 1525 வரை)

13ஆம் நூற்றாண்டு முதல் 16ஆம் நூற்றாண்டு வரை டில்லியிருந்து நடாத்தப் பட்டது முஸ்லிம் சாம்ராஜ்யம் ஆகும். இதனை டில்லியைத் தலைநகராகக் கொண்டு குதுபுதீன் அய்பெக் மன்னன் ஆண்டான். இந்தியா முழுவதும் இப்பேரரசை விரிவு படுத்த முயன்ற போதும் தக்கணத்திற்கு அப்பால் பரவ முடியாமலிருந்தது. டில்லி சுல்த்தான் பேரரசை குதுபுத்தீன் அய்பெக் மன்னனைத் தொடர்ந்து சியாஸீத்தின் பல்பன், அலாவுதீன் கல்ஜி, துக்ளக், முகமத் பின் துக்ளக் போன்ற மன்னர்கள் ஆட்சி புரிந்தனர். இவர்கள் பலம் மிக்க மன்னர்களாகக் காணப்பட்ட போதிலும் பல காரணங்களால் டில்லி சுல்தான் பேரரசு வீழ்ச்சி கண்டது.

அவையாவன:

1. பிராந்திய அரசுகள் அனைத்தையும் டில்லி சுல்த்தான் பேரரசினால் ஒரே நிர்வாகத்தின் கீழ் கொண்டு வர முடியாதிருந்தமை.
2. மக்கள் இன்னல்களை எதிர்கொண்டமையால் அமைதியின்மை தோன்றியமை.
3. மக்கள் துன்புறுத்தப்பட்டமை (பலவீனமான மன்னராட்சிக் காலங்களில் பிராந்திய மன்னர்கள் மக்களைத் துன்புறுத்தி வரிகள் சேர்த்தமை)
4. செல்வந்தர்களும் பிரபுக்களும் மன்னருக் கெதிராக எழுச்சியடைந்தமை.
5. இஸ்லாமிய ஆட்சி முறைகளை நிரப்பந்தித்து இந்துக்களிடையே வெறுப்புணர்வை ஏற்படுத்தியமை.
6. டில்லி சுல்தான் பலவீனமடைந்த வேளையில் முஸ்லீம் அரச வம்சங்களிடையே அரசு கைமாறியமை.

டில்லி சுல்த்தான் பேரரசு ஒரு பிரம்மாண்டமானதாக இருந்து வந்தமையாலும், பல்வேறு பிரதேசங்களிலிருந்தும் படையெடுப்புக்கள் இடம் பெற்றமையாலும், அப்பேரரசை பாதுகாத்துக் கொள்ள முடியாத நிலை உருவாகியது. அந்த நிலையில் துருக்கி இனத்தவரான பாபா என்ற மன்னர் படிப்படியாக டில்லிமீது ஆக்கிரமிப்பு நடத்தி மொகலாயர்களின் ஆட்சியை இந்தியாவில் நிறுவினான்.

### மொகாலயப் பேரரசு (கி.பி.1526 - 1707 வரை)

கி.பி 1526 இல் டில்லியை பாபர் எனும் அரசன் கைப்பற்றினான். அவனின் தலைமையில் மொகலாயரின் ஆட்சி ஆரம்பமாகியது. இதன் மூலம் இந்தியாவில் முஸ்லீம்களின் ஆட்சி மீண்டும் நிலைபெற்றது. ஹுமாயூன் ஆட்சியின் போது பெஷாவர் லாஹூர் வரை மொஹலாயரின் ஆதிக்கம் பரவிக் காணப்பட்டது. தென்னிந்திய பகுதிகளும் தக்கணப் பிரதேசமும் சுதந்திர அரசுகளாக விளங்கின. பாபர் மன்னனைத் தொடர்ந்து அக்பர், ஜகாங்கீர், சாஜகான், ஔரங்கசீப் போன்ற மன்னர்கள் ஆட்சி

செய்தனர். ஔரங்கசீப் மன்னனின் காலத்தில் மொகாலயப் பேரரசு வீழ்ச்சியடைந்திருந்தது. இவனது ஆட்சியுடன் இந்தியாவில் முஸ்லிம் ஆட்சி முடிவுக்கு வந்தது.

**தக்கணத்தில் பகமன் இராச்சியம் (கி.பி.1347 - 1526 வரை)**

இது இந்தியாவின் தக்கண பிரதேசத்திலிருந்து வந்த பலமான ஒரு முஸ்லீம் இராச்சியமாகும். இவ்விராச்சியம் கி.பி. 1347 – 1526 வரை தக்கணப்பிரதேசத்தில் பலம் வாய்ந்த இராச்சியமாக விளங்கியது. டில்லி சுல்தான் பேரரசின் ஆட்சியாளர் பின் துக்ளக்கின் மோசமான வரிக் கொள்கையில் வெறுப்புற்று தக்கணத்திலிருந்த முஸ்லிம் பிரிவுகள் டில்லி சுல்தான் பேரரசின் ஆட்சிகெதிராகக் கிளர்ச்சி செய்து 1347இல் "தௌலதாபாத்" நகரைக் கைப்பற்றிச் சுயாட்சியை அமைத்துக் கொண்டனர். அதனையடுத்து பாரசீக வம்சத்தைச் சேர்ந்த பகமன்ஷா என்ற மன்னனின் கீழ் பகமனி இராச்சியம் ஆரம்பமாகியது. பகமனி இராச்சியத்தை அலிபுத்தீன் பகமன்ஷாவைத் தொடர்ந்து தாஜீத்தீன் பிருஷ்ஷா, அகமட்ஷா போன்ற மன்னர்கள் ஆட்சி புரிந்தனர்.

பலம் வாய்ந்த விஜய நகரப் பேரரசை கைப்பற்ற முடியாமையால் பகமனி இராச்சியத்தைத் தெற்கு நோக்கி விரிவாக்க முடியவில்லை. பகமனிய அரசர்கள் பெரும்போலோர் விஜயநகரப் பேரரசுடன் அடிக்கடி போர் செய்ததால் ஆட்சி உறுதியற்றதாகியது. இஸ்லாத்தைத் தழுவிய உள்நாட்டு மக்கள் வெளிநாட்டிலிருந்து வந்து குடியேறிய இஸ்லாமியர் என்ற ஒரு பிரிவினரிடையே உள்நாட்டு மோதல்கள் காரணமாக ஆட்சி சீர் குலைந்தது. இதனால் இராச்சியம் பிரிந்தது. பகமனி இராச்சியத்தின் மூலம் தென்னிந்திய முஸ்லீம் ஆட்சிப் பரவலும் இஸ்லாம் சமயப் பரவலும் இடம்பெற்றது.

இந்தியாவில் இஸ்லாம் சமயம் பரவியதால் பல தாக்கங்கள் ஏற்பட்டுள்ளன.
அவையாவன:

1. வட இந்திய மொழி, இலக்கியம், சமயம், கலைகள் என்பவற்றில் பாரசீகச் செல்வாக்கு ஏற்பட்டது.
2. அரச அனுசரணை கிடைத்தமையால் இலக்கியம் பெருவளர்ச்சி கண்டது. இஸ்லாம் கலைகள் பற்றிப் பல நூல்கள் எழுதப்பட்டன.
3. அக்பரின் ஆட்சிக்காலத்தில் இலக்கிய வளர்ச்சிக்குப் பாரிய பங்களிப்புக் கிடைத்தது.
4. இராமாணயம், மகாபாரதம், ராஜதரங்கிணி, ஹரிசம்சம், பஞ்சதந்திரம், என்பன பாரசீக மொழியில் மொழிபெயர்க்கப்பட்டன.
5. மொகலாயர் காலத்தில் ஓவியக்கலை வளர்ச்சி அடைந்தது.
6. தேசிய இசையும் பாரசீகர்களின் இசையும் கலந்த ஓர் இசை பிரபல்யமானது.
7. வட இந்தியக் கட்டடக் கலையில் பாரிய மாற்றம் ஏற்பட்டது இந்து முஸ்லீம் கலப்புச் சார்ந்த கட்டடக்கலை தோன்றியது கட்டடங்களின் தூண்கள் செதுக்கல் வேலைப்பாடுகள் என்பனவற்றுடன் கூடிய கட்டக்கலை தோன்றியது.

குப்தர் யுகம் இந்திய வரலாற்றின் பொற்காலம் எனலாம். எனினும் இஸ்லாம் வரலாற்றின் செல்வாக்கின் மூலம் அதி உன்னத ஒரு கலாசாரம் இருந்துள்ளது என்பது தெளிவான உண்மையாகும்.

**சு.ஷாமினி**
தரம் 11 B

# விழயுமா ?

"தம்பி சங்கர், வாவன் அப்பு சாப்பாடு வந்திருக்காம் வேண்டிவர"

"இல்லையணை பாட்டி எனக்கு இண்டைக்கு எழும்ப ஏலாமல் கிடக்கணை; எனக்குப் பசிக்கலை; நீ போய் வேண்டணை"

பசி வயிற்றைப் பிடுங்கினாலும் ஊனமான காலுடன் எழுந்து செல்லும் வேதனை தாங்க முடியாது என்பதற்காகச் சங்கர் அங்கேயே மற்றைய பக்கம் திரும்பிப்படுத்தான். அவனது எண்ண அலைகள் கடந்த காலத்தை எண்ணிய தாக வட்டமிட ஆரம்பித்தது. அம்மா அக்கா மார்கள் என அனைத்து உறவுகளுடன் கூடிய தான ஒரு அழகான குடும்பத்தின் கடைக் குட்டிதான் சங்கர். அவனுக்கு எல்லோருமே செல்லம். அவன் என்ன பிழை செய்தாலும் ஒரு சிறிய அதட்டல்கூடச் செய்யமாட்டார்கள். அப்படியான குடும்பத்தில் திடீரென புயல் வீசத் தொடங்கியது. அது சங்கர் வீட்டுக்கு மட்டுமல்ல ஒட்டுமொத்தத் தமிழ் இன மக்களின் வாழ்க்கை யையே தடம்புரட்டும் என யாரும் எள்ளளவும் எண்ணியிருக்கவில்லை.

திடீரென ஊரெல்லாம் வேட்டுச் சத்தம்! சரமாரியாகச் செல்கள் விழுந்து வெடித்துச் சிதறின. வானம் தன் அகன்ற வாயைத் திறந்து ஆங்காங்கே அனல் கக்கத்தொடங்கியது? எல்லோரும் தங்களுடைய கைக்கு அகப்பட்டதை எடுத்துக்கொண்டு கால்போன போக்கில் ஓடத் தொடங்கினர். உறவுகள் எல்லாம் சின்னா பின்னமாகப் பிரிந்தன. சங்கரும் தனது சகோதரிகளுடன்பங்கருக்குள் இருந்தான். எல்லாச் சத்தங்களும் அடங்கிய பின்னர் மேலே வந்தான் சங்கர். திடீரென எங்கிருந்தோ வந்த சன்னம் சங்கரின் வலது காலைப் பதம்பார்த்தது. "ஐயோ அம்மா" எனக் கதறியபடி சங்கர் மண்ணை முத்தமிட்டான். அந்த நேரத்தில் எந்தவித வசதியும் இல்லை. தந்தை தன் மகனை இரு கைகளாலும் ஏந்தியபடி பல மைல்கள் ஓடிச்சென்று ஆஸ்பத்திரியில் சேர்த்தார். அங்கே "அவனது காலிற்குள் சன்னம் இருக்கிறது. அவனால் நடக்க முடியாது சத்திரசிகிச்சை செய்ய வேண்டும். மயக்க மருந்து இல்லை. நினைவில்தான் செய்ய வேண்டும்". என்று கூறினர் அங்கிருந்த மருத்துவர்கள்.

சங்கரின் கண்முன்னே சத்திரசிகிச்சை தொடங்கியது மரண வலியை அன்றுதான் அவன் அனுபவித்தான். சாதாரணமாக மருத்துவமனையில் ஏற்றும் ஊசிக்கே கூக்குரலிடுபவன் இன்று சாதாரண பலகைக் கட்டிலில் டாக்டர் வைக்கும் கத்தியும் ஊசி போன்ற கூர் ஆயுதங்களும் அவன் கண் முன்னே வேக நடனம் புரிந்தன. அவனது காலை ஒவ்வொன்றும் பதம் பார்த்தன. தன் கண் முன்னாலேயே தனது கால் வெட்டிக்கிழிக்கப் படுவதைப் பார்த்துக்கொண்டு கையை இருவர் பிடிக்கக் காலை இரு கரங்கள் அமுக்கிப் பிடிக்க ஒன்றுமே செய்யமுடியாது தலையை அங்கு மிங்கும் ஆட்டி ஆட்டிக் கதறினான் சங்கர்.

"கடவுளே! சன்னம் பிடித்த இடத்திலேயே என்னைக் கொண்டுபோயிருக்கக் கூடாதா? நான் என்ன பாவம் செய்தேன்" என்று கத்தினான். அந்த வேளையிலும் தன் காலில் நெருஞ்சிமுள் குத்தியது அவனுக்கு ஞாபகம் வந்தது. அந்த முள்ளை மெதுவாகத் தட்டியெடுக்க அவனது சின்ன அக்கா என்ன பாடுபட்டாள். பெரிய அக்கா அவனது

கன்னத்தைத் தடவி "அப்பு இன்னும் இரண்டு நிமிடத்தில் எல்லாம் சரியாப்போம்" என்று கூறியதும், ஆசை அக்கா நெளித்துக் காட்டியதும், அவன் அவளைப் பார்த்து, பல்லு நெருமியதும் அவன் நினைவலைகளில் வந்து மோதின. பாசம் மிகுந்த அந்த ஜீவன்களை நினைக்கும்போது அவன் கண்கள் கண்ணீரைக் கொப்பளித்தன. ஏனெனில் அவனைத் தேற்றுவதற்கு அவனது குடும்பம் அவனுடன் இல்லை. சங்கரைப் பார்ப்பதற்காக வந்து கொண்டிருக்கும்போது கூவி வந்த செல் அவர்களைக் காவுகொண்டது. அப்படியே சிதறிய சடலங்கள் புதைக்கப்பட்டன. சங்கரை அந்த ஆஸ்பத்திரியில் உள்ள அம்புலன்ஸ் வண்டியில் ஏற்றிவந்து வவுனியா தடுப்பு முகாமில் விட்டுவிட்டனர். இப்போது சங்கரோ ஊமையான உள்ளம், ஊனமான காலுடன் முகாமில் அவனுக்குத் துணை அங்கிருக்கும் முன்பின் தெரியாத தங்கம்மாப் பாட்டிதான் "என்னடா மோனை யோசனை? உனக்குப் பசிக்குது எண்டு எனக்குத் தெரியும். இந்தாணை இதைச் சாப்பிடு" பாட்டி தனக்கெனக் கொடுத்த பாணையும் பருப்புக் கறியையும் கொடுத்தார்.

"எனக்கு வேண்டாமணை. விடியத் தொடங்கி நீதானை சாப்பிடலை. அப்போது வந்த பார்சலையும் எனக்குத் தந்திட்டாய். நீ சாப்பிடணை. எனக்குப் பசிக்கலை" எனச் சங்கர் நுனி நாக்கால் சாப்பாடு வேண்டாம் என்று கூறினாலும் அவனது அடிவயிறு அவனைத் திட்டிக்கொண்டே இருந்தது.

"சரி இந்தாணை பாதியைச் சாப்பிடு. நான் மிச்சத்தைச் சாப்பிடுறன்" பாட்டி கொடுக்க சங்கர் வாங்கி, தேவாமிர்தம் எனச் சாப்பிடத் தொடங்கினான். அவனது பசியை அது இன்னமும் கிளறிவிட்டது. "பாட்டி எப்பதான் நாங்க நல்ல சாப்பாடு சாப்பிடுவம்" "இல்லை யெணை மோனை, கெதியாய் விடுவினமாம். இண்டைக்கு யாரோ எங்களைச் சந்திக்க வருகினமாம்" என்று பாட்டி கூற, சங்கர் தனக்குத்தானே மெல்லியதாகச் சிரித்துக் கொண்டான்.

"என்னடா மோனை சிரிக்கிறாய்" "இல்லை யெணை அதுதான் இண்டைக்குச் சாப்பாடு முந்தி வந்திருக்கோ!"

"பாட்டி யார் யார் வந்து பார்த்தாலும், எங்கட குடும்பம், எங்கட இனம், என்ர கால் எங்கட நிம்மதி திரும்பி வருமா? எப்பவுமே நான் நொண்டிதான் என்று கூறியபடி கண்கலங்கினான் சங்கர்.

எப்பவோ ஒரு நாளைக்கு நல்ல காலம் நமக்கும் வரும்தானே! எங்கட பக்கமும் காத்து வரும்தானே! எங்கட பக்கமும் காத்து வீசாமலா போகும்" பாட்டியின் தலைமீது காலை நீட்டியபடி பெருமூச்சொன்றை விட்டபடி அமர்ந்தான். எங்கிருந்தோ கோஷங்களுடன் கூடிய பல குரல்கள் கேட்கத்தொடங்கின. சங்கர் மீண்டும் ஒரு பெருமூச்சுடன் கண்களை மூடினான்.

**பகீரதன்**
A/L (2011)

# போதையாலும் சினிமாவினாலும் உபாதையுறும் இளஞ் சமூகம்

*"அரிது அரிது மானிடராதல் அரிது*
*அதனிலும் அரிது*
*கூன், குருடு, செவிடு, பேடு நீங்கிப் பிறத்தல்*
*அரிது"*

ஔவையின் அமுதவாக்கிற்கு அமைவான சிறப்புவாய்ந்தது மனிதப் பிறவி. தக்கது இது தகாதது இதுவென உணரத் துணைபுரிவது பகுத்தறிவு. இப்பகுத்தறிவு உடமையினாலேயே மனிதப்பிறவி சிறப்புப் பெறுகின்றது. இத்தகைய சிறப்புவாய்ந்த மனிதப் பிறவி இன்று கீழ் நிலைக்குத் தள்ளப்பட்டு உள்ளமைக்குக் காரணம் போதையும் சினிமாவும் என்பது உள்ளங்கை நெல்லிக்கனியாகிவிட்டது. பண்டிதர் தொட்டுப் பாமரர்வரையும், சிறியோர் தொட்டு மதியோர்வரையும் ஏழை பணக்காரன் என்ற வித்தியாசமின்றிப் பரவிக் காணப்படுவது இந்தப் போதையும் சினிமாவும் கல்வி கற்றவர்கள், கல்லாதவர்கள் என உத்தமர்களையும் உன்மத்தர்களாக்கும் மாயசக்தி இவற்றுக் குண்டு.

"இன்றைய இளைஞர்களே நாளைய தலைவர்கள்" எனும் கடமையை மறந்து இன்றைய இளைஞர்கள் போதைப்பொருட் களுக்கும் கீழ்த்தரமான சினிமாவுக்கும் அடிமை யாகியுள்ளனர் என்றால் அது மிக வருந்தத்தக்க ஒரு விடயம். பாடசாலைசெல்லவேண்டிய மாண வர்கள் கல்வியை மறந்து கலைக் கூடங்களிற் செலவழிக்கவேண்டிய நேரத்தைப் படமாளிகை களிலும் சாராயத் தவறணைகளிலுமே கழிக்கின்றனர். "காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்" எனும் மணிமொழியை மறந்து தம்மைத் தாமே சீரழித்து துஷ்பிரயோகம் செய்கின்றனர் என்றால் நவீன சினிமாவும் போதைவஸ்தும் ஏற்படுத்திய தாக்கமே காரணம் எனலாம்.

இந்தவகையில் இன்றைய உலகிற் போதைவஸ்துக்கள் ஏற்படுத்திய தாக்கத்தை முதலில் நோக்குவோம். நவீன உலகிலே அபின், கஞ்சா, பியர், குடு, கெரோயின் எனப் பல்வேறு போதைப்பொருட்கள் காணப்படுகின்றன. இவற்றிற்கு அடிமையானவன் ஒருபோதும் மீளவே மாட்டான். படிக்கவேண்டிய நேரத்திற் படிப்பை மறந்து உழைக்கவேண்டிய நேரத்தில் உழைப்பை மறந்து போதைக்கு அடிமையாகி யுள்ளனர். இன்றைய இளைஞர்களை நவீன விளம்பர உத்திகளும், சினிமாக்களும்கூட, போதைப்பொருட் பாவனையை ஊக்கு விக்கின்றன. சினிமாக்களில் தமக்குப் பிடித்த கதாநாயகன் மது அருந்துவதைப் போலவும் புகைப் பிடிப்பதைப் போலவும் வரும் காட்சியைப் பின்பற்றும் எத்தனையோ இளைஞர்களை நாம் காணக்கூடியதாக உள்ளது. ஆயிரம் காலத்துப் பயிர் என்றெண்ணி அருமையாய்ப் பெற்று வளர்த்த பிள்ளையை இடைவழியில் தவற விட்டுத் தவிக்கும் பெற்றோர்கள் எத்தனையோ பேரை இன்று நாம் காணலாம்.

இன்று பால்குடியை மறந்தவர்கள்கூடப் பியர் குடியைத் தொடங்கிவிட்டனரென்றால் இளை ஞர்கள் எங்கே? அவர்களது எதிர்காலம் எங்கே? அவர்களது இளைய சந்ததி எங்கே? இன்றைய இளம் பெண்களும் சரி ஆண்களும்சரி போதைக்கு அடியாகி உள்ள நிலையைக் காண லாம். முன்னைய காலங்களில் பெற்றோருக்கும்

பெரியோருக்கும் பயந்து அவர்களை மதித்து வாழ்ந்தவர்கள் இன்று அவர்களுடன் சரிசமமாக இருந்து மது அருந்துவதையும் பெரியவர் சிறியவர் என்ற வேறுபாடு இன்றி நடந்து கொள்வதையும் காணலாம். இன்று ஆண்கள் மட்டுமன்றிக் குறிப்பாகக் கர்ப்பிணிப் பெண் களும்கூட மேலை நாடுகளில் போதைவஸ்துக்கு அடிமையாகி உள்ளனர். இதனால் அவர்களது வயிற்றில் வளரும் குழந்தை குறைபாடு களுடனும் நோய்களுடனும் பிறக்கின்றன. போதையை ஏற்பவர்கள் மாத்திரைகள் மட்டு மின்றி ஊசிகள் மூலமும் போதையை ஏற்றிக் கொள்கின்றனர். போதை ஏறியதும் அது உடலிலுள்ள நரம்பு மண்டலங்களையும் மூளையையும் பாதிக் கின்றது. போதையினாற் கிடைக்கும் சந்தோஷம் சிறிது நேரமே நீடிக் கின்றது. ஆனால் பின் நரம்பு மண்டலங் களையும் மூளை வளர்ச் சியையும் ஏன்? சிந்தனா சக்திகளையும்கூட நினைவிழக்கச் செய்கின்றது என்றால் போதையின் கொடு மையை எண்ணித்தான் பார்க்க முடியுமா? இதனால் அவர்களது எதிர்காலம் மட்டுமின்றி வரப்போகின்ற சந்ததியே பாதிக்கப்படுகின்றது என்றால் மிகையாகாது.

போதைக்கு அடிமையானவன் தன்னை, தன் குடும்பத்தை, தன் சமூகத்தை, உலகத்தை மட்டுமின்றி தொழிலையும் மறக்கின்றான். தொழிலோ, வருவாயோ இல்லாதிருந்தபோதும் குடிப்பதற்குப் பணம் தேடுகின்றான். தான் உழைத்துத் தன் குடும்பத்தை, மனைவி, பிள்ளை களைக் காக்க வேண்டியவன் அவர்களைப் பசி பட்டினியில் வாடவிட்டுத் தான் உழைக்கின்ற பணம் முழுவதையும் போதைக்காகச் செலவு செய்கின்றான். தன் வறுமையைப் போக்க பெண் வேலைக்குச் செல்வதால், அப்பணத்தை யும் போதைக்காகச் செலவு செய்கின்றான். ஏன்? பெண்கள் மங்கலமாக உயிராக மதிக்கும் தாலியைக்கூடப் போதைக்காகப் பறிக்கத் துணிகிறான் என்றால் போதையின் கொடு மையை எண்ணிப் பார்க்கலாம். அது மட்டு மின்றி இன்று சிறுவர்கள்கூட துர்நடத்தைகட்கு ஆளாக்கப்படுகின்றனர். நேரடியாகச் சென்று போதைப் பொருட்களை வாங்க மறுப்பவர்கள் சிறுவர்கள்மூலம் வாங்கிக் கொள்கின்றனர். இதனாற் சிறுவர்களது எதிர்காலமும் பாழாகின்றது. இன்றைய இளைஞர், யுவதிகள் போதைப் பொருட்களைப் பாவித்த மயக்கத்தில் தவறான பாலியல் நடத்தைகளிலும் ஈடுபடு வதைக் காணலாம். இவற்றைவிடப் போதைப் பொருட் பாவனை ஒருபுறமிருக்கப் போதைப் பொருட்கடத்தல், இன்றைய இளைய தலைமுறை யினரை வெகுவாகப் பாதித்திருக்கும் ஒரு விடயமாகும். போதைக் கடத்தலில் மூளைப் பலமும், உடற்பலமும், மனப்பலமும் நிறைந்த ஊக்கத்தோடு ஈடுபட்டு வருகின்றதென்பது கண்கூடு.

இன்றைய இளஞ்சந்ததியைப் பாதிக்கும் காரணிகளில் அடுத்து இடம்பெறுவது சினிமாவாகும். சினிமா என்பது ஒரு கலை ஊடகமாக இருந்த நிலைமாறி, கவர்ச்சிக்கும் ஆபாசத்திற்கும் உரிய ஒரு ஊடகமாக மாறி வருகின்றது. விஞ்ஞான வளர்ச்சியாலும், அறிவியல் தொழில்நுட்ப எழுச்சியாலும் மனிதன் இன்று எத்தனையோ நவீன கண்டுபிடிப்புகளை மேற்கொண்டுள்ளான். அவ்வகையில் கணினித் துறையில் வலையமைப்புகளின்மூலம் இன்று இளைஞர், யுவதிகள் தகாத படங்களையும் காட்சிகளையும் தகவல்களையும் காண்கின் றனர். தடைசெய்யப்பட்டவை, தடைசெய்யப் படாதவை என்னும் பாகுபாடு இன்றிக் கண்ட கண்ட கீழ்த்தரமான காட்சிகளைக் காண் பதற்காகத் தமது பொன்னான நேரத்தை

மண்ணாக்குகின்றனர். இவ்வாறாக வாழ்கின்ற இளைஞர், யுவதிகள் தமக்கும் பயனின்றிப் பிறர்க்கும் பயன் படாது நாட்டுக்கும் வீட்டுக்கும் வெறும் சுமைகளாகின்றனர்.

இன்றைய இளம் பெண்களும்சரி, ஆண் களும்சரி சினிமாவில் வருகின்ற தமக்குப் பிடித்த கதாநாயகன், கதாநாயகியின் நடை, உடை, நாகரிகம், பேச்சு, வசனங்கள் என்ப வற்றைப் படித்து வைத்துத் தாமும் அதையே பின்பற்றுகின்றனர். சினிமாவில் வரும் ரவுடித் தனங்களையும், அடிபாடுகளையும் சண்டை களையும் பார்த்துவிட்டுத் தாமும் கட்சிகளாகப் பிரிந்து இயங்கி, சமுதாயத்தின் முன் "ரவுடிகள்" எனும் பெயருடன் தமது காலத்தைப் போக்கு கின்றனர். இன்றைய இளைஞர்கள் சினிமா ஒரு நிழல் மட்டுமே என்பதை உணர மறுக்கின்றனர். நிழலை நிஜவாழ்க்கைக்குப் பயன்படுத்த எத்தனிக்கின்றனர்.

சுருங்கக் கூறின், சிற்றின்பத்தைப் பேரின்பம் என்றும், நிலையற்றவற்றை நிலையானவை என்றும் கருதிப் போதையினாலும், சினிமா வாலும் சீர்கெட்ட மாந்தர் சிந்தை பிறழ்ந்து சீரழிகின்றனர். இன்றைய காலகட்டத்தில் மக்கள் நாகரிக வளர்ச்சியாலும், அறிவியல் எழுச்சியாலும் நாகரிகம் எனும் போர்வையில் போதை வஸ்துகளுக்கும், தீய சினிமாவுக்கும் அடிமையாகி யுள்ளனர். இந்நிலை இளஞ் சமூகத்தை வெகுவாகப் பாதித்துள்ளமையைக் காணலாம்.

ஆகவே இன்றைய இளஞ்சமூகம் விழித்தெழ வேண்டும். எதிர்காலச் சந்ததியை ஆரோக்கியமான பாதைக்கு இட்டுச்செல்லப் போதைவஸ்துக்களையும் தீய சினிமாவையும் அடியோடு ஒழித்துக் கட்டும் முயற்சியில் இறங்க வேண்டும். இதன்மூலமே புதியதொரு உலகைப் படைக்க முடியும்.

**ச.பிரசங்கா**
A/L Arts (2011)

# My Pet

- My Pet is a dog
- It's name is Brown
- It is brown and white colour
- It is brown and white colour
- It has small eyes and a tiny black nose.
- It has a small bushy tail
- It's favorite food is meat
- It's Favorite drink is milk
- I love to play with Browny
- It's very faithful
- I like it very much



***S. Mathuksana***
***Grade 6[B]***

# நீர்நிலைகளில் துர்நாற்றம் ஏற்படுதலும் அதற்கான காரணங்களும்

தொழிற்சாலைகளிலிருந்து வெளியேற்றப்படும் கழிவுப்பொருட்கள், விவசாய இரசாயனப் பொருட்கள், சேதன இரசாயனக் கழிவுகள் என்பன நீருடன் சேர்க்கப்படுகின்றன. இதனால் நைத்திரேற்று ($NO_3$) பொஸ்பேற்று ($PO^{3-4}$) அயன்களின் செறிவு நீரில் அதிகரிக்கின்றது. இச்செயற்பாடு நற்போசணை யாக்கம் எனப்படும்.

இதனால் அல்காக்கள் நீரின் மேற்பரப்பிற் காணப்படும் தாவரங்கள் என்பவற்றின் வளர்ச்சி அதிகரிக்கும். இவை நீரின் மேற்பரப்பை மூடிக்காணப்படும். இதன் காரணமாக நீரின் மேற்பரப்பை ஊடுருவிச் செல்லும் ஒளியின் அளவு குறைவடையும். நீரில் அமிழ்ந்து வாழும் தாவரங்களுக்குப் போதியளவு ஒளி கிடைக்காமையினால் ஒளித்தொகுப்பு வீதம் குறைவடையும். நீரினுள் சேதனப் பொருட்களின் அளவு அதிகரிப்பதனால் காற்று வாழ் பிரிகையாக்கிகளின் தொழிற்பாடும் அதிகரிக்கும். இவ்விரு காரணங்களினாலும் நீரிற் கரைந்துள்ள ஒட்சிசனின் அளவு குறைகிறது. இதனாற் காற்றுவாழ் அங்கிகள் போதிய ஒட்சிசன் கிடைக்காமையினால் இறக்கின்றன.

காற்றில் வாழும் அங்கிகளின் பிரிகையாக்கத்தின்போது ஐதரசன் சல்பைட்டு ($H_2S$) வாயு, அமோனியா ($NH_2$) வாயு, மெதேன் வாயு ($CH_4$), கந்தகவீரொட்சைட்டு வாயு ($SO_2$) என்பன நீரினுள் விடப்படுகின்றன.

எனவே, நற்போசணையாக்கத்தின் காரணமாக நீரின் மேற்பரப்பு மூடப்படுவதனால் ஒளி ஊடுருவல் பாதிப்படைந்து, அங்கிகள் பாதிப்படைவதனாலும், காற்றின்றி வாழ் பிரிகையாக்கித் தாக்கத்தாலும், காற்றுவாழ் விலங்குகள் இறப்பதனாலும் நீரில் துர்நாற்றம் ஏற்படுகின்றது,

**ர. சந்திரிக்கா, 11<sup></sup>B**

## My Self

- My Name is K. Vinujan
- My father's name is kovintharajah
- My Mother's name is chandradevi
- I'am eleven years old
- I study in Grade six
- My favourite Subjed is English
- My School name is J/Sengun the Hindu College
- I live at kopay
- My favourite game is Cricket
- My hobbies are Playing Cricket and reading story books.

***K. Vinjan***
***Grade 6***

# இசை வாக்கேயகாரர் சிலர்

"இசையால் வசமாகா இதயம் எது" எனும் அளவுக்கு அன்று தொடக்கம் இன்றைய நாள்வரை இசையில் உருகாத ஓர் உயிரை நாம் காண்பது அரிது. இசை ஒரு புனிதமான கலை. எம் மனித குலம் நாகரிகமடையும் முன்னே இசை ஒரு தனிப்பாஷையாகவே மிளிர்ந்தது. மகிழ்ச்சியை வெளிப்படுத்தும் ஓர் வடிவம் இசை. வேத பரிபாஷையாக விளங்குவதும் இசை. இறைவனைத் துதிப்பதற்குச் சிறந்த அர்ச்சனை எதுவெனின் அது இசையாக மட்டும் தான் இருக்கும் என்பது நாம் அனைவரும் அறிந்த ஒன்றேயாகும்.

இவ்வாறான இசை வளர்ந்து புதுப்பொலிவு பெற்று ஒளிர வழிகாட்டியவர்கள் பலர். அந்தவகையில் நாம் ஆழ்வார்கள் நாயன்மார்களை எடுத்து நோக்கலாம். விஷ்ணு பகவான் "தான் வேதங்களில் சாமவேதம்" என்று கூறுகின்றார். சாமவேதம் இசையைக் குறிக்கும் சிறப்புப் பெற்றது. "தமிழோடு இசை பாட மறந்தறியேன்" என்றும், ஏழிசையாய் இசைப்பயனாய்.." என்றும் சிறப்பிடம் பெறுகின்றது. நவீன இசைமுறையைத் தோற்றுவித்த இசைஞானிகள் சிலரை எடுத்து நோக்குதல் மிகவும் சிறப்பானது.

**புரந்தரதாஸர்**

1484ஆம் ஆண்டு கர்நாடக மாநிலத்தில் "புரந்தர கட" எனும் ஊர் எமக்குத் தந்த செல்வச்சீமான் ஸ்ரீனிவாசன் எனும் புந்தர தாஸர். சமஸ்கிருதம், கன்னடம் ஆகிய மொழிகளைச் சிறுவயதிலேயே கற்று பாண்டித்தியம் பெற்று விளங்கினார். இவர் முதன்முதலாக அடானா இராகத்தில் "மோஸ ஹோதனலோ" எனும் பதத்தைப் பாடினார்.

இவருடைய 30ஆவது வயதினிலேயே ஞானோதயம் பெற்று, வியாசராய சுவாமிகளிடம் உபதேசம் பெற்றார். பின் சத்யதர்ம சுவாமிகளின் அனுக்கிரகம் பெற்றுப் புரந்தரதாஸர் எனும் பெயரைப் பெற்றுக்கொண்டார். ஆரம்ப இசைப்பயிற்சிக்கான ஸ்வரவரிசை, ஜண்டை வரிசைகள், அலங்காரங்கள், கீதங்கள் என்பவற்றை இயற்றியுள்ளார். ஆரம்பப் பயிற்சிக்கு ஏற்ற இராகம் மாயாமாளவகௌளை எனத் தேர்ந்தெடுத்தவரும் இவரேயாவார்.

தாய்மொழியிற் கீர்த்தனைகளைச் செய்த ஆதி இசைப்புலவர்களில் இவரும் ஒருவர். இலட்சக்கணக்கிற் பாடல்களை இயற்றிய இசைஞானியும் இவரேயாவார். 4,750,000 தொகைப் பதங்களை இயற்றியுள்ளார். இவற்றில் 8000 பதங்களே வழக்கில் உள்ளன. இவருடைய பாடல்கள் சொற்சுவை, பொருட்சுவை, இசைச்சுவை கலந்தவையாகவும் காணப்படுகின்றன.

கர்நாடக இசைக்கு அளவிடற்கரிய தொண்டைச் செய்து, அதற்குப் புத்துயிர் அளித்த இம்மகானுக்குப் பெரியோர்களாற் கொடுக்கப்பட்ட "சங்கீதப் பிதாமகர்" என்ற பட்டம் சாலப் பொருத்தமுடையதாகும். இவர் 1564 ஆம் ஆண்டு தை மாதம் 02ஆம் திகதி விண்ணுலகைச் சேர்ந்தார்.

**பாபநாசம்சிவன்**

20ஆம் நூற்றாண்டு எமக்குத்தந்த இணையற்ற ஒரு வாக்கேயகாரர் பாபநாசம் சிவன் ஆவார், இவர் தஞ்சையிற் "போலகம" என்ற கிராமத்திற் கி.பி. 1890 ஆம் ஆண்டு இராமாமிர்த ஐயர், யோகாம்பாள் ஆகியோருக்கு மகனாக அவதரித்தார்.

சிறு பராயத்திலேயே இசை உள்ளறிவைக் கொண்டு இருந்தார். இவர் அதிகமாகப் பஜனைகளிற் கலந்து பாடுவதனையே கொண்டிருந்தார். இதன் போது சிவன் உருப்படிகளை இயற்றத் தொடங்கினார். இத்துடன் கிருதிகள், பதங்கள், வர்ணங்கள் என்பவற்றையும் இயற்றினார். இவர் பாடிய பாடல்களுட் சில இறவாவரம் பெற்று இன்றும் எம்முடன் வாழ்ந்துகொண்டு இருக்கின்றன.

"காணக்கண் கோடி வேண்டும்
"காவாவா கந்தா வாவாவா"
"தாமதமேன் பராமுகம்"

"கடைக்கண் நோக்கி" போன்றவற்றை எடுத்துக்காட்டலாம்.

இவை மட்டுமன்றித் திரைப்படத் துறையிலும் இவர் சிறந்து விளங்கியுள்ளார். தமிழ், வடமொழிகளில் 400க்கு மேற்பட்ட உருப்படிகளை இயற்றியுள்ளார். இசை நாடகங்களுக்கும் இசை அமைத்துள்ளார். இவரது பாடல்களை அதிகமாகப் பலரும் தம் கச்சேரிகளிற் பாடும் வழக்கைக் கொண்டுள்ளனர்.

1950ஆம் ஆண்டு இந்திய நுண்கலைக் கழகத்தாற் "சங்கீத சாஹித்திய கலாமணி" எனச் சிறப்புப்பட்டம் பெற்றார். இத்துடன் "சங்கீத கலாநிதி" எனும் பட்டம் "பத்ம பூசண" பட்டம் என்பனவும் இவரின் பெருமையை எமக்குத் தெளிவு படுத்துகின்றது. எளிமையான வாழ்வு வாழ்ந்த இவர் எம்மைவிட்டுத் தம் புகழ் நிலவி 1973ஆம் ஆண்டு இறைபதம் சேர்ந்தார்.

**முத்துத்தாண்டவர்**

17ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இசை சிறக்க வழிகாட்டிய மகான் ஆவார். சீர்காழியில் இசைக்குலம் எமக்குத் தந்த ஒரு பொக்கிசம் "தாண்டவர்" எனும் முத்துத்தாண்டவர். இவரது வாழ்க்கைக் காலம் ஏனையோரைவிட வேறுபட்டது. அன்னை நேரிலேயே தோன்றி ஆட்கொள்ளப்பட்ட பெருமைக்குரியவர். முதன் முதலாகச் சிதம்பரத்திற் "கூத்தப்பெருமான்" முன்பு இறைவன் அடி எடுத்துக் கொடுக்கப்படும் சந்தர்ப்பம் கிடைக்கப்பெற்றது.

"பூலோக கைலாச கிரி சிதம்பரமல்லால் புவனத்தில் வேறும் உண்டோ" எனும் கீர்த்தனையே இதுவாகும்.

இது மட்டுமன்றி இவர் சிதம்பரத்துக்கு வரும் வழியிற் கொள்ளிடத்தில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. தன் வழிபாட்டுக்கு இடையூறாக இருக்கிறதே என வருந்திக் கலக்கமுற்று அவ்விடத்திலே நின்றுகொண்டு "காணாமல் வீணிலே காலம் கழித்தோமே" எனப்பாட வெள்ளப்பெருக்குக் குறைந்து வழிவிட்டது. இது இவர் ஆற்றிய அற்புதமாகும். பாம்பு தீண்டிய போது கலங்காது

"அருமருந்தொரு தனிமருந்திது
அம்பலத்திற் கண்டேன்"

எனப்பாட விடம் இறங்கியது. இவர் இயற்றிய கீர்த்தனைகள் 60, பதங்கள் 75 "தெருவில் வாரானோ" எனும் பாடல் சிறப்புப்பெற்றது. இவை "பேரின்பப் பதங்கள்" எனும் சிறப்புப் பெற்றவை. அரும் செயல்கள் ஆற்றிய இவர் ஆவணித் திங்கள் பூச நாளில் இறைவன் முன் நின்று

"மாணிக்கவாசகர் பேறெனக்குத்
தரவல்லாயோ அறியேன்"

எனப் பாடிச் சிதம்பர சோதியில் இரண்டறக் கலந்தார்.

**கோபால கிருஸ்ண பாரதியார்**

"1811 ஆம் ஆண்டு திருவாரூர் நரிமணம் என்ற ஊர் பெற்ற மைந்தன் கோபாலகிருஸ்ணர். இவர் தமிழ், சமஸ்கிருத மொழிகளிற் பாண்டித்தியம் பெற்று விளங்கினார். இவர் எழுதிய "நந்தனார் சரித்திரம்" எனும் இசை நாடக நூல் மிகவும் சிறப்புப் பெற்று விளங்கு கின்றது. கைநொண்டிச்சிந்து, ஆனந்தக் களிப்பு, இருசொல் அலங்காரம், இலாவணி கட்கா, தாண்டகம், அகவல்சிவாயி ஆகிய இசை முறைகளும் கையாளப்பட்டுள்ளன. இது இசை மேன்மையும், பக்திச்சிறப்பும் பெற்று விளங்கு கின்றது.

இவர் பஞ்சரத்ன கீர்த்தனைகளையும் இயற்றியுள்ளார். ஏனைய இசை நாடக சரித்திரங்களாக இயற்பகை நாயனார் சரித்திரம், திருநீலகண்ட நாயனார் சரித்திரம், காரைக்காலம்மையார் என்பன சிறப்பானவை. இவை மட்டுமன்றிப் பல கீர்த்தனைகளையும் இயற்றியுள்ளார். பெண்கள் விரும்பும்படி "சிதம்பரக்கும்மி" எனும் பாடலையும் இயற்றினார்.

இவ்வாறான இசைப்பணியாற்றிய கோபால கிருஸ்ண பாரதியார் தம் வாழ்வை விடுத்து 1896ஆம் ஆண்டு சிவராத்திரி தினத்தன்று தம் மறுவாழ்வை இறைபதத்தில் வைத்துக் கொண்டார். இசை வாக்கேயகாரர்களின் பணியினால் இசை பொலிவுற்று விளங்குகிறது.

**இ. தர்சிகா**, 10[B]

# சக்கரினும் சோபிற்றோலும்

சக்கரின் எனப்படுவது சுக்குரோசுக்குப் பதிலாகப் பயன்படுத்தப்படும் இனிப்புச் சுவையுள்ள ஒரு பதார்த்தமாகும். இனிப்புச் சுவையுள்ள சிற்றுண்டிகள், பான வகைகள் போன்றவற்றிற்குச் சக்கரினைப் பயன்படுத்த முடியும். சீனியை விடச் சக்கரின் விலை குறைந்ததே. எனவே, வியாபாரிகள் இலாப நோக்கம் கருதிச் சக்கரினைப் பயன்படுத்துவார்கள். இதை அதிகம் உண்டால் உடலிற் பாதகமான விளைவுகள் ஏற்பட இடமுண்டு.

சோபிற்றோல் எனப்படுவது ஒரு தாழ்த்தும் வெல்லமாகும். இது குளுக்கோசைத் தாழ்த்துவதன்மூலம் பெறப்படுகின்றது. எனவே, குளுக்கோசின் அகத்துறிஞ்சல் வீதம் குறைவானபடியாற் சோபிற்றோல் குருதியிற் குளுக்கோசின் செறிவை அதிகரிப்பதில்லை. நீரிழிவு நோய்க்கெனத் தயாரிக்கப்படும் ஜாம், பழச்சாறு, இனிப்புவகை பாலுணவுகளில் சோபிற்றோல் பயன்படுத்தப்பட்டன. தற்போது அஸ்பாட்டேத் (Aspartame) எனப்படும் இரு அமினோ அமலங்களால் சோபிற்றோலும் அஸ்பாட்டேமும் பக்க விளைவுகள் குறைந்தவை என்பது குறிப்பிடத்தக்கது.

**ச. ஜனனி**
க.பொ.த. (உயர்தரம்)

# செல்லிடத் தொலைபேசி

பூமியில் இன்று செல்லிடத் தொலைபேசிப் புரட்சி நடந்து கொண்டிருக்கிறது. வசதி அற்றவர்கள் மற்றும் வசதி உள்ளவர்கள் என்ற ஒரு வேறு பாடின்றிச் செல்லிடத் தொலைபேசியைப் பயன் படுத்துவோர்கள் தொகை மிக அதிகரித்துக் கொண்டே வருகின்றதாகப் புள்ளிவிபரங்கள் தெரிவிக்கின்றன.

நடந்துகொண்டே பேச முடியுமா? போக்குவரத்துச் செய்யும்போது பேசமுடியுமா? என்று வியந்து கொண்டே கேட்டகாலம் இருந்தது. இன்று முகம் பார்த்துப் பேசும் அளவிற்குச் செல்லிடத் தொலைபேசிகள் வளர்ச்சிபெற்று வந்துவிட்டன.

கம்பியில்லாத் தந்தி முறையையும் பேச்சை வடிவாக்கும் (Visible Speech) முறையையும் இணைத்து அலெக்சாண்டர் கிரஹாம்பெல் செல்லிடத் தொலைபேசியைக் கண்டுபிடித்தார். 1876ஆம் ஆண்டு தோமஸ் வாட்சன் என்பவரிடம் பொறிமுறை உதவியாளராக இருந்தவர்கள்தான் இந்தக் கிரஹாம்பெல் வாட்சனும், கிரஹாம் பெல்லும். காது கேட்காதவர்கள் பிறரோடு உரையாட வாய்பேசாதவர்களின் மொழியைச் சமிக்ஞைகளில் அமைத்துக் கொடுத்தார்கள்.

மைக்கல் பாரடே ஒலி அதிர்ச்சிகளை மின் அதிர்ச்சிகளாக மாற்றி வெற்றிபெற்றார். கிரகாம்பெல்லும் அவரது சகோதரரான வாட்சானும் பொது மக்கள் உபயோகிக்கும் அளவுகளுக்குச் செல்லிடத் தொலைபேசியைக் கொண்டு வந்தார்கள்.

தொலைபேசி கண்டுபிடிக்கப் பட்டமையைக் கண்டு உலகமே ஆச்சரியப்பட்ட காலம் ஒன்று இருந்தது. செல்லிடத் தொலைபேசிகள் கண்டுபிடித்ததற்குப் பின்னர் உலகமே சுருங்கி விட்டது. தனிமையே இனி இல்லை என்று கூறும் அளவுக்குச் செல்லிடத் தொலைபேசிகள் முக்கியத்துவம் பெற்று விட்டன. இப்படிப்பட்ட மிகப்பெரிய நடமாடுகின்ற புரட்சிக்கு வித்திட்டவர் யார்? செல்லிடத் தொலைபேசியைக் கண்டுபிடித்தவர் யார்? அவர்தான் டொக்டர் மாட்டின் கூப்பர். மாட்டின் கூப்பர், பாடசாலையிற் பாடங்கள் படித்துக் கொண்டே தொலைக்காட்சிப் பொறி முறைகளையும் தெரிந்துகொண்டார். வீட்டில் ஒரு மின்கருவியையும் விட்டு வைக்கவில்லை. பலமுறை மோசமாக ஷாக் அடித்துத் தூக்கியெறியப்படும் அளவிற்குத் தன்னையே பணயமாகவைக்கும் தைரியம் அவருக்கு இருந்தது. இவர் சிக்காகோவிலுள்ள கல்லூரி படிப்பிற்கு மின்னியலைப் பாடமாகத் தெரிவு செய்தார். கல்லூரிப் படிப்பை முடித்துவிட்டுப் பலமுறை முயன்றும் பொருத்தமான வேலை கிடைக்கவே இல்லை. பெல் நிறுவனங்களும் அவரது விண்ணப்பத்தைப் புறக்கணிக்கவே விரக்திக்கு உள்ளானார் என்று கூறப்படுகின்றது.

அதன்பின்னர்தான் ஒருவழியாக மோட்டோரோலா நிறுவனத்திற் பொறிமுறைகள் உதவியாளராகச் சேர்ந்து மூன்று ஆண்டுகளுக்குள் ஆய்வக உயர்பிரதிநிதி அந்தஸ்தைப் பெற்றார். பெல் ஆய்வகத்துக்கு அடுத்ததாக உலகில் அதிக கண்டுபிடிப்புக்களை ஆணையாகப் பதிவுசெய்த பெருமையையும் மோட்டோரோலாவுக்குப் பெற்றுக்கொடுத்தார்.

பல்வேறுபட்ட ஆய்வுகளுக்குப் பின்னர் 1937ஆம் ஆண்டு ஏப்பிரல் 3ஆம் திகதி

பெரியபவுடர் டப்பா அளவுக்கு ஒன்றைக் கையில் வைத்துக்கொண்டு அதிற் பேசிக் கொண்டே கூப்பர் அலுவலகத்துக்கு வந்தார். அதுதான் முதற் செல்லிடத் தொலைபேசி என்று எவருக்குமே தெரியாது. அதிலேயே தொலை பேசி எண்கள் வரிசையாகத் தொலைபேசி போலவே அமைக்கப்பட்டிருந்தன. மேலே ஒரு வித அன்டனா, சிறிய டிரான்சிஸ்டர் வானொலி மாதிரி நீட்டிக்கொண்டிருக்கும்.

கூப்பர் தனது கண்டுபிடிப்பைப் பற்றிச் செய்தியாளர்களுக்கு விளக்குவதற்குமுன் தன்னைக் கைவிட்ட போட்டி நிறுவனமான பெல்லின் தலைமை ஆய்வாளர் ஜோயல் ஏங்கலிடம் தனது புதிய கண்டுபிடிப்பான செல்லிடத் தொலைபேசியில் தொலைபேசி எண்களை அழுத்திவிட்டுப் பேசத் தொடங் கினார். ஒரு கூட்டமே கூடிவிட்டது. இந்தத் தொலைபேசிகள்தான் மோட்டோரோலோ – டைனா – டாக் என்ற முதல் செல்லிடத் தொலைபேசி ஆகும்.

முதன்முதலில இரண்டாயிரம் அமெரிக்கர்கள் செல்லிடத் தொலைபேசியைப் பயன்படுத்தத் தொடங்குகின்றபோது ஜப்பான் விழித்துக் கொண்டது. 1978ஆம் ஆண்டு டோக்கியோவில் யார் வேண்டும் ஆனாலும் வாங்கி உபயோகிக்கக் கூடியவகையிற் செல்லிடத் தொலைபேசிகளை விற்பனைக் காகச் சந்தைக்கு அறிமுகம் செய்து வெற்றியும் பெற்றது. மோட்டோரோலா செல்லிடத் தொலைபேசி வலைப்பின்னலை விரிவுப் படுத்தத் தொடங்கியது நொக்கியா, சைமன்ஸ், ஏல்காடெல், பிலிப்ஸ் என்று ஐரோப்பியக் கனவான்களும் களத்திற் குதித்தார்கள்.

செல்லிடத் தொலைபேசியை மாட்டின் கூப்பர் கண்டுபிடித்ததைத் தொடர்ந்து தற்போது இணையச் செல்லிடத் தொலைபேசிகள் சந்தைக்கு வந்துவிட்டன. அதிலே ஒருவரை ஒருவரே பார்த்தவாறு பேசக்கூடிய வசதிகள் உள்ளன.

கூ. மதுக்ஷனா,
தரம் 6[B]

# My Hobby

- My hobby is gardening
- It is very interesting hobby.
- I started my hobby when I was in garden live
- My Parents help me in My gardening
- There are variely of Flowers in my garden. They are Jasmine, Sun flower Hibiscus, Marigold and Zinnias.
- Many plants are in bloom. They ane attracted to butter flies, bees, and birds in to the garden.
- I like it very much.

*T. Nitharsana*
*Grade 6[B]*

# விஞ்ஞானமும் தொழில்நுட்பமும்

இன்றைய 21ஆம் நூற்றாண்டிலே விஞ்ஞானம் என்பது விண்ணைத் தொடு மளவுக்குப் பெரும் சிகரமாகத் தோன்றிவிட்டது. விஞ்ஞானம் என்றால் மனித வாழ்வு – மனித வாழ்வு என்றால் விஞ்ஞானம் எனுமளவிற்கு விஞ்ஞானம் மனித வாழ்க்கையுடன் பின்னிப் பிணைந்துள்ளது. விலங்கிலிருந்து பரிணாம வளர்ச்சி பெற்றவனே மனிதன். ஆரம்ப காலங்களில் வேட்டையாடுதலையும், பல இடங்களுக்குச் சென்று பழங்கள், கிழங்கு களைச் சேகரித்தலையும் மட்டும் செய்த மனிதன், காலங்கள் செல்லச்செல்லத் தனது அறிவு மேம்பாட்டால் விஞ்ஞானம் எனும் எல்லை கடந்த பறக்கும் பறவையைத் தனது கைக்குள் பிடித்து வைத்துள்ளான்.

விஞ்ஞானத்தின் விந்தைகள் ஒன்றா! இரண்டா!? அப்பப்பா! ஆயிரம் ஆயிரம்! மனித வாழ்வுடன் பின்னிப் பிணைந்து காணப்படும் விஞ்ஞானம் இப் பூவுலகிற் பல அரிய சாதனை கள் படைத்துள்ளது. அறிவு மேம்பாட்டாற் சாதாரண மக்கள் விஞ்ஞானி களானார்கள். தமது அறிவைச் சரியான முறையிற் கையாண்டு பல விஞ்ஞானக் கண்டுபிடிப்புக்களைத் தந்தனர். இந்த வகையில் மின்குமிழை எம் எல்லோரிற்கும் அளித்த எடிசன் இவ்வுலகில் இருளை ஒளி நிறைந்த பகலாக்க உதவி புரிந்தார். இவ்வாறே விஞ்ஞானம் பல துறை களில் வளர்ச்சிகண்டு பெருமை அடைந் துள்ளது.

மின்குமிழ் மட்டுமா தந்தது விஞ்ஞானம்? இல்லைஇல்லை; தொலைபேசி, தொலைக்காட்சி, இணையம், மின்னஞ்சல், கணினி என்றெல்லாம் பல வடிவில் விஞ்ஞானம் உருவெடுத்தது. இவை பலவிளைவுகளையும் தந்தன. அந்த வகையில் விஞ்ஞானம் நமக்களித்த பரிசே தொலைபேசியாகும். இது உலகில் எந்த மூலையில் இருப்பவரின் குரலைக் கேட்டும் உறவாடுமளவிற்கு வளர்ந்துள்ளது. முன்னைய காலங்களிற் பல வீடுகளிற்கு ஒரு தொலைபேசி மட்டுமே காணப்பட்டது. அதை எடுத்துச் செல்வதும், கையாள்வதும் கடினமாகக் காணப்பட்டது. ஆனால் இன்று அதிலிருந்து முற்றிலும் வேறுபட்டதும், உள்ளங்கையில் உள்ளடக்கக் கூடியதுமான தொலைபேசியே காணப்படுகிறது. இதனைக் கையாள்வது சுலபம். இதன்மூலமே நாம் விஞ்ஞானமும் தொழில்நுட்பமும் எந்த அளவிற்கு வளர்ந் துள்ளது என்பதைக் காணலாம்.

காட்சிகளைப் பார்த்து இரசிக்க விஞ்ஞானம் எமக்களித்த கண்டு பிடிப்பே தொலைக்காட்சி ஆகும். அன்றெல்லாம் வானொலியிற் குரலை மட்டுமே மனிதன் கேட்டுக்கொண்டிருந்தான். ஆனால் இன்று, அவன் முகத்தைப் பார்த்து இரசிக்குமளவிற்கு விஞ்ஞானம் நமக்கு வசதிகள் படைத்துத் தந்துள்ளது. தொலைக்காட்சியில் தொலைவில் நடைபெறும் சம்பவங்களைப் பார்க்கலாம். படம், நாடகம் என்பவற்றைப் பார்ப்பதை எமது பொழுது போக்காக மாற்றியமைக்குமளவுக்கு விஞ்ஞானம் விண்ணைத் தொட்டுவிட்டது.

விஞ்ஞானம் வளர்ச்சிகண்ட இந்த நவீன காலத்திற் சகல துறைகளும் வளர்ந்து விட்டன. இதற்குக் காரணம் விஞ்ஞான, தொழில் நுட்ப வளர்ச்சியே எனலாம். விஞ்ஞானம்: கல்வி, தொடர்பாடல், மருத்துவம்

போன்ற முக்கிய துறைகளில் வளர்ச்சியை ஏற்படுத்தியுள்ளது. இதனால் மனித குலமும் முன்னேற்றம் கண்டுள்ளது.

மின்னஞ்சல் என்றால் என்ன? – என்று வினவினால்; பதிலாக விஞ்ஞானம் என்பதே கிடைக்கும். மின்னஞ்சலிலும், தொலைபேசி போலவே தொடர்பாடலை மேற்கொள்ளப்படுகின்றது. இது தொடர்பாடல் துறையில் விஞ்ஞானம் ஏற்படுத்திய மகத்தான சாதனையாகும். ஒரு மனிதன் வெளிநாட்டிலுள்ள தனது உறவினருக்கு அவசரக் கடிதம் ஒன்றை அனுப்ப மின்னஞ்சல் உதவுகின்றது. அத்துடன் தற்போது எல்லா நபர்களது கையிலும் வாழும், வீடியோத் தொலைபேசிபோல, மின்னஞ்சலிலும் முகம் பார்த்துப் பேசும் வசதி காணப்படுகின்றது. இவ்வாறு மின்னஞ்சல் எல்லா மனிதர்களது தொடர்பாடல்களையும் இலகுபடுத்துகின்றது.

இணையம், இது தொடர்பாடற்றுறைக்கும், கல்வித்துறைக்கும் பெரும்பங்களிப்புச் செய்கிறது. இதன்மூலம் கடிதங்கள் அனுப்பலாம். படங்கள் அனுப்பலாம். அது மட்டுமா? தொலைபேசி, தொலைக்காட்சி வசதிகளும் உண்டு. இது, இணையம் தொடர்பாடற்றுறைக்கு ஆற்றும் பங்காகும். மேலும் ஒவ்வொரு மாணவர்களிற்கும் கல்விக்குத் துணைபுரியும் சாதனமாகவும் இணையம் விளங்குகிறது. ஒரு மாணவன் தனக்குத் தேவையான புத்தகப் பிரதியை வெளிநாட்டிலிருந்து இணையம்மூலம் பெறலாம். பல்லாண்டுகளுக்கு முற்பட்ட பத்திரிகைகளை வாசிக்கலாம். தகவல்களைப் பெறலாம். மேலும் பல சேவைகளையாற்றுவதன்மூலம் கல்வித்துறையை மெருகுடன் வளர்த்துள்ளது.

கணினியை எடுத்துக்கொண்டால் விஞ்ஞானம்பெற்ற குழந்தையே கணினி எனலாம். இணையம், மின்னஞ்சல், தொலைபேசி, தொலைக்காட்சி, வானொலி போன்ற எல்லா விஞ்ஞானத் தொழில்நுட்ப வசதிகளையும் கொண்டமைந்தது கணினி. இது மனித வாழ்வில் முக்கிய ஒன்றாகக் காணப்படுகின்றது. இன்று வேலை வாய்ப்புத் தேடிச் செல்லும் ஒருவரிற்குக் கணினி அறிவு கட்டாயம் இருக்கவேண்டிய ஒன்றாக உள்ளது. இதன் மூலம் கணினியின் முக்கியத்துவம் புலனாகிறது. இணையம் இப்பூவுலகை ஒருசிறு கிராமமாக்கிவிட்டது. அதுபோல, கணினியும் உலகை ஆளுகின்றது. அத்துடன் தனது சேவையை உலகிற்குச் சரிவர வழங்குகின்றது. இன்று ஒவ்வொரு வீட்டிலும் தொலைக்காட்சி வாழ்வதுபோல, கணினியும் முக்கிய இடத்தைப் பிடித்து வாழ்கின்றது. கணினியும் வீட்டின் ஓர் அங்கத்தவனாகி விட்டது என்றே கூற வேண்டும்.

மருத்துவத்துறையில் எக்ஸ் கதிர்ப் படம் போன்ற பல அரிய கண்டுபிடிப்புகள் மூலம் வளர்ச்சியை ஏற்படுத்தியுள்ளது. ஆரம்பகாலங்களில் தடுப்பூசிகள் காணப்படவில்லை. "வருமுன் காக்கும் பழக்கமும்" இருக்கவில்லை. ஆனால் இவை மனிதர்களின் அறிவு மேம்பாட்டாற் போலியோ தடுப்பு மருந்து, ருபெல்லா தடுப்பூசிகள் குழந்தைகளுக்கு இடப்படுகின்றது. ஏனென்றால், குழந்தைகள் வளர்ந்து பெரியவர்களாக வரும்போது ஏற்படவிருக்கும் நோய்களைத் தடுப்பதற்கே ஆகும். மேலும், உடலினுள் உள்ள குறைபாடுகளைக் கண்டறியவும், நோய்கள் உண்டாகும் நிலைமைகளைக் குறைக்கவும் ஏற்ற பல வழிகளை விஞ்ஞானம் படைத்திருக்கின்றது.

முன்னைய காலங்களிற் சிறுநீர்ப் பையிற் கல், வயிற்றிற் கட்டிகள் என்றால் அவற்றைச் சத்திரசிகிச்சை செய்து மாற்றினார்கள். அதன்போது உடலிற் காயங்கள் ஏற்படுத்தப் பட்டன. ஆனால் இன்று எந்த விதத்திலும் காயங்களோ, தீமைகளோ ஏற்படாது, சத்திர சிகிச்சை செய்து நோய்நிலைமையை நீக்கு கின்றனர். இவற்றையெல்லாம் விஞ்ஞானத் தொழில்நுட்பத்தின் விந்தை என்றே கூறலாம். விஞ்ஞான வளர்ச்சிமூலம் செய்யும் வேலைகளை இலகுவாகவும், விரைவிலும் மேற்கொள்ள வழி பிறந்துள்ளது. இது மனித அறிவு மேம்பாட்டால் உண்டான பயனே எனலாம்.

மேலும் விவசாயத் துறையிலும் விஞ்ஞானம் கலந்துவிட்டது. முன்னைய காலங்களில் வயல்களை ஏர்கொண்டு மனிதன் உழுதான். ஆனால் இன்று இயந்திரத்திடம் அப்பொறுப்பை ஒப்படைத்துவிட்டுத் தான் ஒரு சோம்பேறியாக வாழ்கிறான். ஒவ்வொரு மனிதனும் களைபிடுங்குதல், கிருமிநாசினி தெளித்தல் போன்றவற்றிற்கு இயந்திரத்தைப் பயன்படுத்துகின்றான். இதனால் தானும் சோம்பெறியாகி மற்றவனையும் சோம்பேறி யாக்குகின்றான். மேலும் விவசாயத்துறை, மருத்துவத்துறை என்பவற்றிற் பயன்படுத்தப் படும் விஞ்ஞான தொழில்நுட்ப அறிவால் வேலைகள் இலகுவாக்கப்படுகின்றன. நேரம் மீதப்படுத்தப்படுகின்றது. வேலைகள் சரியாக வும், திருத்தமாகவும் செய்யமுடிகின்றது. இவை யெல்லாம் விஞ்ஞானம் எமக்களித்த நன்கொடை என்றே கூறலாம். இதன்மூலம் விஞ்ஞான தொழில் நுட்ப வளர்ச்சியிற் வேகமும் புலனாகிறது.

விஞ்ஞானம் தனது இரு முகங்களிலே இதுவரை நேரமும் எமக்குக் காட்டியது நன்மை பயக்கும் முகமாகும். இது நன்மை பயப்பதோடு நின்றுவிடாது தீமையான விடயங்களையும் எமக்கு அளித்துள்ளது. என்னடா! நன்மை நன்மை என்று பேசிவிட்டுத் தற்போது ஏன் தீமையும் பயக்கிறது என்று கூறுகின்றேனே என்று நீங்கள் சிந்திப்பீர்கள். நன்மை பயக்கும் எல்லாம் சிறிதாவது தீமையும் பயக்கும் என்ற கோட்பாட்டை நாம் நடைமுறை வாழ்க்கையில் அறிந்திருப்போம். அதுபோல் விஞ்ஞானமும் தொழில்நுட்பமும் எவ்வளவு நன்மை புரிகின் றதோ, அதேஅளவு தீமைகளையும் வழங்கு கின்றது.

ஒரு மனிதன் தனது வேலைகளை இயந்திரங்களிடம் ஒப்படைத்துவிட்டு, தான் ஒரே இடத்தில் இருக்கின்றான். இதனால் அம்மனிதனின் செயற்பாடுகளிற் பாதிப்பு ஏற்படுகின்றது. அத்துடன் பல இடங்களிற்கு நகர்ந்து சென்று ஒரு மனிதன் செய்யும் வேலையை இயந்திரங்கள் ஒரே இடத்திலிருந்து கொண்டு செய்கின்றன. இதனால் மனிதர்கள் பல புதிய புதிய நோய்களுக்கு ஆளாகின்றனர். அத்துடன் சிறு வயதிலேயே மரணமும் சம்ப விக்க வழிவகுத்து மனிதர்களின் ஆயுட் காலத்தைக் குறைக்கின்றது.

அதுமட்டுமா? விஞ்ஞானத் தொழில் நுட்பத்தின் அரிய கண்டுபிடிப்பே அணுகுண்டு ஆகும். இவ் அணுகுண்டுக் கைத்தொழில் சமூகத்திற்குச் செய்த தீமைகள் அளப்பெரியன. இன்றைய யுத்த காலத்தில் இலட்சக்கணக்கான உயிர்கள், உடைமைகள் சேதமடைந்து அழிந்து போயின. இதற்கு முக்கிய காரணம் இவ் அணுகுண்டுக் கைத்தொழிலின் வளர்ச்சியே எனலாம். இரண்டாம் உலக யுத்தத்தின்போது அமெரிக்க விஞ்ஞானிகள் கண்டுபிடித்த அணுகுண்டை ஜப்பான் மீது வீசினர். இதன்

விளைவு என்ன? அக்குண்டின் கதிர்வீச்சின் தாக்கம் இன்றும் காணப்படுவதால் ஜப்பானில் இன்றும் ஊனமுற்ற, நோய்வாய்ப்பட்ட குழந்தைகள் பிறக்கின்றனர். இதே நிலைதான் ஈரானிற்கும்.

உயிர்களிற்குத் தீங்கு ஏற்படக்கூடாது என்று நினைத்த விஞ்ஞானிகள், அணுகுண்டுப் பரிசோதனையைக் கடலில் மேற்கொள் கின்றனர். ஏன் கடல் வாழ் உயிரினங்கள் உயிர்களில்லையா? அவையும் உயிர்கள்தானே. அவ்வாறு செய்வதனாற் கடல்வாழ் உயிரினங் களின் குடித்தொகை வீழ்ச்சி அடைகின்றன. இது விஞ்ஞான வளர்ச்சியினால் உயிர்களிற்கு ஏற்படும் சேதமே எனலாம்.

மேலும் வாகனங்கள் வெளிவிடும் புகைமூலம் வளியும், தொழிற்சாலையிலிருந்து வெளியேறும் கழிவுகள்மூலம் சூழலும் மாசுறுகின்றன. அத்துடன் விவசாயத்துறையில் இயந்திரங்கள்மூலம் கிருமிநாசினி இடும்போது மண்ணுடன் அவை கலக்கின்றன. இதனால் மண்ணில் வாழும் உயிரினங்கள் இறக்கின்றன. மண் நச்சுத்தன்மையடைகின்றது. இதனால் மண்ணின் வளம் குன்ற, விஞ்ஞான வளர்ச்சி வழிவகுக்கின்றது. இவ்வாறே எல்லாத் துறைகளிலும் நன்மை பயக்கும் விஞ்ஞானம் தீமையும் பயக்கின்றது.

பல விஞ்ஞானிகள் கண்டுபிடித்த சாதனங்கள்மூலம் வளர்ந்த விஞ்ஞானம் நன்மை பயப்பதும், தீமை பயப்பதும் கையாளும் மனிதர்களாகிய எமது கைகளிலேயே தங்கியுள்ளது. எனவே விஞ்ஞான உலகில் மிதந்து வாழும் மனிதர்களாகிய நாங்கள், வளர்ந்த விஞ்ஞானம் வீழ்ச்சி காணா திருக்கவும், எமக்குத் தீமை பயக்காது இருக்கும் வண்ணமும் வழிவகுக்க வேண்டும். அதற்கான சிறந்த வழி விஞ்ஞான தொழில் நுட்பத்தின் இரு முகங்களில் நாம் நன்மை பயக்கும் முகத்தைப் பயன்படுத்தி நன்மை பெறுவதாகும். ஆகவே, மனிதர்களாகிய நாங்கள் விஞ்ஞானம் நமக்களித்த சாதனங்களையும், பரிசுகளையும் எமது வேலைகளை இலகுவாக்குவதை மட்டும் நோக்காகக் கொள்ளாது, அது நமக்களிக்கும் நன்மைகளையும் தீமைகளையும் எமது சிந்தனையில் நிலைநாட்டி, அவற்றின் வழியே சரியாகவும், திருத்தமாகவும் சிந்தித்துச் செயற்படுவோமாக.

"வாழ்க மனிதர் குலம்
வளர்க விஞ்ஞான நெறி"

**பு. உமேஸ்வரன்**
தரம் 9A

# சங்ககாலப் பாடல்களின் சிறப்பு

தமிழ்மொழி சங்ககாலம் என்ற அகவையில் சான்றோரினால் சீராட்டி சரளமாய் கவி பாடப்பட்ட சிறப்பைக் கொண்டது. இக்காலத்தில் காதலும், வீரமும் கருத்துடன் எழுந்து நின்று கவிதைகள் மலர்க்கொத்துக் களாய் மலர்ந்து மணம் வீசின. தமிழ்மொழி தமிழகத்தில் மட்டுமன்றி மண்டலமெங்கும் மங்காப் புகழ் கொண்டது. இக்காலத்தில் மன்னரின் மணிமுத்தாய் மட்டற்றதோர் மகரந்தமாய் தோன்றி முத்தமிழ் முகிழ்த்த செல்வம் மூன்று முத்தாய் முகிழ்த்தது இக்காலம் இக்காலத்தில் புலவர்கள் பலர் தேன் போன்ற தமிழைப் பேருழைப்போடும் ஒற்றுமை யோடும் ஆய்ந்து சுவைத்தனர். மேலும் இக்காலத்தில் எழுந்த நூல்களின் சிறப்புக்களை ஔவையார் பாடிய நல்வழிச் செய்யுள்மூலம் அறிய முடிகிறது.

"பாலுந் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலுங் கலந்துனக்கு நான் தருவேன்
- கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீ எனக்குச்
சங்கத் தமிழ் மூன்றும் தா"

பால், தெளிதேன், பாகு, பருப்பு ஆகிய நான்கு பொருட்களையும் கலந்து சுவைத்தால் எத்தகைய சுவையாக இருக்கும் அத்தகைய இனிமையான உணவைக் கொடுத்து விட்டு அதற்கு ஈடாக இறைவனிடம் அவ்வுணவினை விட இனிமையான சங்கத் தமிழைத் தரும்படி வேண்டுகிறார். இதிலிருந்து சங்கப்பாடல்கள் எத்தகைய இனிமையானவை என்பது நமக்குப் புலனாகிறது. இக்காலத்தில் தோன்றிய இனிமையான பாடல்கள் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்பனவாகும்.

"முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
பெருகு வளமதுரைக்காஞ்சி மருவினிய
கோல நெடுநல்வாடை கோல்குறிஞ்சி
பட்டினப்பாலை கடாத்தொடும் பத்து"

என்ற பத்துப்பாட்டு நூலும்

"நற்றிணை நல்லகுறுந்தொகை ஐங்குறுநூறு
ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்
கற்றறிந்தோர் ஏத்தும் கலியோடகம் புறமெனும்
இத்திறந்த எட்டுத் தொகை"

என்ற எட்டுத்தொகை நூலும் தமிழ் மக்களின் முதுசொம் என்றே கருதமுடிகிறது. இந்நூல்களை இயற்றிய சான்றோர்கள், தெய்வ அருள் கைவரப்பெற்றவர்கள். மணிவாசகப் பெருமான் கூட "கடலில் ஆய்ந்த ஒண்தீந்தமிழ்" எனத் தமிழைச் சிறப்பித்துள்ளார். சங்க காலப்பாடல்கள் படிக்கும் தோறும் இன்பம் பயப்பவை இப்பாடல்களில் புலவர்கள் உவமை அணி, உள்ளுறை உவமை, இறைச்சி போன்ற அணிகளை கையாண்டுள்ளனர். சங்கப்புலவர் கள் அணிகளுக்குத் தாயான உவமையணியைக் கையாண்டு பாடியுள்ள மையைக் கருத்தில் கொண்டு பேராசிரியர் மு.ஈ.வரதராஜன் சங்க இலக்கியங்கள் ஓர் உவமைக்களஞ்சியம் எனச் சுட்டியுள்ளனர்.

சங்க காலப் பாடலான

"யாயும் ஞாயும் யாராகியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைக்கேளிர்
யானும் நீயும் எவ்வழி அறிதும்
செம்புலப் பெயல் நீர் போல
அன்புடை நெஞ்சம் தாங்கலந்தனவே"

என்ற பாடலினை நோக்கும்போது ஒரு மனத்தினரான தலைவனும் தலைவியும் ஒத்த

மனத்தினராய் ஒருமித்துக் காதல் கொள்ளும் தன்மையினை ஆகாயத்தில் இருந்து விழுகின்ற நீரானது, எவ்வாறு தனது தன்மையை இழந்து நிலத்தின் தன்மையுடன் ஒன்றுபடக் கலந்தி நிலையினை அதாவது மண்வேறு நீர்வேறு என்ற நிலை மாறி, செந்நிலத்தின் தன்மையைப் பெற்று விடுகிறது. தலைவனதும் தலைவியி னதும் மனங்கள் பிரிக்க முடியாதபடி ஒன்று கலந்த தன்மையினை எளிமையாக விளங்க வைப்பதற்கு இதனை விடச் சிறந்த உவமை கிடைக்காது என எண்ணியதுடன், நாம் அன் றாட வாழ்க்கையில் காண்கின்ற உவமையை விளக்குவதும் நோக்கத்தக்கது.

இதனைவிடச் சங்கப்புலவர்கள் உள்ளுறை, இறைச்சி ஆகிய இரட்டை அணி களைக் கையாண்டு சங்கச் செய்யுள்களை அழகுற அமைத்துள்ளமையை காணமுடிகிறது. உள்ளுறை உவமை பற்றி நோக்கும் போது உள்ளுறை என்பது உள்ளுறுத்திச் சொல்லுதல் என்பதாகும். வெளிப்படையாக நிகழ்வது ஒன்றைக் குறிப்பதுடன், இன்னொன்றையும் சுட்டி உணர்த்துவதைக் குறிக்கும் தலைவன் தலைவியைத் திருமணம் செய்ய ஆர்வம் இன்றிக் காலம் கடத்தி வந்தான். இதனால் தலைவி பிரிவுத்துயர் தாங்காது வருந்துகின் றாள். இவ்வாறு வருந்தும் நிலையினை தலைவனுக்கு உரைத்து அவனை மணம் செய்யும்படி இடித்து உரைக்கின்றாள் தோழி. அவன் உள்ளம் கொள்ளும் வகையில் இரு உவமைகளைக் கூறும் திறன் நயக்கத்தக்கது. பலாமலம் ஒன்று காய்கள் பல காய்த்து சுமக்க முடியாமல் வருந்துவதும் மற்றைய மரமானது வேர்களில் பல காய்த்துப் பழமானதும் மரத்திற்கு இடையூறு ஏற்படாது இந்த இரு வகைப் பலாமரங்களையும் அவனது சிந்தைக்கு கொண்டுவந்த தோழி கோட் பலாவைப் போல் முறிந்து போவதற்கு இடர் தரும் வாழ்வு வேண்டா என்று உணர்த்தி வேர்ப்பலா வைப்போல எத்துணை இடர் வரினும் பொருட் படுத்தாது எளிதில் தாங்கிக்கொண்டு, கவலையின்றி வாழும் வாழ்வு வேண்டும் என்பதைத்தானே உணர்ந்துகொண்டு திருமணம் செய்யத்தயாராகுமாறு கூறுவது தோழியின் மதிநுட்பத்தை உணர்த்துகிறது. மேலும் இவள் உயிர் சிறியதாக இருப்பினும் தலைவி கொண்ட காதல் மிகப் பெரிதாக உள்ளது என்பது நோக்கத்தக்கது அதனை உணர்த்தும் குறுந்தொகைப்பாடலானது

*"வேரல் வேலிவேர்க் கோட்பலவின்*
*சாரல் நாடசெல்வியை ஆகுமதி*
*யாரஃதறிந்திநோரே சாரல்*
*சிறு கோட்டுப் பெரும் பழம் தூங்கியாங்கியவள்*
*உயிர் தவச்சிறிது காமமோ பெரிதே"*

சங்ககாலக் கவிதையில் சிறப்பான கவிதையொன்றினை நோக்கும் போது இல்லறம் மேற்கொண்ட தலைவர் தலைவியுடன் அன்பாக வாழ்ந்து வருகின்றான். இசைக்கலை வல்ல பாணன் ஒருவனின் தொடர்பினால் பரத்தை யின் உறவு கிடைத்தது. இதனால் தலைவி துயரமடைந்தாள். தலைவன் தலைவியைக் கண்டு காதல் கொண்டு பழகிய பின்னர் திருமணம் காலம் தாழ்த்தச் செல்வதைக்கண்டு மனம் வருந்திப் பாடுவதை அவதானிக்க முடிகிறது. சிறு வெண்காக் கையானது தனது ஆண் காக்கையுடன் நீராடுவதைப் போன்று தாம் நீராட முடியவில்லையே என்ற உணர்வை இறைச்சிப் பொருளினூடாக எடுத்துச் சொல்வதனை அவதானிக்கலாம். அதனை நற்றிணைப் பாடலினூடாக மிக அழகுற விளக்குகின்றார்.

"மையற விளங்கிய மணிநிறவிசும்பின்
கைதொழு மரபின் எழுமீன் போல
பெருங்கடற் பரப்பின் இருபுறம் தோய
சிறுவெண்காக்கை பலவுடன் ஆடும்
துறைபுலம் படைத்தே தோழியாண்டும்"

சங்கப்பாடல்கள் யாவும் சொல்லோவியங்களாக அமைந்தது மட்டுமன்றி இற்றை வரைக்கும் தன் புகழ் மாறாத நிலையில் இருப்பதனை அவதானிக்க முடிகிறது.

## பருவகாலம் கூறும் பழமொழிகள்

1. "தை" பிறந்தால் வழி பிறக்கும்
2. "மாசி" பனி மூசிப் பெய்யும்.
3. "பங்குனி" மாத வெயிலில் படையும் கலங்கும்.
4. "சித்திரை" மாத வெயில் பத்தரை மாற்றுத் தங்கம்
5. "வைகாசி" மழையில் வாழை பெருகும்
6. "ஆனி" அரை ஆறு. ஆடி முழு ஆறு.
7. "ஆடிக்" காற்று அம்மியும் தூக்கும்.
8. "ஆவணி" மேகம் தாவணி போடும்.
9. "புரட்டாதி" வெயில் பொன்னுருகக் காயும். மண்ணுருகப் பெய்யும்.
10. "ஐப்பசி" அடைமழை **"கார்த்திகை"** கனமழை
11. "கார்த்திகை" க்குப் பின் மழையும் இல்லை. கர்ணனுக்குப்பின் கொடையும் இல்லை.
12. "மார்கழிப்" பனியில் பச்சையும் துளிர்க்கும்.

**த.நிசாந்தன்**
தரம் - 8B



* வைரவிழா நிகழ்வு தரும் நிஜம்



கணினி அறை மற்றும் தமிழ்த்தின விழாவில் பிரதம விருந்தினராக
திரு.குழந்தைவேல் (ஆணையாளர்) பழைய மாணவர் கலந்து சிறப்பிக்கும்போது...



2008இல் நடைபெற்ற விளையாட்டுப் போட்டியில் குழந்தை ம.சண்முகலிங்கம்
முன்னாள் அதிபர் பிரதம விருந்தினராக கலந்து சிறப்பிக்கும்போது...





3A பெற்ற மாணவருக்கு வலயக் கல்வி பணிப்பாளரினால் பரிசில் வழங்கும் நிகழ்வு



சாரணர் குழு

# புரதக் குறையூட்டத்தின்போது ஏற்படும் சிக்கல்கள்

குவாசியக்கோர் நோய் நிலைமையின்போது ஏற்படும் உக்கிர புரதக் குறைபாடு காரணமாக உடலினுள் புரதம் சிதைவடைதல் நிகழும். விசேடமாகக் குடல் இழையங்களின் சிதைவு காரணமாக உட்சுவர்கள் தேய்வடைய ஆரம் பிக்கும். இதனால் உணவுச் சமிபாடும் அகத் துறிஞ்சலும் குறையும். தொடர்ந்து வயிற் றோட்டம் ஏற்படும். உடல் எடை குறைவடையும்.

ஈரலிற் கொழுப்பானது சேமிக்கப் படுகின்றது. இந்நிலையின் விளைவாக ஈரல் வீக்கமடையும். குடல் மூலம் இரும்பு, போலிக் கமிலம் என்பன அகத்துறிஞ்சப் படாமையும், என்பிழையங்களிற் செங்குருத்திச் சிறுதுணிக் கைகளின் உற்பத்தி குறைதலும் காரணமாகக் குருதிச்சோகை ஏற்படும். அடிப்படை அனுசேப வீதம் குறையும். குருதி இழைய அல்பியுமின் குறைவதன் காரணமாக உடற்பருமனில் வீக்க நிலைமை ஏற்படும். தோல் உலர்ந்த தன்மை காணப்படுவதாற் சிலவேளைகளில் தோல் கழன்று செல்லவும் தொடங்கும். அப்பகுதியிற் புண்கள்கூட ஏற்படலாம். அதிகமாக கால்களின் பின்பகுதியில் இவ் அறிகுறிகள் காணப்படும்.

தலைமுடி குறையும், மென்மையடையும், நிறமாற்றம் காரணமாக சாம்பல் கலந்த செந்நிறம் ஏற்படும். இலகுவில் உதிரக்கூடும். கடவாயவிதல், நாக்கு, உதடு என்பவற்றில் புண்கள் ஏற்படல் என்பவற்றையும் அவதானிக் கலாம்.

இந்நோயாற் பீடிக்கப்பட்டவர்களில் நீர்ப் பீடனத்தன்மை குறைவதால் மேலும் பல்வேறு நோய் நிலைமைகளுக்கு ஆளாகலாம். மேலும் உணவில் விருப்பமின்மை, வயிற்றோட்டம், எதிலும் வெறுப்பான தன்மை, சுற்றிவர இடம் பெறும் நிகழ்வில் ஆர்வமின்மை போன்ற அறி குறிகள் தென்படும். இந்நிலையைப் பிற்காலத் திற் போசணையுள்ள உணவுகளை வழங்கு வதன்மூலம் மாற்ற முடியாது.

குறைபோசணை நிலையைக் கட்டுப்படுத்த யுனிசெவ் நிறுவனம் மேற்கொண்டுள்ள GOBI, 3F, நிகழ்ச்சிகள் பின்வருமாறு

**GOBI**

| | | |
|---|---|---|
| G - Growth chart | - | சுகாதார வளர்ச்சிப் பதிவேடு |
| O - Oral Re-hydration | - | வாய்மூலம் வழங்கப்படுவதால் உலர்நிலையைக் கட்டுப் படுத்துதல். |
| B - Breast Feeding | - | தாய்ப்பாலூட்டலில் ஆர்வமூட்டல் |
| I - Immunization | - | நீர்ப்பீடனம் வேலைத்திட்டத்தை நடைமுறைப் படுத்துதல். |

**3F**

| | | |
|---|---|---|
| F - Female literacy | - | பெண்களின் அறிவு மட்டத்தைக் கூட்டல் |
| F - Family Planning | - | குடும்பத்திட்டமிடற் செயற்றிட்டத்தை விரிவாக்கல் |
| F - Food Intervention | - | உணவுகளைப் பிரசித்தப்படுத்தல். |

எனவே GOBi, 3F ஆகிய நிகழ்ச்சித் திட்டங்களைப் பயன்படுத்தி புரதக்குறையூட்டத்தின் போது ஏற்படக்கூடிய சிக்கல்களைத் தவிர்த்துக் கொள்வோம்.

பவித்திரா
A,C 2010 கலைப்பிரிவு.

# திருக்குறள்

பொய்யாமொழிப் புலவரால் ஆக்கப்பட்டுத் தமிழின் பொய்கையாய்த் தண்ணமுதம் வழங்கிக் கொண்டிருக்கும் காலத்தால் சாகாக் கவின் இலக்கியமே திருக்குறளாகும்.

எம்முடைய நாட்டில் மட்டுமன்றி உலக நாடுகள் முழுவதிலும் சாதி, சமய, இன வேறுபாடுகளின்றிப் பாராட்டிப் பயன் அடையத் தக்க நூல் திருக்குறளாகும். திருக்குறளை ஆங்கில மொழியில் மொழி பெயர்த்தவர் ஜி.யூ.போப் பிரன்ஞ் மொழியில் மொழி பெயர்த்தவர் யூலியன் வின்ஸோன் ஆவார். திருக்குறளைத் திருவள்ளுவர் எல்லோரும் விளங்கத்தக்க வகையில் எடுத்துக்கூறியுள்ளார். திருவள்ளுவர் நமது வாழ்க்கைச் சிக்கல்களைத் தீர்ப்பதற்கு வழிகாட்டியாக உள்ளார். ஏனென்றால் இரண்டு அடிகளிலே 1330 பாடல்கள்மூலம் எமது வாழ்க்கைச் சிக்கல்களையும் தத்துவங்களையும் மிக அழகாகக் கூறியுள்ளார்.

திருக்குறள் தோன்றிப் பல நூற்றாண்டுகள் கழிந்தும் அந்நூல் இன்றும் சிறப்புடன் விளங்குகின்றதென்றால் அதன் பெருமை பெரிது எனலாம். நாடு மக்கள், மொழி நிறம், சமயம் ஆகிய அனைத்துக்கும் பொதுவான ஒப்பற்ற நூல் ஒன்று உள்ளது என்றால் அது திருக்குறளே. உலகிலேயே அதிகமான மொழிகளிலேயே மொழிபெயர்க்கப்பட்ட நூல்கள் மூன்றாகும். முதலாவது பைபிள், இரண்டாவது குரான் மூன்றாவது திருக்குறளாகும். முதலிரண்டு சமய நூல்கள் என்ற அடிப்படையில் வைத்து நோக்கின் வேறாக அமையக் குறள் ஒன்றே உலகப்பொது நூலாகும் தன்மை பெறுகிறது.

திருக்குறள் சமூகத்திலே நல்லொழுக்கத்தை நிலைநாட்ட வந்த நூலாகும் என்பது இன்று பலராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. பண்டைக்காலம் கவிஞரான கவுணியனார் அதனைத் தம் கருத்திற் கொண்டு பின்வருமாறு பாடியுள்ளார்.

சிந்தைக் கினிய செவிக்கினிய வாய்க்கினிய
வந்த இரு வினைக்கு மாமருந்து – முந்திய
நன்னெறி நாம் அறிய நாப்புலமை வள்ளுவனார்
பன்னிய இன்குறள் வெண்பா.

எனும் பாடல் இதனை விளக்கி நிற்கின்றது. அதே போன்று திருக்குறளைக் கல்லாதவர்கள் அறிவற்றவர்களென்று கருதப்பட வேண்டியவர்களாவார். சங்ககாலப் புலவர்களில் ஒருவரான பரணர் முன்னொரு காலத்தில் திருமால் குறுகிய வடிவமுடையவனாய்த் தோன்றிப் பின் நெடுமாலாக ஓங்கி உயர்ந்து தன் இரண்டடியால் உலகம் முழுவதும் ஒருங்கேயளந்த காட்சிபோல அறிவினால் மேம்பட்ட ஆசிரியர் வள்ளுவரும் தம் குறுகிய குறளடியிரண்டால் மக்கள் கருதும் கருத்தையெல்லாம் அளந்து விட்டாரென்று உண்மையைக் கூறினார்.

வடமொழியில் சீரிய நூலாகவும், பொய்யாமொழியாகவும் கருதப்படுகின்ற வேதத்தையும், தமிழ் மொழியில் திருக்குறளையும் ஒப்பிட்டு நோக்க முடிகிறது. ஒரு சார்பினருக்காக மட்டுமின்றி. எல்லோருக்கும் பொதுவாகச் செய்யப்பட்ட பொதுநூலாக எல்லோராலும் போற்றப்படுகின்றது. இவ்வாறு பலராலும் பேசப்படுகின்ற திருக்குறளின் அமைப்பு அதன் பெருமைகளைச் செய்து நிற்கின்றது. வாழ்வுக்குத் தேவையான மூவகையான பண்புகளை

முப்பெரும் பிரிவுகளாக வள்ளுவர் அமைத்துள்ளார். அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றும் திருக்குறளில் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என வகுத்தமைக்கப் பட்டுள்ளன.

மக்களுக்கு நல்ல துணையாக இருப்பது அறமாகையால் வள்ளுவர் அதனை முன்நிலைப் படுத்தி அமைத்துள்ளார். அறத்தை இருவகைப் படுத்தி இல்லறவியல் முடிவிலும் துறவியல் அதன் பின்னும் அமைத்துள்ளனர். துறவறத்தைக் கையாள்பவர்களுக்கும் உறுதுணையாக இருக்கக்கூடியவர் இல்லறத்தவராதலால் இல்லறத்தை வள்ளுவர் முதலில் கூறினார். இருபது அதிகாரங்களில் இல்லறத்துக்குரிய பண்புகளை இனிது விளக்கி உள்ளார். துறவியலில் பதின்மூன்று அதிகாரங்கள் கொண்டது. பொருட்பால் அரசியல், அங்கவியல் குடியியல் என்று மூன்று பிரிவாக அமைந்துள்ளது. காமத்துப்பால் களவியல், கற்பியல் என இரு பிரிவுகளைக் கொண்டது. களவியல் ஏழு அதிகாரங்களையும் கற்பியல் 18 அதிகாரங்களையும் உடையது. இதனால் அறம், பொருள், இன்பம், என்னும் நால்வகையான உறுதிப் பொருளையும் வள்ளுவர் நூற்றுமுப்பத்துமூன்று அதிகாரங்களில் அமைத்துக் கூறியுள்ளார். பல அரிய விஷயங்களை வரையறைப்படுத்திச் சுருக்கமாகத் திருக்குறள் கூறுகின்றது. ஒரு பொருளின் இலக்கணத்தைக் கூறுதலும் அதன் இன்றியமையாமையை விளக்குதலும் அதனாற் பெறும் பலனை அறிவுறுத்தலும் அதனை நாம் மேற்கொள்ளுதற்குரிய தந்திரத்தை உணர்தலும் உலகத்திலுள்ள பொருட்களின் வாயிலாக உண்மையை நிரூபித்தலும் உவமைகளாலும் உதாரணங்களாலும் பொருளைப் புலப்படுத்துதலும் திருவள்ளுவரின் தனித்துவமாகும்.

மக்கள் விலக்க வேண்டியவற்றைப் பெரும்பாலும் அவையஞ்சாமை, அழுக்காறாமை, இடுக்கணழியாமை, இன்னாசெய்யாமை, கல்லாமை, கள்ளுண்ணாமை, கொல்லாமை, சிற்றினஞ்சேராமை, பயனில சொல்லாமை, பிறனில் விழையாமை, புறங்கூறாமை, பெரியாரைப் பிழையாமை, பொச்சாவாமை, மடியின்மை, வெகுளாமை, வெஃகாமை, வெருவந்த செய்யாமை என்பன போன்று எதிர் முகத்தாலும் கூறும் பண்பும் வள்ளுவரது தனிச் சிறப்பாகும். ஒரு நீதியை உடன்பாட்டு முகத்தாலும், மறைமுகத்தாலும் வள்ளுவர் புலப்படுத்துவார்.

இல் வாழ்வானுக்கு முக்கியமாக ஐந்து கடமைகள் உண்டு.

- தன் முன்னோர்களான பிதிரர்களுக்குச் செய்ய வேண்டிய கடமை
- வணக்கம் வழிபாடுகளால் தெய்வத்திற்குச் செய்ய வேண்டிய கடமை
- தன்னையண்டிய விருந்தாளிகளை முகமலர்ந்து உபசரிக்கும் கடமை.
- தன் சுற்றத்தாருக்கும் தன்னையொத்த மற்ற உயிர்களுக்கும் செய்ய வேண்டிய கடமை.
- தனது வாழ்வு மாசற்ற ஆத்தும சுகம் பெறுவதற்காகச் செய்யவேண்டிய கடமை.

இதனால் அவன் தன் கடமையைச் சரிவரச் செய்ய வேண்டியது தனக்காக மட்டுமன்றிப் பிறருக்காகவும் அமைகின்றது. உலகம் இயங்கவும் இல்வாழ்வானே காரணமாதலால் அவன் தெய்வமாகவும் கருதப்படுகிறான் என வள்ளுவர் கூறுவது சாலவும் பொருந்தும்.

திருக்குறள் முத்துப் பரலாகச் சுடர்விட்டு இளைஞர்களை வாழ்வித்துக்கொண்டிருக்கின்றது. திருக்குறள் ஒரு ஜீவரசம். அது கற்றவர்க்கும் கடைப்பிடிப்பவர்க்கும் நித்தி

யானந்தத்தையே வழங்கிக் கொண்டிருக்கும் திருக்குறள் கருத்துப்படி ஒருவன் வாழ்வானாக இருந்தால் அவன் தன் வாழ்வின் முழுமையைப் பெற்றவனாகின்றான்.

இ.ரஜினா,
தரம் – 11B

## நட்பு



நட்பு என்பது மூன்றெழுத்து – அதுவே
நம் நாட்டின் முதுகெலும்பு
கண்ணுக்குத் தெரியாமல் பிரிவது உயிர்
காத்திருந்து அணைப்பது நட்பு
பரிவோடு பாலூட்டும் அன்னை மூன்றெழுத்து
பாசத்தோடு கரங்கள் நீட்டும் நட்பு மூன்றெழுத்து

ஆர்.சோபனா
தரம் 11 B

## சுனாமி

ஆழக்கடலே அழகிய கடலே கரைதொடும்
அலைமகளே!
அழகாகத் தோன்றிய ஆழியே
ஆசையாய் உன்னிடம் ஓடி வந்தேன்
உன்னைக் கண்டவுடன் தாவும் மனது
உன்னால் கண்ணீர் வடிக்கிறது
அன்னை தாலாட்டுவது தூக்கம் வர
ஆழியே நீ தாவியது எம்மை அழிக்க
காரணமோ தெரியவில்லை
காத்திருக்கவோ ஜென்மமில்லை
கண்ணாமூச்சு ஆடவே உன்னிடம் வந்தேன்
கண்மூடித் திறக்கும் முன் அழித்தாயே!
சிரிப்போடு அலையில் மிகுந்த எம்மை
சீற்றத்தால் அலையிற் பிணமாக்கினாய்
மறுஜென்மம் ஒன்றிருந்தால்
மறுபடியும் உன்னை நான் சந்திப்பேன்.

# இந்துப் பண்பாடும் பரதநாட்டியமும்

இந்துக்கலையின் சிறப்பினைப் பார்க்கும் போது பண்பாடுபற்றி அறிவது மிக முக்கியமான தாகும். பண்பாடு என்பது மனிதன் தன் தேவையை நிறைவுசெய்வதற்காக உருவாக்கிய தாகும். இவ்வகையில் இப்பண்பாட்டுக்குள் "சமயம், தத்துவம், கலைகள்" என்பனவும் நுண்கலைகளுள் சிறப்பாகக் கட்டிடக்கலை, விக்கிரகக் கலை, அலங்காரம், ஓவியம், சிற்பம் என்பவற்றை உள்ளடக்கலாம். எனவே ஒரு நாட்டு இனத்தின் பண்பாடு, மேற்குறித்த பண்பாட்டு அம்சங்களுடன் குறித்தே விளக்கம் கூறப்பட்டுள்ளது. இந்துக் கலையின் சிறப்புக் களை நோக்கும்போது இந்துக் கலைப்படைப்பை வரைந்தவர் யாரெனக் குறிப்பிட முடியாததைக் குறிக்கும் இந்த அநாமதேயம் இந்துக் கலையின் பாரம் பரியத்தை விளக்குகின்றது.

இந்துக்கலையின் தொன்மையைச் "சிந்துவெளி" கால அகழ்வாராய்ச்சியின்மூலமே முதன்முதல் அறியப்படுகின்றது. இவ்வாறு இந்துக்கலைகள் மிகவும் நுட்பமான "மறை பொருள்" கருத்துக்கொண்ட தன்மையுடையன வாகக் காணப்படுகின்றன. பார்வைக்கு ஓர் அரிய கவலைப் படைப்பாகவும், அதனூடே மிக ஆழமான கருத்தும் காணப்படுகிறது. உதாரண மாக நடராஜரின் ஐந்தொழில்களையும் நிகழ்த் தும். பஞ்ச கிருத்தியங்களை மறைபொருளாக உணர்த்தி நிற்பதைக் காணக்கூடியதாய் உள்ளது. எனவே இந்துக்கலையின் சிறப்பில் "மறைபொருள்" கருத்துக்கூறும் தன்மை பற்றி மிக அழகாக விளக்கக்கூடியதாக உள்ளது.

அடுத்த சிறப்பு அம்சம் "குறியீட்டுத் தன்மை வாய்ந்தது" அதாவது இந்தக் குறியீட்டை நாம் ஆலயங்களில் விக்கிரகங்களிற் காணலாம். உதாரணமாக, தட்சணாமூர்த்தி திருவுருவத் தினை எடுத்து நோக்கும்போது, அவர் பிடித்திருக்கும் "சின்" முத்திரையானது பல கருத்துக்களைக் குறியீட்டின் மூலமாக உணர்த்துகின்றது. அதாவது மும்மலங்களி லிருந்து "பசு"வாகிய ஆன்மாவை விலகிப் "பதி" யாகிய இறைவனுடன் சேர்தல் வேண்டும். எனும் கருத்து உணர்த்துகின்றது. பண்பாட்டு அம்சத்திற் சமயம், கலை இவ்விரண்டும் ஒன்றுடன்ஒன்று பின்னிப் பிணைந்தே காணப்படுகின்றது. எனவே ஆலயங்களி னூடாகவே இந்துக் கலைகள் வளர்ந்தன என்பது திண்ணமாகப் புலப்படுகின்றது.

நடன பாரம்பரியம் சிவனிடமிருந்தே பிறக்கின்றது. சிவம் என்றும் அழியாத நிருத்தியமான உணர்வாகவும், காட்சியாகவும் அமைதல் சிவ நடனத்தினூடாகப் புலப் படுகின்றது. ஆடல் என்ற சொல்லிற்குக் கூத்து நடனஞ் செய்தல் என்ற செயல்களே காணப் பட்டுப் பொருட்களே கொள்ளப்பட்டன. பூர்வீகச் சடங்குகள், விளையாட்டுக்கள், தொழில்கள் காணப்பட்டன. தொழில் திறன்களை வளர்க்கவும், மனவெழுச்சிக்குப் பயிற்சி தரவும், நம்பிக்கை வளர்க்கவும் குழு உணர்ச்சிகளை பங்கீடு செய்யவும் வாழ்க்கையில் முரண் பாடுகளை உணர்த்தவும் தெய்வங்களுக்கு மகிழ்ச்சி ஊட்டவும் நடனங்கள் பயன்பட்டத னூடு சங்க காலத்தில் நானிலங்களுக்கும் நால்வகைக் கூத்துக்கள் இருந்துவந்தன. இக்காலத்தில் "துனங்கை" என்னும் கூத்து நிலவி வந்தது. இக்காலத்தில் விறலியர் பலர் மெய்ப்பாடுகள் தோன்ற நடித்துச் சபையோரை யும், மன்னனையும் மகிழ்ச்சி செய்தனர். மன்னர்கள் இவர்களைப் பாராட்டி, பொன்னி மாலை பரிசாக அளித்தனர்.

கூத்துக் கலையை வளர்த்த கலைவாணர் களை விறலி, கூத்தன், கூத்தி, ஆடுமகன், ஆடுமகள் எனக் கூறப்பட்டனர். நாடக மகளிர் சிறப்புற ஆடுவாராயின் அவர் திறமையைப் பாராட்டிப் பட்டம், அணிகலன்களைப் பரிசாக அளித்தனர். மாதவிக்கு மன்னன் "தலைக் கோலி" எனும் பட்டம் வழங்கினார். இதனை யடுத்து பல்லவர் காலத்திலே நடனம் எவ்வாறு சிறப்புற்று விளங்கியது என்பதை நோக்கு வோமாயின் இக்காலம் பக்திநெறிக் காலம் ஆகும். இக்காலத்தில் 2ஆம் மகேந்திரவர் மனுடைய சித்தன்ன வாசல் ஓவியங்கள்மூலம் இக்கால நடனக்கலை வளர்ச்சியினை அறிய முடிகிறது. ராஜசிங்கன் தான் கட்டிய காஞ்சி கைலாசநாதர் ஆலயத்தில் சிவனார் ஆடிய பதாகை நடனம், ஊர்த்துவ நடனம் மதலிய நடன வகையைச் சிறப்பாக அமைத்து அழியாப் புகழ் ஈட்டினான்.

இதனைத் தொடர்ந்து சோழர் காலத்தில் நடனத்தின் சிறப்பைக் கூறுவோமாயின், இக்காலம் பொற்காலம் எனப் போற்றத்தகுந்த கோலமாகும். நடனமாதர் தனித்து நின்று ஆடும் கூத்து வகைகளில் சிற்ப உருவில் காணப் படுகின்றது. அக்காலச் சோழ மன்னர்கள் ஓவியம், சிற்பம், இசை, நடனம் முதலிய கலைகளை நன்கு வளர்த்தனர் என்பதற்கு இவை சிறந்த சான்றாகும்.

திருவிடை மருதூரைச் சேர்ந்த காமரசவல்லி என்னும் பகுதியிற் சாக்கைக் கூத்தில் வல்லவன் ஒருவன் இருந்தான் என்றும், அவன் சாக்கை மராயணன் என்ற பட்டம் பெற்றான் என்றும் கல்வெட்டுக்கள் கூறுகின்றன. மேலும், பரதர் இறைவன் ஆடிய தாண்டவங்கள் 108 எனக் காரணங்கள்மூலம் விளக்குகின்றார். சிவன் தாமாக ஆடியவை 48, உமையோடு ஆடியவை 36, மாயவனுடன் ஆடியவை 09, முருகனுக்காக ஆடியவை 03, வானவர்களுக் காக ஆடியவை 12 என்றும், 108த் தாண்ட வங்களுக்குகான கணக்கினைக் கூத்துநூல் கூறுகின்றது. சைவ ஆகமங்களும் சிவத்தல ஆன்மிகங்களும் இறைவன் 64 தலங்களில் 64 ஆடல்கள் ஆடியதாகவும் குறிப்பிடுகின்றன. இவற்றில் 09 தாண்டவங்களே முக்கியமானவை என்றும் ஏழு தாண்டவங்களே நிலைத்துள்ளன என்றும் சொல்லப்படுகின்றன.

சிவ தாண்டவமானது, பிரபஞ்சம் பற்றிய தேடலை ஆடலால் விளக்குகின்றது. சிவதாண்டவ வளர்ச்சிக் கரு திராவிடக் கூறுகளிலிருந்து, சிந்துவெளியில் முகிழ்ந்து, வேதநெறியில் தழைத்து, சைவத்தில் மலர்ந்து, தில்லையில் சைவ மலர்ச்சியாகக் கனிந்திருக்க வேண்டும். அவை ஆத்மீகப் பொலிவுகொண்ட அழகிய சிந்தனைகளை உள்ளடக்கிக் கொண்டிருத்தல் தெட்டத் தெளிவாகின்றது. அதுமட்டுமன்றி ஒன்றின் அறிவு மற்றொன் றினை அறிவதற்கு அவசியமாகின்றது. இவற்றையெல்லாம் கொண்டு நோக்கும்போது பரதநாட்டியமும் இந்துப்பண்பாடும் ஒன்றுடன் ஒன்று பிரிக்கமுடியாதவாறு இணைந்து காணப்படுவது வெள்ளிடைமலை கலைஞர்கள் வேறு நாடுகளுக்குச் செல்வதனால் இப்பண் பாடானது மேலை நாடுகளிலும் இன, மத, மொழி பேதமற்ற முறையிற் செல்வாக்குச் செலுத்துகிறது என்பது தெளிவாகிறது.

**உசாத்துணை**

கலைமாமணி எஸ்.என்.ஸ்ரீராமதேசிகன் – பரதக்கலைக் களஞ்சியம்
டாக்டர் பத்மா சுப்பிரமணியம் – பரதக்கலைக் கோட்பாடு
பேராசிரியர் கா.சிவத்தம்பி, சி.மௌனகுரு, திரு.க.திலகநாதன் – அரங்கு ஓர் அறிமுகம்

**செல்வி சுஜிதா சிவதாசன்**
கலைப்பிரிவு A/L 2010

# வளி மாசடைதலும் அதன் விளைவுகளும்

மனித நடவடிக்கைகள், மனிதனுக்கும் ஏனைய உயிரினங்களுக்கும் பாதிப்பை ஏற்படுத்தக்கூடிய அளவு செறிவுகளில் ஏதாவது பொருட்கள் அல்லது வாயுக்கள் வளிமண்டலத்திற் சேருதல் வளி மாசடைதல் எனப்படும்.

வளி மாசடைதலினால் உலகில் வாழும் உயிரினங்கள் வாழமுடியாது பாரிய அச்சுறுத்தலுக்கு உள்ளாகின்றன.

மனிதனுக்கும் ஏனைய அங்கிகளிற்கும் பாதிப்பை ஏற்படுத்தக்கூடிய பதார்த்தங்கள் மாசுக்கள் என அழைக்கப்படும்.

மனிதன் தனது தேவைகளைப் பூர்த்தி செய்யும்பொழுது இம்மாசுக்கள் வளிமண்டலத்தை அடைகின்றன.

இவற்றிற் சில மாசுக்கள் நேரடியாக வளிமண்டலத்தைச் சென்று அடைகின்றன. இவை முதலான மாசுக்கள் என அழைக்கப்படும் சில சேர்வைகள் வளிமண்டலத்தில் விடப்பட்டு, வளிமண்டல வாயுக்களுடன் தாக்கமடைந்து, வேறு சேர்வைகளைத் தோற்றுவிக்கின்றன. இவை துணையான மாசுக்கள் எனப்படும்.

வளிமண்டலத்தைப் பல காரணிகள் மாசுபடுத்துகின்றன. அவையாவன: காபனோரொட்சைட்டு ($CO_2$), காபனீரொட்சைட்டு (CO) நைதரசனீரொட்சைட்டு ($No_2$) நைத்திரிக் ஒட்சைட்டு (No) நைத்திரஸ் ஒட்சைட்டு ($N_2O$) கந்தக வீரொட்சைட்டு $SO_2$ கந்தகமூவொட்சைட்டு ($SO_3$) மெதேன், பியூட்ரேன் பென்சீன் இய ஒட்சைட்டு, ஐதரசன் சல்பைட்டு, கதிர்க்கதிர்த் தொழிற்பாட்டுக் கழிவுகள், குளோரோ புளோரோகாபன் அஸபெஸரஸ தூசிகள், மகரந்த மணிகள், வித்திகள் களைகொல்லி, பூச்சிநாசினி ஒலிகள் என்பனவாகும்.

இவற்றிற் காபனின் ஒட்சைட்டுக்கள் நைதரசனின் ஒட்சைட்டுக்கள், கந்தகத்தின் ஒட்சைட்டுக்கள் என்பன சுவட்டு எரிபொருளான பெற்றோல் மண்ணெய், டீசல், நிலக்கரி என்பவற்றின் தகனத்தின்போது, வளிமண்டலத்தை அடைகின்றன.

ஐதரோக்காபன் சேர்வைகளான மெதேன், பியூட்ரேன், பென்சீன் என்பன சதுப்பு நிலங்கள், விவசாய நிலங்களிற் சேதனக் கழிவுகள் பிரிகையடையும்போதும் வழி மண்டலத்தை அடைகின்றன.

குளிரூட்டிப் பாவனையினாற் குளோரோ புளோரோக் காபனும், அணுக்கருப் பரிசோதனை அணுக்கரு மின்னுற்பத்தி என்பவற்றினூடாகக் கதிர்த்தொழிற்பாட்டுக் கழிவுகளும் வளிமண்டலத்தை அடைகின்றன.

தொழிற்சாலை இயந்திரங்கள் போக்குவரத்துச் சாதனங்கள் பாரிய ஒலியை ஏற்படுத்துகின்றன. இவை சத்தங்கள் எனப்படும். இச்சத்தங்களும் வளிமண்டலத்தை அடைகின்றன.

வளி மாசடைவதனால் முக்கியமாக மூன்று விளைவுகள் எமது சூழலைப் பாதிக்கின்றது.

அவையாவன பூகோள வெப்ப உயர்வு, அமில மழை, ஓசோன் படலத்தேய்வு என்பனவாகும்.

பூமியின் வெப்பநிலை உயர்விற்குப் பச்சை வீட்டு விளைவு முக்கிய காரணமாக அமைகின்றது. பச்சைவீட்டு வினைவில் காபனீரொட்சைட்டு நீராவி, மீதேன், நைத்திரஸ் ஒட்சைட்டு ஓசோன் குளோரோ புளோரோ காபன், என்பன பங்கேற்கின்றன. இவை பூமியின் மேற்பரப்பில் பட்டுத் தெறிப்படைந்து வெளியேறும் செந்நிறக் கீழ்க் கதிர்களை மீண்டும் பூமியின் மேற்பரப்பை நோக்கித் தெறிப்படையச் செய்கின்றன. இதன் விளைவாகப் பூமியின் மேற்பரப்பு வெப்பமடையும்.

வளிமண்டல மாசுக்களான நைதரசன் ஒட்சைட்டுக்கள், கந்தக ஒட்சைட்டுக்கள் வளி மண்டல நீராவியிற் கரைந்து மழைநீர் வழியாக அமிலங்களாகப் பூமியை அடைதல் அமிலமழை எனப்படும். ஓசோன் படலம் வளி மண்டலத்தின் படை மண்டலத்தில் 20km-30km வரையுள்ள உயரத்திற் காணப்படுகின்றது.

ஒட்சிசன் மூலக்கூறு சூரியனிலிருந்துவரும் புற ஊதாக்கதிர்கள் UV கதிர்களினால் அணுநிலை ஒட்சிசனாக மாற்றமடைகின்றது. இவை ஒட்சிசன் மூலக்கூற்றுடன் இணைந்து ஓசோன் வாயுவைத் தோற்றுவிக்கும், துருவப் பகுதியிற் கூடிய தடிப்பிலும் மத்திய பகுதியில் மெல்லியதாகவும் ஓசோன் படை காணப்படும். இது குளோரோ புளோரோக் காபன், நைதரசன் ஒட்சைட்டு போன்ற வாயுக்களினாலும் ஹொலோன்களினாலும் ஓசோன்படை தேய்வடைகின்றது.

இவ் ஆவிப் பிறப்புள்ள வாயுக்கள் வளிமண்டலத்தையடையும்போது அணுநிலைக் குளோரீனைத் தோற்றுவிக்கும்.

$CFCl_3 \rightarrow CFCl_2 + Cl$

அணுநிலைக் குளோரீன் ஓசோன்படையை அழிக்கும்.

$Cl + O_3 \rightarrow O_2 + Clo$

$ClO + O \rightarrow O_2 + Cl$

இது தொடர்ச்சங்கிலியாக நடைபெறுவதனால் பெருமளவு ஓசோன்படை அழிகின்றது.

மீயொலி விமானங்களில் எரிபொருளின் தகனத்தின்போது நைதரசன் ஒட்சைட்டு வாயு வெளி விடப்படுகிறது. இது ஓசோன் படையை அழிக்கின்றது.

$NO + O_3 \rightarrow NO_2 + O_2$

வளிமண்டலத்தில் உருவாகும் அணுநிலை ஒட்சிசனால் நைதரசனீரொட்சைட்டு மீண்டும் நைதரசன் ஓர் ஒட்சைட்டாக மாற்றப்படும். இது தொடர் தாக்கமாக நடைபெறுகிறது. இதனாலும் ஓசோன்படை தோன்றுகிறது.

$BO_2 + O \rightarrow NO + O_2$

வளி மாசடைவதனால் நேரடியாகப் பாதிக்கப்படுவது சுவாசத் தொகுதியாகும். ஓசோன்படை சேதமுறுவதனாற் புற ஊதாக் கதிர்கள் (UV கதிர்கள்) அதிகளவிற் பூமியை வந்தடைகின்றன. இதனால் தோல் புற்றுநோய், மார்புப் புற்றுநோய், பிறப்புரிமையிய லில் மாற்றம், நரம்புத் தொகுதி பாதிக்கப்படுதல் காலநிலை மாற்றங்கள் என்பன ஏற்படுகின்றன.

அமில மழையினால் தாவரங்கள், விலங்குகள் அழிகின்றன. கனிப்பொருட்கள் அரித்துச் செல்லப்படுகின்றன.

இன்று பூகோள வெப்ப உயர்வினால் உள்ள விளைவுகள் எமக்குப் பெரும் அச்சுறுத்தல்களாக உள்ளன. துருவப் பனிக்கட்டி உருகிக்

கடல்மட்டம் உயர்தல் வெள்ளப்பெருக்கு, சூறாவளி, காட்டுத்தீ, பருவகால மாற்றங்கள், எரிமலைகள் தோன்றுதல், மழைவீழ்ச்சி குன்றுதல், பாலைவனமாதல்போன்ற விளைவுகள் ஏற்படுகின்றன.

வளி மாசடைதலைத் தவிர்ப்பதற்குத் தொழிற்சாலைகளிலிருந்து வெளிவேறும் வாயுநிலைக் கழிவுகளைப் பரிகரித்த வளிமண்டலத்தில் விடுதல், எரிபொருளிற்குப் பதிலாக மாற்று சக்திகளைப் பயன்படுத்துதல், காடுகளைப் பாதுகாத்தல், கழிவுப் பொருட்களை எரிக்காது புதைத்தல் போன்ற செயற்பாடுகளில் மனிதன் ஈடுபட வேண்டும்.

ஒவ்வொரு மனிதனும் இது எமது சூழல்: இதனைப் பாதுகாப்பது எமது கடமை எனும் தொனிப் பொருளுடன் செயற்பட்டால் எமது சூழலைத் தூய்மையாக வைத்திருந்து அதன் பாதிப்புகளிலிருந்து, எம்மையும் உயிரினங்களையும் பாதுகாத்துக்கொள்ளலாம்.

**பு. மீரா,** 11 A

## பெண்

கனவிலே உன்னைக் காண
காத்திருந்தது என் விழிகள்
முழுநிலவே தோன்றினாய்
முழுமையாய் உன் முகத்தைக் கண்டேன்
பூத்துக்குலுங்கும் பூக்களின் நடுவே – உன்
புன்னகை கண்டேன் – உன்னை
மணம் முடிக்கவே – நான்
மறுஜென்மம் எடுப்பேனா!
காத்திருப்பாயா பெண்ணே!
காலத்தின் கோலமிது

**ஆர். சோபனா**
தரம் 11 B

## இயற்கை

இயற்கையே!
உன் அழகைக் கொடுத்து
எம்மை மகிழ்விப்பதும்
நீயே!
இயற்கை அழிவைக் கொடுத்து
எம்மை அழிப்பதும்
நீயே!

# நவீன உலகில் மண்ணின்றிய பயிர்ச் செய்கையின் அவசியம்

இன்றைய நவீன உலகில் வேகமாக மாறிவரும் கைத்தொழில், தொழில்நுட்ப மாற்றங்களின் விளைவாக பூமியின் நிலத்தின் பங்கு குறுகிவிட்டது. அதாவது பெருகி வரும் மக்களுடைய தேவைகளை நிறைவு செய்ய பயிர்ச்செய்கை நடவடிக்கைகளை மேற்கொள்ள முடியாத அளவிற்கு பயிர்ச்செய்கைக்கு உட்படுத்தப்பட்ட நிலங்கள் அனைத்தும் மக்களது வாழிடங்களாகவும், பாரிய கைத் தொழிற் சாலைகாளாகவும் மாறி வருகின்றன. இந்நிலையில் மக்களுடைய முதல் தேவையான உணவுத் தேவையை நிறைவு செய்ய வேண்டிய நோக்கத்தில் நவீன தொழில் நுட்ப மாற்றத்தின் பயனான மண்ணிற்குரிய பயிர்ச்செய்கை பற்றி நோக்குவோம்.

மண்ணின்றிய பயிர்ச்செய்கை என்பது மண் தவிர்ந்த அதாவது நிலத்தில் இன்றி செயற்கையாகத் தயார் செய்யப்பட்ட போசணை ஊடகங்களைச் கொண்டு மேற்கொள்ளப்படும் பயிர்ச்செய்கை முறையாகும். இம்முறை கைரோபோனிக் (Hydroponic) என அழைக்கப் படுகின்றது.

இப்பயிர்ச்செய்கை தொடர்பான ஆய்வுகள் சீனா, எகிப்து, இந்தியா போன்ற நாடுகளில் ஆரம்ப காலங்களில் மேற்கொள்ளப் பட்டாலும் 1929 இல் கலிபோர்னியப் பல்கலைக் கழகப் பேராசிரியர் வில்லியம் கிறீக் என்பவரால் நீர்மபவூடக முறையில் முதன் முதலில் 7.5M உயரத்தக்காளிச் செடி வெற்றிகரமாக வளர்க்கப் பட்டு வெற்றி காணப்பட்டது. தொடர்ந்து 1960 – 1970 வரையான காலப்பகுதிகளில் வர்த்தக ரீதியாக விரிவாக்கம் பெற்று 1980 இல் கணினி மூலம் கட்டுப்படுத்தப்படும் தன்னியக்கப் பயிர்ச் செய்கைத் தொகுதியாக வளர்ச்சி கண்டது.

### மண்ணின்றிய பயிர்ச்செய்கைக்கான போசணை ஊடகம்

மண்ணின்றிய பயிர்ச்செய்கையானது போசணை ஊடகத்தில் தாவரம் வளர்க்கப்படும் ஒரு செயல் முறையாகும். அந்த வகையில் போசணை ஊடகக் கலவை பின்வரும் இயல்புகளைக் கொண்டிருக்கும்.

- தாவரங்கட்கான மாமூலகங்களையும் நுண்மூலகங்களையும் கொண்டிருத்தல்.
- பொருத்தமான வீச்சில் PH பெறுமானத் தைக் கொண்டிருத்தல்.
- நீரில் முற்றாகக் கரையக் கூடியதாக இருத்தல்.
- கழிவுப்பொருட்களைக் கொண்டிருக்காத தாக இருத்தல்.

தற்சமயம் பயன்படுத்தப்படும் போசணை ஊடகங்கள்

1. கலாநிதி அலன் கூப்பரின் கலவை
2. அல்பேர்டின் கலவை

மண்ணின்றிய பயிர்ச்செய்கை முறையினைப் பிரதானமாக மூன்று வகைப்படுத்தலாம்.

1. போசணை ஊடக கரைசலினாலான வளர்ப்பு (Liquid Hydroponic)

2. திண்ம ஊடக வளர்ப்பு (Solid Media Culture)
3. காற்றுக்குரிய வளர்ப்பு முறை (Aeroponic Culture)

இவற்றில் போசணை ஊடக வளர்ப்பு முறை பெரிதும் கைக்கொள்ளப்படுகின்றது. வளர்ச்சி அடைந்த நாடுகளான நியூசிலாந்து, அவுஸ்ரேரியா, அமெரிக்கா, நோர்வே, பிரித்தானியா, ஜப்பான் மற்றும் சீனா, இந்தியா போன்ற நாடுகளில் பெருமளவில் இம்முறை கைக்கொள்ளப்படுகின்றது. அதே சமயம் வளர்முக நாடுகளைப் பொறுத்த வரையில் இன்றும் விஞ்ஞான தொழில்நுட்ப வளர்ச்சி அடையாத காரணத்தாலும், பொருளாதாரப் பின்னடைவுகளாலும் இம்முறையைக் கையாள்வதில் பெரும் பின்னடைவை எதிர் நோக்கியுள்ளன. எவ்வாறு எனிலும் கால ஓட்டத்தில் வளர்முக நாடுகளும் இப்பயிர்ச் செய்கையில் தம்மை ஈடுபடுத்த வேண்டியது தவிர்க்க முடியாததாகிவிடும். ஏனெனில் மக்கள் தொகை வேகமாக வளர்ச்சி அடைந்து செல்கின்றபோது அதே வேகத்தில் உற்பத்தித் துறையின் வளர்ச்சி மந்தகதி அடையும் போது தற்போது எல்லோராலும் பரபரப்பாகப் பேசப்படுகின்ற உலகநிதி நெருக்கடி என்ற விடையும் தவிர்க்கப்பட முடியாததாகிவிடும். எனவே உற்பத்திகளை அபரிமிதமாக பெருக்குவதில் மண்ணின்றிய பயிர்ச்செய்கை மூலமாக பயிர்ச்செய்கை எதிர்காலத்தில் முன்னிலைப்படுத்தப்படும்.

**செ. பிரகாஷ்**
தரம் 11 A

# Mahathma Gandiji

Mahathma is a sanskrit word which means `greatsal.' The term was affectionaltely applied to mohandas karamchand Gandiji, who was the most in fluential teader of the movement that won India'sinde pendence from British in 1947. Born in 1869, Gandiji studied law in London and went to south Africa to work. He Preached a policy of non - viotence as held campaigns against raciat discrimination. He returned to India in 1915 and joined the freedom movement. India finally achieved Independence in 1947. Gandiji tried to stop the violence that cropped up between Hindus and Muslims. but was assassinated in 1948.

***L.Pronsika***
*J/Sengunths Hindu College*
*Grade 7A*

# "இன்றைய இளைய சமுதாயம்" ஓர் நோக்கு

"இன்றைய சிறுவர்கள் நாளைய தலைவர்கள்" இன்றைய சிறுவர்கள் முன்னோரிலும் பார்க்க அறிவிலும் ஆற்றலிலும் சிறந்து விளங்குபவர்கள். இவர்கள் நடைமுறை வாழ்க்கையோடு அனுபவங்களையும் பெற்றுக் கொள்ள வேண்டியவர்கள். எத்துறை சார்ந்த கல்வியைக் கற்றாலும் சமய, சமுதாயப் பண்புகளைப் பேணிப் பாதுகாத்து நடக்க வேண்டியவர்கள்.

பாடசாலை செல்வதற்கு முன் பிள்ளைகளுக்கு வழிகாட்டியாக விளங்கு பவர்கள் பெற்றோர்கள் பாடசாலை சென்றதும் பிள்ளைகளுக்கு வழிகாட்டியாக ஆசிரியர்களும் பெற்றோர்களும் விளங்குகிறார்கள். இக்காலப் பகுதியில் பிள்ளைகளின் நடத்தைகள் பெற்றோரையும் ஆசிரியர்களையும் பின்பற்றிய தாகவே அமையும்.

இவர்கள் கட்டிளமைப் பருவத்தை அடையும் போது இவர்களுக்குச் சகபாடிகளின் தொடர்பு அதிகரிக்கின்றது. அத்துடன் தொலைக்காட்சி, சினிமா என்பனவும் இவர் களின் நடத்தைக்கு முன்மாதிரியாக விளங்கு கின்றது. இப்பருவத்தில் உள்ளோரிடம் சரியான நடத்தைக் கோலங்களை இனம் காண்பது கடினம். இவர்களிற்குச் சரியான கண் காணிப்பும் சரியான வழிகாட்டலும் அவசிய மாகின்றது. எமக்கு முன் ஒருவன் நீரில் சென்று வழுக்கி விழுகின்றான். இதை நாம் காண்கின் றோம். இது எமக்கு பார்த்த அனுபவ மாக அமைகின்றது. இதனால் நாம் அவ்விடத் திற்குச் செல்லும் போது அவதானத்துடன் செல்கின் றோம்.

மூத்தோர் பலவகையான அனுபவங் களைப் பெற்றிருப்பார்கள். அனுபவங்கள் அவர்களுக்கு ஒரு பாடமாக அமைந்தி ருக்கும். இந்த அனுபவங்களில் ஏற்பட்ட தவறுகள் இளைய சமுதாயத்தினருக்கு ஏற்படக் கூடாது என எண்ணுவார்கள்.

சமய, சமுதாயப் பண்புகளைச் சிறு வயதிலிருந்தே பேணி நடப்பவர்கள் மூத்தோருக் குக் கீழ்ப்படிவாக நடப்பார்கள். ஆனால் தீயசகபாடிகளின் தொடர்பில் தொடர்பாடற் சாதனங்களின் தீய பழக்கங்களின் ஆதிக்கத்தி லிருப்போர் நெறிபிறழ்வான நடத்தையில் ஈடுபடுவார்கள்.

பொய், களவு, புகைத்தல், மதுபானப் பாவனை, துர்நடத்தை என்பவற்றில் ஈடுபடு பவர்கள் உடல் உளப் பாதிப்பிற்கு உள்ளாகின் றார்கள் இதனால் கொலைகள் கூடச் செய்கின் றார்கள்.

நெறிப்பிறழ்வான நடத்தையில் ஈடுபடுபவர்கள் தாமும் அழிகின்றார்கள்; சமுதாயத்தையும் அழிக்கின்றார்கள்.

மது பாவனை உடையவர்களின் உடலில் அற்ககோலின் அளவு அதிகரிப்பதனால் நரம்புத்தொகுதி, மூளை, சிறுநீரகத்தொகுதி, ஈரல், குடல், இதயம் என்பன பாதிப்பிற்கு உள்ளாகின்றது. நரம்புத்தொகுதி பாதிக்கப் படுவதனால் விபத்துக்கள், கொலைகள் நடைபெறக் கூடிய சந்தர்ப்பங்கள் ஏற்படு கின்றன.

புகைத்தலில் ஈடுபடுபவர்கள் தாமும் துன்புற்று தம்மைச் சுற்றியுள்ளோரையும் துன்புறுத்துகின்றார்கள். புகையில் நிக்கொட்டின் காபனோர் ஒட்சைட்டு, ஐதரசன் சயனைட்டு போன்ற நச்சுப் பதார்த்தங்கள் காணப்படுகின்றன. புகைப்பவர் ஒவ்வொரு தடவையும் புகையை உள்ளிழுக்கும் போது 90% பதார்த்தங்கள் சுவாசப் பைகளில் தேங்குகின்றன. சூழலில் விடப்படும் புகையை அருகிலுள்ளோர் சுவாசிக்கும் போது புகைக்காமலே புகைத்தலுக்கு உள்ளாகின்றனர். இதனால் சுவாசத் தொகுதி நோய்களும், புற்றுநோய்களும் ஏற்படுகின்றன.

இன்று முழு உலகம் அச்சுறுத்தலுக்கு உள்ளாகி இருப்பது ஆட்கொல்லி நோய்களான பாலியல் நோய்களினாலாகும். அவற்றில் எயிட்ஸ் முக்கிய இடம் பெறுகின்றது.

இன்று வளர்ச்சியடைந்த விஞ்ஞானத் தொழில் நுட்பத்தினால் இணையத் தளங்களில் பாலியல் தொடர்பான பல்வேறு தகவல்களில் இளைய சமுதாயத்தினர் நாட்டம் கொள்கின்றார்கள். அதன் காரணமாகப் பல்வேறு துர்நடத்தைகளிலும் ஈடுபடுகிறார்கள். இதனால் தாமும் அழிந்து சமுதாயத்தையும் அழிக்கின்றார்கள்.

இன்று பாடசாலை மாணவிகளும் கருச்சிதைவை மேற்கொள்கின்றார்கள் என்ற தகவல் அறியப்பட்டுள்ளது. எயிட்ஸ் தொடர்பான பரிசோதனையைப் பலர் மேற்கொள்கின்றார்கள்.

பாரம்பரியமாகப் பேணிப் பாதுகாக்கப்பட வேண்டிய எமது கலாசாரம் எங்கே போகின்றது. என்பதை இளைய சமுதாயத்தினர் எண்ணிப் பார்க்கவேண்டும்.

புனிதமாகப் பேணிப் பாதுகாக்கப்பட வேண்டிய சமயத்தலங்களில் கூட கொலை, களவு, துர்நடத்தை போன்றவற்றில் இன்றைய இளைய சமுதாயத்தினர் ஈடுபடுகிறார்கள்.

பெற்றோர்கள் தம் பிள்ளைகளை நல்ல முறையில் வழிகாட்டி சமய சமுதாய விழுமியங்களிலிருந்து தாங்களும் பிறழாது அவர்களிற்கும் எடுத்துரைத்து வளர்க்க கொண்டும். பாராட்ட வேண்டியபோது பாராட்டியும் கண்டிக்க வேண்டிய பொழுது கண்டித்தும் வளர்த்தால் அவர்களும் சமுதாயத்தில் நற்பெயர் பெறுவார்கள்.

"தந்தை மகற்கு ஆற்றும் நன்றி அவையத்து
முந்தியிருப்பச் செயல்"

எனும் திருக்குறளின் மூலம் தந்தையின் கடமையை திருவள்ளுவர் தெளிவாகக் கூறியுள்ளார்.

சமுதாயமும் இளைய சமுதாயத்தினரைக் கண்காணித்து புத்திமதி கூறி அன்பான முறையில் வழிகாட்ட வேண்டும்.

**ர.ரஜினா**
தரம் 11 B

# கல்வியும் சமூக மேம்பாடும்

"குஞ்சியழகும் கொடுந்தானைக் கோட்டழகும், மஞ்சள் அழகும் அழகல்ல
நெஞ்சத்து நல்லம் யாம் என்னும் நடுவு நிலைமையாற் கல்வி அழகே அழகு"
என்கிறது நாலடியார்

இந்தக் கல்வியானது மனிதனின் மேம்பாட்டிற்கு முக்கியத்துவமானதாகக் காணப்படுகின்றது. ஒரு சமூகம் அறிவு, ஒழுக்கம், பண்புபெற்று மிளிர வேண்டுமாயின் அதற்குக் கல்வி அவசியமானதாகக் காணப்படுகின்றது.

கல்லாதவர் ஒன்றும் இல்லாதவர்க்கு ஒப்பானவர் என்கிறார் செந்நாப்புலவர் திருவள்ளுவர். மண்ணுலகில் மாண்புடன் வாழ வகைசெய்வது கல்வி என்கிறார் அவர். ஆகவே, எழுத்தையும் ஏமாப்புடைத்தான கல்வி சமூகத்தை மேம்படுத்தும் தூணாக விளங்குகின்றதென்றால் அது மிகையாகாது.

கல்வியறிவு இல்லாத ஒருவனிடத்து நல்லதையும் அல்லதையும் பகுத்துணரும் வல்லமை இருப்பதில்லை. அன்புள்ளங்கொண்டு அனைவரையும் ஆதரித்துத்தானும் தன் சமூகமும் வாழவேண்டும் என்ற உயரிய நோக்கம் இருப்பதில்லை. கண்டதேகாட்சி, கொண்டதேகோலம் என்ற வாழ்க்கைப் போக்கே காணப்படும். ஆனால், கல்வியைக் கற்ற ஒருவன் தானும் நலமுற வாழ்வதோடு, தான் வாழும் சமூகத்தையும் ஆதரித்து அனுசரித்து தேவையானவற்றைப் பெற்றுக் கொடுத்து வாழ வழிகாட்டுகின்றான். மேம்படுத்துகின்றான் என்பது எப்படி வாழவேண்டும் என்பதை உணர்த்துகின்றது.

"கண்ணுடையோர் என்போர் கற்றோர்
- முகத்திரண்டு
புண்ணுடையோர் கல்லாதவர்"
என்கிறார் திருவள்ளுவர்.

இதிலிருந்து எதை நாம் உணருகின்றோம். கல்வியைக் கற்றிருந்தால் மனிதன் தன் வாழ்க்கையினை நேரிய பாதையில் இட்டுச் செல்வான். இது அவனை மட்டுமன்றி அவனது சமுதாயத்தையும் உயர்த்தும். அவன் மனிதனாக வாழ்வதால் ஏனையவர்களையும் மதிக்கும் பண்பு அவனிடம் வளர்கின்றது. பிறருக்குத் தீங்கின்றி வாழும் தன்மைகளைக் கற்றாங்கு ஒழுகும் பண்பினை அவன் பெற்றுக் கொள்வதால் அவன் தனக்கு மட்டுமன்றிப் பிறருக்கும் உதவும் பெரியோனாகத் திகழ் கின்றான். இதனாற் சமூகம் நேரிய பாதையிற் செல்லும் நிலை உருவாகின்றதல்லவா?

எத்தனை செல்வமுடையவனாக இருந்தாலும் கல்வி இல்லாதவன் ஏழையாகவே எண்ணப்படுகின்றான். கேடில் விழுச்செல்வம் ஆகிய கல்வி இம்மையில் நல்வழி வகுக்கின்றது. தீவினை களைந்து உயர்வினைத் தருகின்றது. தர்மங்களை மேற்கொண்டு தானுயர வழி செய்கின்றது. தன் சுற்றம் யாவும் தரணியிற் பெரும் நிலையடைய உதவுகின்றது. இதன் மூலம் மறுமையிலும் மேனிலையடைய அது உதவுகின்றது.

மேலும் கற்றவர்க்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு என்கிறார் ஒளவையார். அதாவது,

"*மன்னனும் மாசறக் கற்றோனும் சீர்தூக்கின்*
*மன்னனிற் கற்றோன் சிறப்புடையோன்*
*மன்னனுக்குத் தன் தேசமல்லாற் சிறப்பில்லை*
*கற்றவர்க்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு.*"

என்கிறார்.

சென்ற இடமெல்லாம் சிறப்புத்தரும் கல்வியைக் கற்றவனின் ஊரும், நாடும் ஏனைய கற்றறிந்தவர்களாற் பாராட்டப்படுகின்றன. இப்பாராட்டு யாருக்கு? கற்றவனின் சமூகத்திற்கும் நாட்டிற்குமல்லவா? இது சமுதாய மேம்பாட்டிற்குப் பெரிதும் துணை புரிகின்றது.

காட்டிலே தொடங்கிய மனிதனின் நாகரிகம் இன்று ஆழ்கடலிலும் விண்வெளிகளிலும் சாதனைகளைப் படைப்பதற்குக் கல்வியறிவும் அதன்மூலமாக மனிதன் அடைந்த திறனுமே காரணமாகின்றன. தகவல் தொடர்புச் சாதனங்களின் பெருவளர்ச்சி கணினி எனவும், கையடக்கத் தொலைபேசி எனவும் உலகத்தைக் கிராமமாகச் சுருங்கச் செய்துள்ளது. இவ்வளவு தூரம் சமூகம் மாறக் கல்வியே வழிவகுத்திருக்கின்றது என்பது வியப்பினையூட்டுகின்றதல்லவா?

கல்லாதவன் ஒருவன் மானிடன் ஆயினும் அவன் விலங்காகவே கருதப்படுகின்றான். அதாவது "விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல் கல்லாதவர். பெறற்கரிய மானிடப்பிறவியைப் பெற்றவர்கள்கூடக் கல்லாதவிடத்து விலங்கென்ற கணிப்பையே பெறுகின்றார். இதிலிருந்து எதை நாம் உணருகின்றோம்? சமுதாய மேம்பாட்டிற்குக் கல்வி மிகவும் முக்கியம் என்பதை உணர்ந்து கொள்கின்றோம்.

எழுத்தை அறிவித்தவன் இன்னொரு இறைவனாகப் போற்றப்படுகின்றான். இவ்வுலக வாழ்க்கையின் வழிகாட்டியாக வாழ்த்தப் படுகின்றான். கல்வியானது ஆத்மாவிற்கு அமைதியைத் தருகின்றது. ஆனந்தமான வாழ்விற்கு அடிகோலும் அத்திவாரமாகின்றது. நானிலத்தில் நீடுபுகழ் பெற்று நிலைத்திருக்க உதவுகின்றது. அறநெறி நின்று தவநெறியில் ஒழுக உறுதுணையாகின்றது. அழிவற்றதாக உயிரோடு தொடர்ந்து நின்று ஆக்கம் பல விளைவிக்கின்றது.

எனவே, நாள்தோறும் சுற்க வளரும் கல்வியை நாம் தினந்தினம் கற்று, நம்மை உயர்த்திச் சமூக மேம்பாட்டிற்குப் பாடுபடுவோம்.

**அ. லோஜினா.**
க.பொ.த(உ/த)2010

# Importance of English

Competence in English and the use of this language signify a transmutation, an added potential for material, Social gains one sees this attitude in what English represents. It is also considered a symbol of modernization, a key to expanded functioning and an extra arm for success and mobility in culturally and linguistically complex and pluralistic societies. As if all that were not enough, it is also considered that english contributes to yet another type of trans mutation. It internalizes ones out look in comparison with other languages. To know English is like possessing the fabled Aladis lamp which permits one to open as it were, the linguistic gate to international business, technology, science and travel. In short English provides linguistic power.

One might then say, English is like going through the linguistic reincarnation. English iniatcs one to have power and work important, it controls vita knowledge about the miracles of science and Technology.

English represents the impact of western language as a restricted code of communication English growing rapidly becomes the symbol of power, authority and elitism in the west. In such non - native contexs english becomes a vehicle of value and not always in harmony with local traditions and beliefs. English is also a group language uniting elitism, religion and So let us all try hard to acquire this mighty weapon and gain the most in our lives.

***T. Thugiganth***
*2011 A/L Arts*

# My self

- My name is K. Vinujan
- My Father's name is kovintharajah
- My Mother's name is chandradevi
- I'am eleven years old
- I'study in Grande six
- My favourite subject is English
- My School name is J/Senguntha Hindu College.
- I live at Kopay
- My favorite game is cricket
- My hobbies are playing cricket and reading story books.

***L.Pronsika***
*Grade 7^A^*

# World Peace

Nature is God's gift to man. Forests that spread across hundreds of acres of land, natural deserts, towering mountains, lengthy rivers, breathtaking waterfalls. Magnificent beaches, multihued birds, and wild species of domestic animals are all wonderful gifts of Mother Nature. God created man with the intention that he should lead a secure, contented and a peace ful life... but was it to be so?

Man, the "Supreme being" With a "Powerful" brain has now driven peace many light years a way from him.... he is now very far out of its veach. man's envious nature, dissatisfaction. Selfishness, thirst for power, fame and money and his dominating and competitive attitude have left him grappling with peace. He has lost his inner peace completely. There is now no peace within one's family, no peace in the society no peace in the country and ultimately there's no peace in the world peace is in pieces

The concept of a permanent peace has remained an unrealized dream. From time immemorial attempts to maintain peace have proved to be thorough failures. History is full of conquerors and their conguests. Kings who ruled nations invaded neigh bousing countries to prove their supremacy and to assert control in the region. World war I and world war which millions of innocent people were slaughtered are classic examples where man's innate tendency to reign supreme over others resulted in losses to properties and lives. The pages of History including the front cover have blood smeared on them - our present day news papers too are no exception.

There are more than 190 countries in the world with a multiracial, multi - religions and multi - lingual populace. Conflicts between followers of different tradition, adherents of different religions and speakers of different languages are sur facing at an alarming rate. There is tension between Israel and Palestine, America and Irag, Pakistan and India, North Korea and south korea... the list is end less. There is even a lot of political unvest in the Republic of maldives, a small country in Asia with an estimated total of Maldives, Male is only 298 59 km in area. Imagine violence flaring up there:!

In vecent times, a new form of violence has begun to show its ugly head in south Africa violence against expatriales. The immigrants to south Africa suddently faced an angry back lash from the indigenous people. Thousand had to flee and seek refuge in temporary camps.

To solve this problem discrimination on the basis of race, veligion, language and colour should be abolished. Equality should be maintained a mong all the people. All misunderst andings and any ill feelings between the warring parties should be solved by means of discussion and negotiation not - through violence. Nothing but misery, death, resentment and a stronger feeling of revenge and vengeance could be achivied through war.

All religions teach people to live in peace and harmony. jesus christ said to his disciples, "Peace be unto you" Hindu religion says. Love all living beings" Are we Practising what we preach?

War brings disaster, by man to man. It causes mental and physical agony. Bombing, shelling and shooting kill millions of innocent people and leave twice the number handicapped. Mental agony results in losing loved ones, belongings and most importantly in losing one's future. People in war - torn areas live in constant fear.

A majority of people prefer peace, the rarest thing we find in the world. to war peace is the one and the only way of making this world a better place to live in.

Give respect and take respect. Respecting one's needs. wants desires and aims would give rise to mutual understanding, a feeling of satisfaction and a sense of brother hood. This leads to real happiness and everlasting peace.

It is also in the hands of man to break the would into pieces. It is in the hands of man to bring peace to the world.

Let's hope and pray that man chooses to do the latter.

***B.Gananathan,***

*Grade - 13*

# English in Sri Lanka

English language was introduced in Ceylon by the British during the colonial Conquest the British setup missionary schools where knowledge was imparted in English. The rich locals considered it a privilege to send their children to those schools. Thus evolved as English educated and speaking class. This class had many privileges employment wise and other means. But those who studied in schools in rural areas were prived of these opportunities. As result of this there was a Sudden Surge of people who wanted their children to be educated in English Thus English Spread among quite a few people.

When Sri Lanka gained in dependence the used English was wides( ) pread among the so called edite. But after a Certain period the government introduced the Teaching of Subjecting the native language. This enabled the people from the back ward areas to get. better opportunities Due to this the majority of the people started neglecting English.

Secondly English is the only language. Which can linka Communities in Our Country.

Instead of criticizing those who make mistakes in English we must encourage them to learn to read and converse in English. This would be doing a great service to the people of Sri Lanka and the English Language.

***Sooriyakumar Shakana***

*Grade - $8^B$*

# சைவ சமயத் தொண்டும் இன்றைய நிலையும்

மனிதனாகப் பிறந்த நாம் ஒவ்வொரு வரும் செய்யும் செயல்கள் அனைத்தும் உலக தேவை கருதிச் செய்யப்படுவதாகவே அமைகிறது. நாம் இவ்உலகில் இன்பமாக வாழ வேண்டும் என எண்ணி இறைவனுக்குத் தொண்டு செய்கின்றோம். அது உபாய தொண்டு எனவும், நாம் எதுவித பலனையும் எதிர்பாராமற் செய்யப்படும் தொண்டு உண்மை தொண்டாகவும் அமைகிறது. இதுவே சைவ நாற்பாதத்தில் உபாய உண்மை என மொத்தம் முப்பத்திரண்டு வரிகள் பேசப்படுகின்றன.

நாம் எமது தேவைகளை இறைவனிடம் அர்ப்பணித்து இறைவன் திருவடி அடையும் வழிகளாக, சைவ சமயம் குறிப்பிடுவது. சிவனடியார்களுக்குத் தொண்டு செய்தலே சரியை என நாவலர் பெருமான் கூறியுள்ளார். இதற்கு அமைய நாம் புறத்தொழிலாலும் சிறுபான்மையான அகத்தொழிலாலும் கடவுளை வழிபாடு செய்தல், சந்தியா வந்தனஞ் செய்தல், ஆலய வணக்கம், ஆலயத்தைக் கூட்டுதல், மெழுகுதல், தீவர்த்தி பிடித்தல் முதலிய தொண்டுகளும் அவற்றுடன் சிவன் அடியார் களுக்குச் செய்யும் தொண்டுகளும் அடங்கு கின்றன.

"மாலற நேயமும் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரண் எனத் தொழுமே"
(சிவஞானபோதம்)

சிவபெருமானை அடைவதற்குரிய வழிகளில் ஒன்று சிவனடியார்களுக்கு அமுதூட்டி வழிபடுதல். அதுமட்டும் அல்ல; அவர்களுக்குத் தீங்கு செய்தல் பெரும் பாவம் என நம்பினர் முன்னோர்கள். சிவவேடதாரி களை சிவன் எனப் போற்றினர். வேடதாரி களால் இறக்க நேரிடினும் அதனை மனமுவந்து ஏற்றனர். ஏனாதி நாயனார் திருநீறு பூசிய அடியாரை சிவனாக எண்ணினார். நீறு பூசி வந்த ஆதிசூரன் அவன் வேடம் நாயனார் உயிரை எடுத்தது. வேடம் தாங்கிய தீயவனான அவன் வேடத்திற்கு மதிப்பளித்துத் தன் உயிரை நீத்தார். இதுவும் ஒருவகைத் தொண்டு ஆகும்.

அதுமட்டும் அல்ல; எம்மிற் பலர் எவ்வளவு தீங்கு செய்பவராக இருப்பினும் சந்தியாவந்தனம் செய்து கடவுளை வழிபாடு செய்தல், ஆலய விஷேட நாட்களில் வழிபாடு செய்தல் என்பன கிரமமாக ஆற்றுவதை நாம் காணும்தோறும். செய்வதைச் செய்துவிட்டு இவ்வாறு வழிபாடு செய்கின்றாரே என நாம் நினைப்பது உண்டு. சரியை என்பது ஆரம்ப நிலையிற் புறத்தொழில் பெரும்பான்மையும் அகத்தினால் சிறுபான்மையும் அவரை முழுமைக்கு இட்டுச் செல்லும் என்பதை மறந்து எமது பேச்சுக்கு அதனைப் பயன்படுத்தி அவர் பாவத்தினிற் பங்கு கொள்கின்றோம்.

இனி ஆலயத் தொண்டு; இது ஆலயத்தில் கூட்டுதல், கழுவுதல் மட்டும் அல்ல; ஆலயத்தின் சகல தேவைகளுக்கும் உதவுதல் இங்கு ஈடுபடும் காலங்களில் படிப்படியாக அவர் தம்மைத் தூய்மைப்படுத்தும் எதனையும் எதிர்பார்ப்பு இல்லாத இறை அர்ப்பண நிலைக்கு இட்டுச் சென்று, உலகப் பற்றினை நீக்க உதவும் என்பதை நாம் சரியாகச் செய்யின் காலப் போக்கில் உணர்ந்து கொள்ள முடியும்.

இவ்வாறு தன்னை சரியையில் சரியை, சரியையில் கிரியை எனத் தொண்டில் ஈடுபடுத்திய ஒருவர் கடவுளைத் தியானஞ் செய்யும் நிலைக்கு தன்னைத் தயார்ப்படுத்துகின்றார். இது சரியையில் யோகமாகவும் அந்த தியான அனுபவ உணர்வு சரியையில் ஞானம் என திரு.க.சிவபாதசுந்தரம் குறிப்பிடுவார். அதனை சிறிது சிந்தித்தால் சிறுபராயம் உடல் வலிமை என தொண்டுகள் புரிந்த ஒருவன் மனதில் தியான நிலைக்குத் தன்னை உட்படுத்துகிறார். அவன் இவ்வளவு காலமும் புறத்தே பார்த்து உபாயமாக உலகியலாக அனுபவித்த காட்சி தொண்டு அகத்தில் தியானமாகவும், அத்தியான உணர்வு ஞான மகிழ்வையும் தருவதை நாம் அன்றாட வாழ்வில் மகோற்சவ காலங்களில் இறை வழிபாட்டிற்கு நம் போன்றோர் சிலர் நெரிசலுக்கு உட்பட்டாலும் இறைவனைப் பார்த்தால் அந்தக் காட்சியில் திழைத்த அவர் அடுத்து அக்காட்சி வரும் வரை அகக் காட்சி போதும் என எண்ணுவது போன்றதாகும்.

சரியையில் ஞானத்தால் வரும் பக்குவத்தால் நுண்ணுணர்வுடையவராய்ப் புறத்தொழிலாலும் அகத்தொழிலாலும் விதிப்படி பூசிப்பர். இங்கு உபகரணம் கொண்டும் பூதித்தும், விதிப்படி பூசித்தும், மானச பூசையும் அதன் அனுபவ உணர்வும் இங்கு நோக்கின், முப்போதும் திருமேனி தீண்டும் அந்தணர் "இறை அருளில் திளைத்த குருமாரை நாம் காணும் சந்தர்ப்பத்தில் இதனை உணர முடியும்.

யோகம் என்பது உலக விடயங்களில் வழிப்போகாவண்ணம் மனத்தை நிறுத்திச் சிவத்தை தியானித்துப் பின் தியானிப் போமாகில் நாமுந்தியானமும் தோன்றாது. தியானப் பொருளாகிய சிவம் ஒன்றே விளக்கம் பெறுதல் ஆகும். கிரியைகளில் ஞானத்தாலுண்டான பக்குவத்தால் அறிவுடையவராய் அகத்தால் வழிபடும் அட்டாங்க யோகத்தினராய்க் காணலாம்.

இதில் இயமம், நியமம் ஆகிய இரண்டும் வாழும் இளம் பராயத்திலே கடைப்பிடிக்கப்பட வேண்டியது. இது பிரமச்சரியம், அன்பு, வஞ்சகமின்மை, பொறுமை, தைரியம், ஆசாரம், சுத்தி, வாய்மை, இன்னா செய்யாமை, கள்ளாமை எனும் பத்தும் படிப்படியாக ஒருவன் கடைப்பிடித்து வாழ்வில் வரும் போது அவனிடம் தவம், மகிழ்ச்சி, தெய்வச் சிந்தனை கொண்ட சிவபூசை, ஞான நூல்களைக் கேட்டல், பழிக்கு அஞ்சுதல், பக்தி, செபம், விரதம் எனும் பத்தும் அவன் பிரமச்சரிய விலை முடித்து இல்லறத்தில் வரும் போது நிறைவாகக் கிடைக்கிறது. மகிழ்வான மனநிலையை தெய்வ சிந்தனை, கொடை என்பன கொடுக்கின்றன. ஞான நூல்களைக் கேட்கும் பக்குவம் அவன் சிறுபராயம் தொடக்கம் காணப்படும். அது மட்டும் அல்ல பாவம், புண்ணியம் என அறிந்து பாவத்திற்கு அஞ்சிய தீய காரியங்களை அவன் செய்ய மாட்டார். அதனால் அவன் தன் சுவாசமூச்சைக் கூட அடக்க முடியும். அது மட்டும் அன்றி மனதைப் பிற விஷயங்களில் செல்லாமல் தடுத்தல், ஒரு வழிப்படுத்தல் என தன்னைப் பக்குவப்படுத்திக் காணப்படுகிறார்.

இந்நிலையில் அவரால் ஞான அறிவினை தெய்வத்தை மூவகைத் திருமேனிக்கு மேலால் சச்சிதானந்த சொரூபியான இறைஞான சாஸ்திரத்தைக் கேட்டு ஆராய்ந்து சிந்தித்து தெளிவுபடுத்துகின்றார்.

இங்கு ஆரம்பத்திற் சிறு தொண்டுகளாக ஆரம்பித்த மனிதனது மனநிலை ஏதோ ஒரு உலக தேவைக்காக மேற்கொண்ட தொண்டானது, காலப்போக்கில் அது இறை

அர்ப்பணமாக்கப்படுதலைக் காணலாம். தற்காலத்தில் அனேக தொண்டர் நிறுவனங்கள் இவ் உலக வாழ்வில் மக்கள் புறத் தேவைகளை நிறைவு செய்யும் தன்னலம் உள்ளவர்களாகக் காணப்படுகின்றன. சுவாமி விவேகானந்தர், "பசித்து இருக்கம் ஒருவனுக்கு சமயம் போதிக் காதே" எனக்கூறி உள்ளமை உணரலாம்.

இங்கு தொண்டு தன்னலம் கருதாத சேவை. அது மிளிர்வது ஏழையின் தேவையில் தான். அதனை இன்றைய நிறுவனங்கள், மன்றங்கள் மனதில் கொண்டு செயற்படுவதும் குறிப்பிடத்தக்கது. ஆயினும் (சேவை) தொண்டு என செயற்படும் ஒவ்வொருவரும் அதில் இருந்து தமக்கு எதனையும் எதிர் பார்க்கவோ அன்றி விரும்பியவர் விருப்பம் அற்றவர் எனப் பாகுபடுத்துவது என்பது மனதில் எண்ணினா லும் அதன் பயனைப் பெற முடியாது. காணும் சேவையில் திரிகரண சுத்தி பேணப்பட வேண்டியதாகும்.

எமது சைவ சமயம் எமக்குக் காட்டிய வழியும் அதுவே, அதன் வழிநின்று இளம் சமுதாயத்தினராகிய நாம் உழைப்போமாக.

**இ. குகன்ராஜ்**
Grade: 2010

# My School

- My school name is J/Sengutha Hindu College
- It is situated Thirunelvely.
- It is a government School
- Our school Principal is Mr. Balakumar
- He is an Honest and Kind Person
- There are about 31 teachers in my school
- The motto of our school is thought for right and be bright
- We have a good Library, Science Laboratory, Play ground and Computer Unit in our school
- There are four houses. They are sampanthar, Manikkavasakar, Appar and Suntharar in our school
- I Love my school very much

***C. Jeyatharshi***
***Grade 6^B^***

# நீதி நூல்கள்

"அரிது அரிது மானிடராகப் பிறத்தல் அரிது" எனும் ஔவைப்பிராட்டியாரின் கூற்றுக்கிணங்கப் பிறவியிலே அரும்பெரும் பிறவியாகிய மனிதப் பிறவியை எடுத்த நாம் எம் பிறவியின் மகத்துவத்தை உணர்ந்து பாரினிலே எம்மைப் பிறர் சீர்தூக்கிப் பார்க்கும் அளவுக்கு வாழவேண்டியது எம் கடமையாகும். அவ்வாறு நாம் வாழ்வதற்கு எமக்கு வழிகாட்டியாக வாழ்ந்தவர்கள் பலர். அவர்களுட் சிலர், நாம் வையத்தில் வாழ்வாங்கு வாழ்வதற்கு உகந்த அற, ஆசார, ஒழுக்கக் கருத்துக்களை எழுத்துரு வில் எமக்குத் தந்து சென்றுள்ளார்கள், அவ்வாறு எழுத்துருப் பெற்றவையே நீதி நூல்கள் எனப் பலராலும் போற்றப்பட்டுப் பேணப் பட்டு வருகின்றன. அந்தவகையில் அந்நூல் களை எடுத்து நோக்குதல் சாலச் சிறந்த ஒன்றாகும்.

பண்டைப்பழ நெடுங்காலத்திற் காலத்துக்குக் காலம் பல நீதிப்பாடல்கள் தோன்றிவருகின்றன. இவை சமுதாயத்திற் காணப்படும் சீர்கேடுகளை, தவறுகளைச் சுட்டிக்காட்டி உண்மைகளை உணர்த்துவனவா கவும், பொது மக்களிடையே விழிப்புணர்ச்சியை ஏற்படுத்துவதாகவும் காணப்படுகின்றன.

கி.பி. 3–6ஆம் நூற்றாண்டுக்கு இடைப்பட்ட சங்கமருவிய காலப்பகுதியிற் சமுதாயத்தைச் சீர்ப்படுத்தும் வகையில் பல நீதிப்பாடல்கள் ஆக்கப்பட்டன. அதனைத் தொடர்ந்து பல்வேறு தமிழ்ப்புலவர்களும் நீதி இலக்கியங்களைப் படைத்திருக்கின்றார்கள். அத்தகைய நீதி இலக்கியங்களிலிருந்து தெரிந்தெடுக்கப்பட்ட சில நூல்களை இங்கு குறிப்பாக நோக்கலாம்.

இவ்வாறு சிறப்பிடம் பெறும் நூல்களில் திருக்குறள், நாலடியார், பழமொழி நானூறு, நல்வழி, மூதுரை, வாக்குண்டாம், நான்மணிக் கடிகை, பழமொழிப் போதனை, முதுமொழி வெண்பா, போன்றவற்றினைக் குறிப்பிடலாம். இவற்றிற் சிறப்பிடம் பெற்று முன்னணியில் நிற்கும் திருக்குறளைப் பார்ப்போம்.

**திருக்குறள்**

நீதி நூல்களிற் சிறப்பிடம் பெறும் திருக்குறளைத் திருவள்ளுவப் பெருந்தகை இயற்றியுள்ளார். இரண்டு வரிகளினுள் கருத்துச் செறிவு நிறைந்த நீதிகளை எடுத்துக் காட்டியுள்ளார். இந்நூலானது மொழி, மதம், நாடு, இனம் எல்லாவற்றையும் கடந்து அறம், பொருள், இன்பம் எனும் பொருட்களையும் தெளிவுற அழகாக எடுத்துக்காட்டுகின்றது.

இந்நூலில், கடவுள் வாழ்த்து, பணிவுடைமை, ஒழுக்கம், நன்றி மறவாமை, அறம், கல்வி முதலிய பல நல்லொழுக்கங்கள் 133 அதிகாரங்களில் 1330 குறட்பாக்களில் தெள்ளுதமிழிலே எடுத்து விளக்கியுள்ளார். இது எம் வாழ்வின் முதல் அத்தியாயம் தொடக்கம் இறுதி அத்தியாயம் வரை தொடர்ந்து வரும் அறநூலாக விளங்குகின்றது. அந்த வகையில் இது கூறும் கருத்துக்களாக;

"ஒழுக்கம் விழும்பம் தரலாள் ஒழுக்கம்
உயிரிலும் ஓம்பப்படும்"

என்று ஒழுக்கத்தின் சிறப்பினையும்

"நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று"

எனும் நன்றிமறவாத தன்மையையும்

"பணிவுடையன் இன்சொலன் ஆதல்
ஒருவர்க்கு அணியல்ல மற்றும் பிற"

எனப் பணிவைப் பற்றியும் வலியுறுத்து கின்றார். எனவே நாமும் இவருடைய கருத்துக் களைச் செவ்வழி கொண்டு செயற்படுவோம்.

**நாலடியார்**

"ஆலும் வேலும் பல்லுக்குறுதி
நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி"

எனும் முதுமொழிக்கு இணங்க திருக்குறளுக்கு அடுத்தபடியாக சிறப்புப் பெறும் நூல் நாலடியார் ஆகும். இந் நூலானது சங்க மருவிய காலத்திலே தோன்றிய சிறப்புக்குரியது. இதனை நானூறு சமண முனிவர்கள் பாடியதாக அறிய முடிகின்றது. நான்கு அடிகளைக் கொண்டு ஆக்கப்பட்டமையால் இது நாலடியார் எனப்படுகின்றது. நானூறு பாக்களைச் சுமந்து வரும் நீதிசாரம் இதுவாகும். இதில் நிலை யாமைக் கருத்துக்கள் எடுத்துக் காட்டப் பட்டுள்ளது.

"குஞ்சி அழகும் கொடுத்தானைக்
கோட்டழகும்
மஞ்சள் அழகும் அழகல்ல
நெஞ்சத்து நல்லம் யாமென்னும் நடுவு
நிலைமையால்
கல்வி அழகே அழகு"

இவ்வாறாக கல்வியினுடைய மேன்மையினையும் பிறபொருட்களினுடைய நிலைமையினையும் எமக்குத் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றது.

"உறுபுலி ஊனிரை இன்றி ஒருநாள்
சிறுதேரை பற்றியுந் தின்னும்
- அறிவினால்
காற்றொலில் என்று கருதற்க கையினால்
மேற்றொழிலும் ஆங்கே மிகும்."

இப்பாடலின் வாயிலாக செய்யும் தொழிலின் மேன்மையும் சிறப்பாக எடுத்து விளக்கியுள்ளது.

**பழமொழி நானூறு**

சங்க மருவிய காலத்திலே உயிர் பெற்ற இன்னொரு நீதி நூலாக சிறப்பிடம் பெறுவது பழமொழி நானூறாகும். இந்நூல் தோன்று வதற்கு கர்த்தாவாக விளங்கியவர் முன்னுரை அரையனார் ஆவார். நானூறு பாடல்களைக் கொண்டமைந்துள்ளதுடன், நீதியை எழுத்தியம்பும் பழமொழிக் கருத்துக்களையும் தன்னகத்தே கொண்டு விளங்குகின்றது.
இதில் வரும் கருத்துக்களாவன;

நிறைகுடம் தளும்பாது
இளமையில் கல்வி சிலையில் எழுத்து
முயற்சி உடையார் இகழ்ச்சி அடையார்
போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து
போன்றவற்றை எடுத்துக் காட்டலாம்.

**நான்மணிக்கடிகை**

இந்நூலின் ஆசிரியர் விளம்பி நாகனார் ஆவார். இதில் நூற்று ஆறு வெண்பாக்கள் நான்கு முத்தான அறக்கருத்துக்களைச் சுமந்துள்ளன. இதனாலேயே இதுநான் மணிக்கடிகை என அழைக்கப்பட்டது. இதில் வரும் நீதிப்பாடலாக

நகைநலம் நட்டார்கண் நந்துஞ் சிறந்த
அவைநலம் அன்பின்விளங்கும்
விசைமாண்ட
தேர்நலம் பாகனாற் பாடெய்தும் ஊர்நலம்
உள்ளானால் உள்ளப்படும்.
எனும் பாடலைக் கூறலாம்.

**பழமொழிப் போதனை**

பழமொழிப் போதனை எனும் நூலின் ஆசிரியர் யாழ்ப்பாணம் அச்சுவேலியைச் சேர்ந்த

தம்பி முத்துப் புலவராவார். இவர் இந்நூலிலே ஆன்றோர்களின் வாயினிலேயிருந்து வெளிப் பட்ட பொன்மொழிகளை அழகுறப்பாடி போதிக் கும் வகையில் இந்நூல் அமைந்திருக்கின்றது. இதில் உள்ள நீதிக் கருத்தாக

"போற்றிலே மிகுமொருவன் புல்லரிட மகப்பட்டார் பிழைகள் செய்வார்" எனும் பாடல் வரிமூலம் நல்ல தகுதிப்பாடுகளை உடைய ஒருவன் ஒழுக்கமற்றவர்களோடு சேர்ந்ததால் தவறிழைப்பான் எனும் கருத்தை உணர்த்து கின்றது.

**வாக்குண்டாம் நல்வழி**

இந்நூல்களின் ஆசிரியர் ஔவையார் ஆவார். மனித வாழ்க்கைக்கு வேண்டிய வழிகாட்டல்களை பாடியமையால் நல்வழி என அழைக்கப்படுகின்றது. இந் நல்வழி வெண்பா வடிவில் அமைந்துள்ளது. இந்நூலிலே நாற்பது வெண்பாக்கள் உள்ளன.

வாக்குண்டாம் எனும் நூலிலே முப்பது வெண்பாக்கள் உள்ளன. இந்நூலின் முதலாவது செய்யுள் வாக்குண்டாம் எனத் தொடங்குவதால் இந்நூலை அப்பெயராலேயே அழைக்கின்றனர்.

இதில் உள்ள நீதிப்பாடலாக

*அற்ற குளத்தில் அறுநீர்ப்பறவை போல*
*உற்றுழித் தீர்வார் உறவல்லர்*
*- அக்குளத்திற்*
*கொட்டியும் ஆம்பலும் நெய்தலும்*
*போலவே*
*ஒட்டி உறுவன் உறவு"*

எனும் பாடலின் வாயிலாக துன்பம் வரும்போது எம்முடன் இருப்பவர்களே உண்மையான உறவினர் எனக் கூறியுள்ளார்.

இவ்வாறு ஒவ்வொரு நீதிநூல்களும் சமுதாயத்தில் ஒவ்வொருவரும் நற்பிரஜையாக வாழ்வதற்கு வழிவகுக்கின்றது. எனவே நாமும் அந் நீதி நூல்களைக் கற்று நீதி உள்ளவர்களாக சமுதாயத்தில் திகழ்வோமாக.

**இ.தர்சிகா**
Grade: 10B

# குப்தர் காலம்

இந்திய வரலாற்றிலே பொற்காலம் எனக் குப்தர் காலம் வர்ணிக்கப்படுகிறது. வட இந்தியாவில்நிலைபெற்ற பேரரசுகளில் குப்தப் பேரரசுக்குத் தனியான இடம் உண்டு. குப்தப் பேரரசு மௌரியப் பேரரசுக்குப் பின் இந்தியாவின் நிலை பெற்ற பேரரசு எனலாம். குப்தர் கால கலையம்சங்கள் பல இலங்கையிலும் பரவியிருந்தன. உதாரணமாகச் சிகிரியாச் சுவரோவியங்களைக் குறிப்பிடலாம்.

குப்தப் பேரரசின் ஆரம்ப மன்னர்களாக ஸ்ரீகுப்தன், கடோற் கஜன் என்போர் குறிப்பிடப்படுகின்றனர். ஆயின் அவர்களின் ஆட்சி, நிர்வாகம் என்பன பற்றிய தகவல்கள் வரலாற்று ஆதாரங்களால் உறுதிப்படுத்தப்படவில்லை. இவர்களின் பின் அரியணை ஏறிய 1ஆம் சந்திரகுப்தன் குப்தப் பேரரசை விரிவடையச் செய்தான். இவன் மகதம், வங்கம், பீகார், உத்தரப் பிரதேசத்தின் ஒரு பகுதி, வைசாலி பாடலிபுத்திரம் என்பன இவனின் நிர்வாகத்தின் கீழ் இருந்தன. இவனுக்குப் பின் ஆட்சிக்கு வந்த சமுத்திர குப்தன் சிறந்த மன்னன் ஆவான். அவன் இந்தியாவின் நெப்போலியன் என வரலாற்று ஆசிரியர்களால் வர்ணிக்கப்பட்டான். இவனால் கோசலை, மகா காந்தாரம், கேரளம், விஸ்ரபுரி, கோட்டூரம், அவமுக்தம், வேங்கி, பாலக்க போன்ற பிரதேசங்கள் கைப்பற்றப்பட்டன. இவனுக்குப் பின் இவனது மகளான 2ஆம் சந்திரகுப்தன் மேற்கு இந்தியாவரை குப்தப் பேரரசின் எல்லையை விரிவுபடுத்தினான். இவனால் வாசாடநாடு, கத்தியவார் தீபகற்பம் மாளவம், சௌராஸ்ரம், உஜ்ஜயினி, பாடலி புத்திரம், சொர் ஜாரம் என்பன கைப்பற்றப்பட்டிருந்தன. இவனுக்குப் பின்னர் 1ஆம் குமார குப்தன். ஆட்சிப்பீடம் ஏறினான். அவனது காலத்தில் குப்தப் பேரரசின் எல்லை வடக்கே இமயமலையையும், தெற்கில் வித்தியமலை யையும், தெற்கில் விந்திய மலையையும், கிழக்கே வங்கக்கடலையும், மேற்கே அரபிக் கடல் வரை விஸ்தரித்துக் காணப்பட்டது. இவனது காலத்தில் கூனர் எனப்படுவர் படை எடுத்து வந்தனர். அப்படை எடுப்பு பின்னர் முறியடிக்கப் பட்டது. இவனுக்குப் பின் மன்னனாகிய ஸ்கந்த குப்தன் என்பவன் கூரைகளால் கைப்பற்றப்பட்ட பகுதிகளைக் கைப்பற்றி குப்தப் பேரரசை நிலை நிறுத்தினான்.

இவர்களது ஆட்சிமுறை நீதியானதும், அமைதியானதுமாகக் காணப்பட்டது. மன்னர்கள் தங்களை மகாராஜா, ராஜா என்ற பட்டப் பெயர்களைச் சூட்டி மகிழ்ந்தனர். மந்திரிமார் பதவி உய்வானதாகக் காணப்பட்டது. மத்திய பிரதேச நிர்வாகத்திற்குப் பொறுப்பாக அதிகாரிகள் செயற்பட்டனர். நிர்வாக முறையில் நேர்மை காணப்பட்டது.

குப்தர் காலத்தில் பொருளாதாரம் மேலோங்கிக் காணப்பட்டது. விவசாயம் முக்கியம் பெற்றிருந்தது. விவசாயத்தில் நெல், கோதுமை என்பன பிரதான பயிர்களாகப் பயிரிடப்பட்டன. கைவினைஞர்கள் இரும்பு, வெண்கல வேலைகளில் சிறப்பு பெற்றிருந்தனர். குப்தர்கால நாணயங்கள் மிகவும் கலைத் திறனுடையனவாகக் காணப்பட்டன. கால்நடை வளர்ப்பும் முக்கியம் பெற்றது. ஏனைய நட்பு நாடுகளுக்கு வர்த்தகம் மேம்பட்ட நிலையில் காணப்பட்டது. மேற்கு இந்தியாவில் காணப்பட்ட

துறைமுகங்கள் ஊடாக ஐரோப்பிய நாடுகளுடன் வர்த்தகத் தொடர்புகள் மேற்கொள்ளப்பட்டன.

குப்தர் கால சமூக நிலையை எடுத்து நோக்கின் வர்ணப் பாகுபாடு மலிந்து காணப்பட்டது. திருமண உறவு புனிதமாகப் பேணப்பட்டது. அடிமை முறையும் வழக்கில் இருந்துள்ளது. பொழுது போக்கு அம்சங்களாக கோழிச்சண்டை, ஆட்டுச் சண்டை என்பன நடைபெற்றுள்ளன. இளைஞர்கள் வேட்டையாடலை விரும்பி மேற்கொண்டுள்ளனர். ஆண்கள், பெண்கள் இடையே தம்மை அழகுபடுத்தும் ஆர்வம் நிறைந்து காணப்பட்டது. இதனால் இருபாலரும் ஆபரணங்களை அணிந்தனர்.

குப்தர் காலம் பொற்காலம் என்பதற்கு இணங்க கல்விநிலை மேல் நிலையில் காணப்பட்டது. போதனை மொழியாக வடமொழி விளங்கியது. மதச் சார்புடைய கல்வி நிலையங்கள் கூடுதலாகக் காணப்பட்டன. நாலந்தா, தக்சசீலம், காஞ்சி, விக்கிரமசீலா போன்ற பல்கலைக்கழக நிலையில் கல்வியை வழங்கின வெளிநாட்டார் தங்கியிருந்து பௌத்த மதக் கல்வியைப் பெற்றுள்ளனர். இலக்கியங்கள் பெருமளவில் எழுந்துள்ளன. இரகுவம்சம், குமாரவம்சம், சாகுந்தலாம் போன்றவற்றைக் குறிப்பிடலாம். இக்காலத்தில் நவரத்தினங்கள் எனப்படும் புலவர்கள் வாழ்ந்து பல இலக்கியங்களைப் படைத்துள்ளனர். அவர்களில் காளிதாசர் குறிப்பிடத்தக்கராவர்.

குப்தர் காலத்தில் இந்துமதம், வைஷ்ணவ மதம், பௌத்தம் என்பன முக்கியம் பெற்றிருந்தன. நாணயங்களில் இந்துக் கடவுளரின் உருவங்கள் காணப்படுகின்றன. சமணசமயம் முக்கியத்துவம் இன்றிக் காணப்பட்டது. இந்துசமயம், பௌத்தசமயம் என்பன உச்சநிலையில் காணப்பட்டன.

கட்டடக் கலையில் குகைக்கோயில்கள் முக்கியம் பெறுகின்றன. குகைகளைக் குடைந்து கோயில்கள் அமைத்துள்ளனர். அஜந்தா, எல்லோரா, பதல் கோரா, ஔடக பாத் போன்ற இடங்களில் இவற்றைக் காணலாம். நகர முறையில் கட்டடங்கள் அமைக்கப்பட்டுள்ளன. சிற்பத் துறையில் மதுரா சிலை, சாரணாத் புத்தர் சிலை என்பன சிறப்பானவை, நாலந்தாவிலும் சிற்பங்கள் காணப்படுகின்றன. ஓவியத் துறையில் சிறப்பான இடம் குப்தர் காலத்துக்குண்டு. அஜந்தாவில் ஓவியக் கூடம் அமைக்கப்பட்டு ஓவியர்கள் வார்க்கப்பட்டனர். ஓவியத்திலும் கலை நயப்புடையோர் காணப்பட்டனர். ஓவியர்களைப் போற்றும் மரபும் காணப்படுகின்றது. குவாலிய பார்க் ஓவியம் அஜந்தா ஓவியம் போன்று சிறப்புடையது.

இந்திய வரலாற்றில் சிறப்புப் பெற்றிருந்த குப்தர்காலம் அந்நியப்படை எடுப்புக்களால் வீழ்ச்சி கண்டது. கூணர்களின் படைஎடுப்பு குப்தர் பேரரசின் வீழ்ச்சிக்கு முக்கிய காரணம் ஆகும். அதனைவிட குப்தப் பேரரசின் சிறு இராச்சியங்கள் எழுச்சி பெற்றமையும் இன்னொரு காரணமாகியது.

**வி. தட்சாயினி**

Grade: 11

# பனைவளம் பெருக்குவோம்

தமிழ் மொழியும் தமிழர் என்ற இனமும் தோன்றி ஆண்டுகள் பல கழிந்துவிட்டன. அதனால்தான் தமிழ் மொழியானது கல்தோன்றா மண்தோன்றாக் காலத்து முன் தோன்றிய மூத்ததமிழ் என சிறப்பாக போற்றப் படுகிறது. காலம் காலமாக தமிழர்களின் பண்பாடு தலைசிறந்த பண்பாடாக விளங்கு கிறது. இயற்கையோடு ஒன்றி ஆரம்பித்த இவர்கள் வாழ்வு இன்றும் இயற்கையில் ஈடுபாடு கொண்டு தொடர்வது கண்கூடு, இயற்கையில் இறைவனைக் கண்டு, இயற்கையில் வாழ்வ மைத்து, இயற்கையில் இறைவனைக் கண்டு, இயற்கையில் வாழ்வமைத்து, இயற்கையில் பயிரிட்டு இயற்கை உணவுகளை உண்டும், உறங்கியும் நம் முன்னோர்கள் வாழ்வில் நோய் நொடி இல்லாமல் நீண்டகாலம் வாழ்ந்து இயற்கையுமெய்தினர்.

அவ்வாறு அவர்கள் உணவுக்காகவும், தேவைக்களுக்காகவும் பயன்படுத்திய முக்கியமானது பனைமரமாகும். பனைமரமானது யாழ் மண்ணின் கற்பகதருவெனப் போற்றப் பட்டது. ஒரு காலத்தில் பனை வளம் மிகுந்து காணப்பட்டது. ஆனால் அவ்வளம் இன்று இல்லை என நினைக்கும்போது மிகவும் வேதனையாக உள்ளது. பனை பொருளா தாரத்தை வளம்படுத்தக்கூடிய ஒரு மரமாகும். எவ்வாறெனின் உணவுப் பொருட்கள் உற்பத்திப் பொருட்கள், அலங்காரப் பொருட்கள், எரிபொருள் போன்றன இதன்மூலம் பெறத்தக்க வளங்களாகும்.

பனைமரத்தில் செய்யப்படும் அலங் காரப் பொருட்கள் ஏற்றுமதியும் செய்யப்படு கின்றன. பனை மரத்திலிருந்து எமக்குக் கிடைக்கும் நன்மைகளைப் பார்ப்போமாயின் மனிதன் வாழ்நாள் பூராகவும் உணவாக உட்கொள்ளக் கூடியவாறு பல்வேறு வடிவங் களில் சுவைகளில் உண்பண்டங்கள் கிடைக் கின்றன. பனையின் இளங்காய் நுங்கு இதை நாம் அருந்தினால் இதைவிட வேறு சுவையை நாம் உணரமுடியாது. உடலுக்கு ஒரு தீங்கும் விளைவிக்காத அருமையான குளிர்பானம் ஆகும்.

நுங்கினால் உடல் குளிர்ச்சி அடைகின்றது. வெயிலுக்கு தாகம் தீர்க்கும் பானமாக நுங்கு விளங்குகின்றது. அதைவிட்டு நம்மவர் அருந்தும் மதுபானங்களான விஸ்கி பிராண்டி, பியர் போன்ற மதுசாரங்களால் உடலுக்கு தீமையே ஏற்படுகின்றது. இதனால் புற்றுநோய் ஏற்படுகிறது.

இந்த நுங்கானது முற்றிப் பழுக்கும் போது பனம் பழம் கிடைக்கின்றது. பனம் பழத்திலிருந்து நாம் சுவையான பலகாரங்களை செய்ய முடியும். பனங்காய் பணியாரம் என்று நினைத்தாலே வாயூறுகிறது. எமது மூதாதை யர்கள் தமது வீடுகளுக்கு வருகை தரும் விருந்தினர்களுக்கு பலகாரமாக பனங்காய் பணியாரம் கொடுத்தார்கள்.

இன்று நம்மவர்கள் "சோட்டீஸ்ற்" என்ற பெயரில் மிக்சர், சுவிங்கம், பகோடா போன்றவற்றை உண்டு உடலில் பல்வேறு கோளாறுகளையும் ஏற்படுத்துகிறார்கள். அவற்றை விடுத்து எம் நாட்டு கற்பக தருவில் பல பண்டங்கள் செய்து உண்போம் எனின் உடல் நலம் பெறுவோம். பனம் பழத்தின் களியானது அன்று எம் மக்களின் ஒரு நேர உணவாக உட்கொள்ளப்பட்டது. பனங்களியிலிருந்து

பெறப்படும் பனாட்டு வருடம் முழுவதும் பசிபோக்கும் உணவாகும். அன்று பனாட்டுடன் எம்மவர் குடித்த பானம் பழஞ்சோற்று நீர் ஆகும்.

பனம் வித்தை பாத்தி போட்டு வைத்தால் பனங்கிழங்கு உருவாகும். இந்தப் பனங்கிழங்கை அவித்தும் உண்ணலாம். அதே பனங்கிழங்கை காயவைத்தால் புளுக் கொடியல் கிடைக்கும் அதை திரித்தால் மா உருவாகும். இதை அவிக்காது காயவைத்தால் ஒடியல் அதை திரித்தால் ஒடியல்மா இதன்மூலம் கூழ், பிட்டு எனும் பண்டம் செய்ய முடிகிறது. இப்படியாக பனை உணவாக வருடம் முழுவதும் பயன்படும் தன்மையைக் காணலாம்.

பனையிலிருந்து கருப்பநீர், கள்ளு என்பனவும் பெறப்படுகின்றன. பனங்கள்ளை எடுத்து விற்றுப் பிழைப்பவர்களும் உள்ளனர். கள்ளாக இருந்தாலும் இது மருந்தாகவும் பயன்படுகிறது. அத்துடன் பனம் கள் பல பதார்த்தங்களை புளிக்க வைக்கிறது. பதநீரில் இருந்து பெறப்படும் அரிய பொருள் பனங்கட்டி எனப்படும். இது ஒருவகை உணவாகவும், மருந்தாகவும் பயன்படுகிறது. பனை ஓலையிலிருந்து கடகம், பெட்டி, தட்டுப் பெட்டி, பாய், சுளகு, நீத்துப் பெட்டி போன்றன செய்யப்படுகின்றன. இவை உடலை நலமாக்கும் பொருட்கள். சூழலை வளமாக்கும் பொருட்கள் ஆகும்.

இத்தகைய பொருட்களின் பாவனை இன்று அரிதாகி வருகிறது. "அத்தி பூத்தாற் போல" ஓர் சில இடங்களிலேயே காணமுடிகிறது என்ற உண்மையைப் பலர் மறந்து விட்டனர். சிலர் பொய்யாக்க முனைகின்றனர். சிலருக்கு தெரியாத விந்தை இது. பனை மரத்தின் சார்பு ஓலையில் அலங்காரப் பொருட்கள் பல செய்து இருப்பதை நாம் பழமை பேணிகளின் வீடுகளில் காணலாம். இது மட்டுமல்லாது பனைமரத்தின் சார்வு ஓலையில் விசிறி செய்யப்படுவதையும் காணலாம்.

பனை மரத்தின் ஓலையானது வேலிகள் அடைப்பதற்கும், வீட்டுக் கூரைகள் வேய்வதற்கும், மட்டையானது விறகிற்கும் பயன்படுகிறது. ஒரு காலத்தில் சார்பு ஓலைகளை நெருக்கமாக பின்னி நீர் அள்ளும் பாத்திரமாகவும் எம்மவர் பயன்படுத்தினர். "கையிலே வெண்ணேயிருக்க நெய் தேடி அலைவர்" போல் ஆகிவிட்டது எமது சமூகம். இன்று எல்லோர் வீடுகளிலும் தொட்டதற்கும் பிளாஸ்டிக் பொருட்கள்தான் பயன்படுத்துகிறார்கள். இப் பிளாஸ்டிக்கால் பல்வேறு நோய்கள் ஏற்படுகின்றன.

உணவை பொதி செய்யும் பொலித்தீன் தாள் சொப்பின் பை என்பன மண் அடியில் நின்று மண் வளத்தைக் கெடுக்கிறது. அது மட்டுமல்லாமல் அண்மைக் காலத்தில் பல கால்நடைகள் பொலித்தீன் பைகளை உண்டு இறந்த சம்பவங்களும் நடந்துள்ளன. நாகரிகம் எனும் போர்வையிலும் நவீன உபகரணங்களால் ஏற்பட்ட சோம்பேறித்தனத்தாலும் மக்கள் தாமே தம் தலையில் மண்ணை அள்ளிக் கொட்டிக் கொள்கிறார்கள்.

இப்பனையைக் கொண்டே தற்போதும் பல சமூகங்களில் கைத்தொழில்களை மேற்கொள்ளலாம். ஆனால் எம்மவர் தொழில் வாய்ப்புத்தேடி அங்கும் இங்கும் அலைகிறார்கள். இவற்றைப் பயன்படுத்தியே பயன்பெறலாம். எம் முன்னவர்கள் எமக்குச் சரியான பண்பாட்டி

னையும் பழம் பொருளையும் கையளித்திருந்தால் நாம் இவ்வாறான நிலைக்கு தள்ளப்பட்டிருக்க மாட்டோம்.

புதுமை விரும்பிகளாகவும் பழமை பேணிகளாகவும் நாம் இருந்து நாம் இழந்த செல்வங்களையும் பண்பாடுகளையும் தேடி நன்மை பெற்று எதிர்கால சந்ததியினருக்கு நம் பழமைகளை கையளிப்போம். அழிந்தது பனைமட்டுமல்ல தமிழ் இனமும்தான் இனியாவது பகுத்தறிவைப் பயன்படுத்தி வீட்டுக்கு ஒரு பனை நட்டு நம் கற்பகதருவிற்கு புத்துயிர் அளித்து எம் சூழலையும் பாதுகாத்து நாமும் சுகமாக வாழ்வோம்.

**இ.கார்த்திகா**
*A/L (2011) Arts*

# Stars

One day when I looked u
High,
I saw the most wonder ful
night sky,
I saw the moon and some
thing else
Will you tell me, or shall I
guess?

It was sparkling and twin
kling
My, it was bright
Now can you tell?
With all your might,

Yes! It's a star,
Like a brand new shining car,
But why are they going
away,
May be the cloud said it's
almost day.

**Srichanthirika Ravichandran**
*G.C.E O/L 2009*

# அரசு பற்றிய தாராண்மை வாதக் கோட்பாடு

தான்தோன்றித் தனமான அதிகாரத்தை எதிர்ப்பதே தாராண்மைவாத உட்பொருளாகும். அதாவது தனி மனிதன் சுதந்திரமாகவும் சமத்துவமாகவும் வாழ வழி செய்வதே இதன் குறிக்கோள் முறைகளையும், அதற்கு ஆதரவான சட்டங்களையும் எதிர்த்து வந்துள்ளது. இது தனிமனித விடுதலையை குறித்து நிற்கிறது. 15ஆம் நூற்றாண்டு முதல் சிறுகச்சிறுக அபிவிருத்தியடைந்த முதலாளித் துவத்தின் கீழ் தோற்றம் பெற்றதே தாராண்மை வாதம் எனப் பேராசிரியர் "லஷ்கி" குறிப்பிடுகிறார்.

அரசு என்பது பொது நலன் பேணும் ஓர் அமைப்பாகும். இது தனி மனித சுதந்திரத்தை வலியுறுத்தி நிற்கிறது. சிந்தனை மனித சுதந்திரத்தை வலியுறுத்தி நிற்கிறது. சிந்தனை சுதந்திரம் பேச்சுச்சுதந்திரம் வழிபாட்டு சுதந்திரம் இது மற்றவர்களுக்கு இடையூறாக அமையக்கூடாது எனவும் பொதுச் சமாதானத் திற்கு பங்கம் விளைவிக்கக்கூடாது எனவும் கூறுவதோடு கைத்தொழில்துறை சமூக நன்மைக்கு இடையூறாக இருக்கும் பட்சத்தில் அரசாங்கம் தலையிட்டு ஒழுங்கு செய்ய வேண்டும் எனவும் முதலாளிகளிடம் பேரம் பேச தொழிலாளிகளுக்கு உரிமை உண்டு எனவும் கூறுகிறது.

இல்லற சுதந்திரம் பற்றிய தாராண்மை வாதக் கருத்தினை நோக்கினால் விவாகம் ஆகாத பெண்களின் சுதந்திரம் பேணவும் திருமணத்தைப் புனிதமாக்கவும் பிள்ளைகளின் தேக மனநலம் பாதுகாக்கவும் முயல்கிறது. உள்ளூர் சுதந்திரம் தேசிய சுதந்திரம் என்பவற்றுக்காகப் போராடுபவர்களை ஊக்கவித்து சர்வதேச விடயங்களில் இராணுவத்தலையீட்டை எதிர்க்கிறது. இவ்வாறு தனிமனித விடுதலையைக் குறித்து நிற்கிறது.

### தாராண்மைவாத கோட்பாட்டின் அபிவிருத்தி

அரசின் தாராண்மை ஜனநாயக கோட்பாடானது பல நூற்றாண்டுகளாக வளர்ச்சியடைந்தது. இதன் வரலாறு புராதன கிரேக்கம் வரை நீண்டு செல்கிறது. தற்காலத்தில் தாராண்மை வாதம் ஐரோப்பாவில் 18ஆம் நூற்றாண்டிலேயே அறிமுகமாகிறது. ஜோன் லொக், அடம்ஸ்மித், டேவிட் ரிக்காட்டோ போன்றோர் பழம் தாராண்மை வாதிகள், அரசின் தலையிடாக் கொள்கைமூலம் அரசை சமூகத்தில் சட்டத்தையும் ஒழுங்கையும் நிலை நாட்டும் கருமம் மட்டும் கொண்ட ஒரு பொலிஸ் அரசை அறிமுகப் படுத்தினார்.

### தாராண்மை வாதக் கோட்பாட்டின் தோற்றம்

தாராண்மை வாதிகள் அரசின் தோற்றம் பற்றி சமூகபடிமுறை வளர்ச்சிக் கோட்பாட்டையே பெரிதும் விரும்பி பயன்படுத்தினர். அதன்படி அரசு எவராலும் உருவாக்கப்படவில்லை அது படிமுறையாக சமூக வளர்ச்சியின் விளைவினதாகும். முதலாவது நிறுவனமாகிய குடும்பங்கள் பல ஒன்றிணைந்து குலங்களும் குலங்கள் பல சேர்ந்து சமூகமும் தோன்றியது.

குடும்பம் → குலம் → சமூகம் → அரசு

### தாராண்மை வாத அரசின் இயல்பு

- சமூக ஸ்தாபனங்களில் உயர்ஸ்தாபனமாக அரசு இருத்தல்.

- பொதுநன்மையை நிறைவேற்ற மக்களால் உருவாக்கப்பட்டது
- அரசு சகலருக்கும் சமத்துவம்
- சமூகத்தின் பொதுநலனைப் பூர்த்தி செய்தல்
- சட்டத்தையும் ஒழுங்கையும் பாதுகாத்தல்
- பொருளாதார வளர்ச்சியை ஏற்படுத்தல்
- குறைந்த வருமானம் பெறுவோருக்கு மானியம் வழங்கல்

### தலையிடா அரசு (Police State)

நிலமானிய முறையில் இருந்து முதலாளித்துவ முறையாக மாறியதில் இருந்து முதலாளித்துவத்தை வளர்ப்பதற்காக தடையற்ற பொருளாதாரக் கொள்கை உருவாகியது. அரசின் தடையற்ற பொருளாதார கொள்கையில் இருந்து பொருளாதார நடவடிக்கையில் தலையிடா தனியார் துறைகளுக்கு பொருளாதார கொள்கையை மேற்கொள்ளும் நிலை ஏற்படுகிறது. அதாவது உற்பத்தி நடவடிக்கைகளில் தனியார் ஈடுபட்டனர். தனியார் கேள்வி நிரம்பல் அடிப்படையில் பொருளாதார நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டது. அரசு சமாதானத்தை பேணுவது தனது கடமையாக கொண்டிருந்தது. தாராண்மை வாதக் கருத்தால் முதலாளித்துவம் பலம் பெற்றதால் ஒடுக்கப்பட்ட மக்களின் உச்ச உழைப்பை பெற்றுக் கொண்ட சுதந்திரம் முதலாளித்துவத்துக்கு கிடைத்தது.

### நலன்புரி அரசு (Welfare State)

முதலாளித்துவ முறையில் கடுமையான சுரண்டலால் பாதிக்கப்பட்ட மக்களை பாதுகாப்பதற்காக புதிய தாராண்மைவாத கருத்து முன்வைக்கப்பட்டன. எல்.கு.ஹோகவுஸ். ஆ.எச்.கிறீன், மைக்கைவர், தோமஸ் ஜெபஸ்ரன் போன்றோர் குறிப்பிடத்தக்கவர்கள். பிரித்தானியாவைச் சேர்ந்த பவர்ஜீ அறியாமை, வறுமை போன்ற சமூகசீர் கேடுகளுக்கு தலையிடா அரசு தத்துவம் காரணமாகிறது. சமய ரீதியாகவும் தலையிடா அரசுக்கு எதிர்ப்புத் தோன்றின. எனவே அரசு நாட்டின் சகல துறையிலும் தலையிட வேண்டும் எனும் கொள்கை உருவாகியது.

### குறைந்த பட்ச அரசு

நலன்புரி அரசில் தனியார் துறை சுருங்குதலுக்கு உட்பட்டு அரச துறை விரிவடைந்தது, இதனால் தனியார் துறையின் சுதந்திரத்தையும் பொருளாதார துறையையும் வளர்க்க நவீன தாராண்மை வாதம் உருவாகியது. இக்கருத்து வெளியிட்டவர்கள் கொட்றிஹயாக் மில்டர் என்போர் முக்கியமானவர்கள். மனிதன் இயற்கையில் காட்டு மிராண்டியாக வாழ்ந்தான் என்பது அவன் வாழ்ந்த சூழலின் தன்மையைக் காட்ட முற்படுகின்றது. இங்கு அரசும் பொருளாதாரக் காரணிகளில் முழுமையாக செயற்படாவிடினும் ஓரளவு செயற்பட்டு சட்டத்தை நிலை நாட்டும்.

### அரசின் எதிர்காலம்

தாராண்மை வாதக் கோட்பாட்டின்படி அரசு சிற்சில மாற்றங்களுக்கு உட்பட்டாலும் நிரந்தரமாக நிலைத்திருக்கும் ஓர் நிறுவனம் ஆகும். அரசின் பிரதான பணி சமூகமேம்பாட்டை உச்சமான, வகையில் நிறைவேற்றுவதாகும் சமூகம் நிலைத்திருக்கும் வரை இப்பணியை மேற்கொள்வது அவசியம் ஆகையால் அரசின் இருப்பு நிரந்தரமாகும்.

**ப.செயந்தினி**
*A/L (2011) Arts*

# சிந்துவெளி பற்றிய ஒரு ஆய்வு

இந்தியாவின் வடமேற்கு எல்லையிலே சிந்துநதி பாயும் பள்ளத்தாக்கில் நனி சிறந்த நாகரிகம் ஒன்று வரலாற்றிக்கு முற்பட்ட காலத்திலே விளங்கியது என்பது அகழ் வாராய்ச்சியினால் நிறுவப்பட்டுள்ளது. இது சிந்துவெளி நாகரிகம் எனப்பட்டது. இங்கு தென் பஞ்சாப்பில் அரப்பா என்ற இடத்திலும் இந்து மாகாணத்தில் மொகஞ்சதாரோ என்ற இடத்திலும் தொல்பொருளாய்வாளர்கள் நிகழ்த்திய அகழ்வாராய்ச்சிகளினால் கி.மு 3000 ஆண்டளவில் நன்கு திட்டமிட்டமைந்த பெரிய நகரங்கள் சிறந்து விளங்கி இருந்தமை கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. சிந்துவெளி நாகரிகத்தைத் தோற்றுவித்தோர் திராவிட இனத்தவரே என்பதை ஆராய்ச்சியாளர் ஒப்புக்கொள்கின்ற நிலை ஏற்பட்டுள்ளது.

சிந்துவெளி நாகரிகம் முன்தோன்றிய மூத்த நாகரிகங்களின் வரிசையில் வைத்து எண்ணப்படுகிறது. இது இந்தியாவின் வடமேற்கே பரந்து காணப்படும் நதியாகிய இந்து நதிப் பிரதேசத்தில் தோன்றிய நாகரிகமாகும். 1933இல் அகழ்வாராய்ச்சித் திணைக்களத்தைச் சேர்ந்த சோ.றோன்மார்ஷல், வில்லியம் நோன், சேர்மோடிர் உவிலர், அலெக்சாந்தர், கன்னிக் காம் போன்றோர் நடத்திய புதைபொருள் ஆய்வுகளின் பயனாக மொகஞ்சதாரோ ஹரப்பா போன்ற நகரங்கள் கண்டு பிடிக்கப்பட்டன. அங்கு அழிந்த கட்டடங்கள் பாவிக்கப்பட்ட பாவனைப் பொருட்கள், அணிகலன்கள், உருவ அமைப்புக்கள், இலட்சினைகள், எலும்பு எச்சங்கள் போன்ற இடிபாட்டுப் பொருட்களில் இருந்து அங்கு நிலவிய சமயம் பற்றி ஊகிக்க இடமுண்டு.

பெண் தெய்வ உருவங்கள், ஆண் தெய்வங்கள், இலிங்கங்கள், நாகம், மரதேவதை, விலங்கு, பறவை, இயற்கைப் பொருட்கள் பாவனைப் பொருட்கள் என்பன வழிபாட்டுக்கு உரியனவாக இருந்திருக்கலாம் என அறியக் கிடக்கிறது. சமய பழக்கத்துக்குரிய முறைகளுள் பலியிடல், உணவு படைத்தல், தாயத்து பிறபொருட்களை அணிதல், சுவாமியை உலாக்கொண்டு வருதல், சுயதீபமேற்றல், நிவர்த்திக்கடன் அளித்தல் என்பன அன்று நிலவியதை எம்மால் அறிய முடிகிறது. இன்றும் நாம் உணவு படைத்தல், தெய்வத்திற்கும், பிதிர்களுக்குமாக பேணப்பட்டு வருகிறது.

முத்திரை ஒன்றில் யோக நிலையில் அமர்ந்த ஒரு வடிவம் காணப்படுகிறது. இவ்வடிவம் தலைமீது வளைந்த கொம்புகள், இடுப்பில் இரட்டைப்படையாக அரைக்கச்சை என்ற அங்க இலட்சணங்களுடன் காட்சியளிக் கிறது. யோகி வடிவத்தின் கீழ்ப்புறத்தில் யானை, புலி, எருது, காண்டாமிருகம் போன்ற அம்சங்களை இவருடன் காணமுடிகிறது. சிவன் எனும் ஆண் தெய்வத்தைப் போல் சத்தியாகிய பெண் தெய்வமும் சிந்துவெளி மக்களின் சமய வாழ்வில் சிறப்பிடம் பெற்றி ருந்தது. இத்தாய்த் தெய்வமாகவோ, நிலத் தெய்வமாகவோ, சிந்துவெளி மக்களால் வழிபட்டிருக்கலாம் எனக் கருதப்படுகிறது. ஹரப்பாவிலே கண்டெடுக்கப்பட்ட ஓர் இலச்சினையிலே பெண் தெய்வத்தின் கருப்பை யிலிருந்து செடியொன்று வருவதாகப் பொறிக் கப்பட்டுள்ளது. "புவி ஏழையும் பூத்தவள்" என்று பிற்காலத்தே விவரிக்கப்பட்ட சக்தி தத்துவத்தை உட்கொண்டதாய் உள்ளது. இது மெய்யியற் கருத்தையும் விளக்குகின்றது.

மேலும் பிற்காலச் சைவசமயத்திலே காணப்படும் சிறப்பு அம்சங்கள் பல சிந்துவெளி மக்களின் சமய வாழ்க்கையில் இடம் பெற்றுள்ளது. புனித நீராடல் (தீர்த்தம்) அரசு போன்ற மரங்களை வழிபடுதல் (தலவிருட்சம்), பாம்பு வழிபாடு (நாகதம்பிரான்), காளைமாட்டை வழிபடுதல் (நந்தி) என்பவற்றை இவ்வகையில் குறிப்பிடலாம். சிவற்றுள் சிவலிங்க வழிபாட்டைச் சிறப்பாகக் கூறலாம். உருவத்திருமேனியாகக் கருதப்பட்டு வழிபாடு ஆற்றப்படும் சிவலிங்க வழிபாடானது, சிந்துவெளி மக்கள் மத்தியில் செல்வாக்கு பெற்றிருந்தது என்பதை அகழ்வாய்வின்போது பெற்ற ஏராளமான இலிங்க வடிவங்கள் காட்டுகின்றன. இவ்வடிவங்களில் சில துளைகள் இடப்பட்டிருப்பதால் அக்கால மக்கள் கைகள், கழுத்தில் இதை அணிந்திருக்கலாம் என ஊகிக்க இடமுண்டு. சூரிய வழிபாட்டுத் தொடர்புடைய ஆதாரங்களும் சிந்துவெளிப்பகுதியில் காணப்படுகின்றன.

இன்றைய இந்து மதத்தில் காணப்படும் வழிபாடுகளுக்கு ஒப்பான சமயச் சடங்குகள் அக்கால மக்களிடையே நிலவியதை உணரலாம். மேலும் இன்று இந்துக்களின் வணக்கத் தெய்வமான நாகம் சிந்துவெளி மக்களாலும் வணங்கப்பட்டது. முக்காலி ஒன்றிலே வாய் அகன்ற மண்பாத்திரம் ஒன்று வைக்கப்பட்டிருப்பது போலவும், அதனுள் தலையை வைத்த வண்ணம் நாகம் ஒன்று படுத்திருப்பது போலவும் மக்கள் கூட்டம் கைகூப்பி நிற்பது போன்ற படிமம் கண்டெடுக்கப்பட்டுள்ளது. இது அக்காலத்தின் நாக வழிபாட்டை உறுதி செய்வதாக அமைந்தது. இக்காலத்தில் நாகத்துக்குப் பால் வைத்து வணங்கும் வழிபாட்டு முறைக்கு இவை முன்னோடியாக இருந்திருக்கலாம் எனக்கருத இடமுண்டு. சிந்துவெளி நாகரிகமானது உலகில் தோன்றிய உன்னத நாகரிகமாகக் கணிப்பதற்கு மேற்கூறப்பட்ட பல்வேறு தகவல்கள் ஊன்று கோலாக விளங்கி நிற்கிறது எனலாம். நாகதம்பிரான் ஆலயமும் இன்று காணமுடிகிறது. விலங்குகள் நயினை நாகபூஷணி அம்மன் மகிமையும் இன்றுவரை சிந்துவெளிப் பண்பாடு மூலமாக அமைந்தது.

சிந்துவெளி அகழ்வில் ஏராளமான புகைபிடித்த தூபதீபத் தட்டுக்கள் கண்டெடுக்கப்பட்டன. இவை சிந்துவெளி மக்கள் அக்கினிக்குச் சிறப்பு அளித்தமையைக் காணமுடிகிறது. நாம் அக்கினிக்கு இடப்படும் பொருட்களை இறைவனிடம் சேர்ப்பிக்கும் வல்லமையுடைய அக்கினியில் பொருட்களை இடுகின்ற வழமை இருந்துள்ளது. இது பிற்காலத்தில் ஒமகுண்டங்கள் மூலமாக அக்கினிக்குத் தம் பொருட்களைச் சேர்ப்பதையும் ஆலயங்களில் தூபதீப ஆராதனைகள் இடம் பெறவும் மூலாதாரமாக அமைந்தது இன்றும் நடைமுறையில் உள்ளன.

ஒரு இலட்சனையில் அகங்காரம் கொண்ட பருத்த வெள்ளாடு ஒன்றினை ஒருவன் பற்றி நிற்பது போலவும் அவனைவிட இன்னொருவன் கூரிய வாளொன்றை வெட்டுவதற்கு அடையாளமாக ஓங்கி நிற்பது போலவும் காணப்படுகிறது. இது அன்று நம் தேவையை நேர்த்தியை நிறைவேற்றப் பலியிடல் இடம் பெற்றுள்ளது என்பதை எடுத்துக் காட்டுகிறது. இதுவே பிற்காலத்தில் ஐயனார், முனியப்பர், காளி, பிடாரி கோயில்களில் ஆடு, கோழி போன்றவற்றைப் பலியிடும் வழக்கத்துக்கு மூல காரணமாக அமைந்தது எனக் கூறப்படுகிறது என்றும் பிற்காலத்தில் கோயில்

பலியிடல் சட்டரீதியாகத் தடுக்கப்பட்டது. அதுமட்டுமன்றி உலாவரும் நிகழ்வு மகோற்சவ காலத்தில் சிறப்புக்குரியதாக காணமுடிகிறது.

உயரமான கோயில்களை அமைத்த சுமேரியர் மக்களோடு வணிகத் தொடர்புகளைக் கொண்டிருந்த சிந்துவெளி மக்கள் நிலையான கோயில்களை அமைத்திருக்க வேண்டுமெனக் கருத இடமுண்டு. இப்பிரதேசத்தில் கோயில் இருந்திருக்க வேண்டும் என்று கருதப்படும் இடம் இதுவரை அகழ்வாய்வு செய்யப்பட வில்லை. இங்குள்ள செய்குளத்தருகே எட்டு அறைகளைக் கொண்ட கூட்டம் ஒன்று காணப்படுகின்றது. இவ்எட்டு அறைகளும் மேலே ஏறுவதற்கு படிக்கட்டுக்களைக் கொண்டுள்ளன. கட்டடத்தின் அமைப்பை அவதானித்த ஆய்வாளர்கள் அக்கட்டிடங்களின் வடிவமைப்புகள் நாகரீக சிறப்பை அறிய வழிவகுக்கிறது எனக் கூறுகின்றனர்.

எனவே சிந்துவெளி நாகரிகத்தின் அகழ்வின்மூலம் எடுக்கப்பட்ட தொல்பொருட்கள் அக்கால இந்து சமயத்தின் புராதன வணக்கத்தைப் பறைசாற்றி நிற்கின்றன எனக் கூறுவதுடன் மட்டுமன்றி, எமது இக்கால வணக்க வழக்க முறைகளுக்கும் கால்கோளாக அமைந்துள்ளது என நாம் காணமுடிகிறது.

**க.சிந்துஜா**
*A/L (2011) Arts*

# திருநீற்றின் சிறப்பு

இந்துசமய வழிபாட்டு மரபிலே முக்கியம் பெற்றுத் துலங்குவது சிவசின்னங்களிலே முதன்மையான திருநீறே ஆகும். பல்வேறு சமயப் பெரியோர்களும் சைவ நாயன்மார்களும் திருநீற்றின் மகிமைபற்றி பலவாறாகப் போற்றிச் சிறப்பித்துள்ளமையை அவர்கள் அருளிய இலக்கியங்கள் வாயிலாக அறிகிறோம். அந்த வகையிற் சைவசமயத்தின் குறியீடாகத் திருநீறு சிறப்பிடம் பெறுகிறது.

ஈழத்திலே சைவமும் தமிழும் சீர்குலைந்து சென்றபோது நல்லை நகர் வந்துதித்த நாவலர் பெருமானார் சைவத்தையும் தமிழையும் தூக்கி நிறுத்தி அதிலிருந்து காப்பாற்றிய பெருமை அவரையே சாரும். அது தவிரவும் எமது சமயத்தில் படர்ந்திருந்த பல்வேறு குறைபாடு களை நீக்கித் திருத்திய ஒரு சீர்திருத்தவாதி யாகவும் மிளிர்ந்தவர்.

அவர் இயற்றிய நூல்களிலும் சரி, அவர் பேசிய மேடைப் பேச்சுகளிலும்சரி, திருநீற்றுக்கு முக்கிய இடம் வழங்கினார் என்பது குறிப்பிடத்தக்கதொன்றாகும். சைவசமயத்தைச் சேர்ந்தவன் ஒருவன் கட்டாயம் திருநீறு அணிந்திருக்க வேண்டும். இல்லையேல் அவன் சைவ சமயிக்குரிய தகுதி எதனையும் பெற முடியாது எனவும் வலியுறுத்தினார்.

அத்துடன் ஒரு சைவ சமயி விபூதி தரிக்கும் முறையை இருவிதமாக மேற்கொள்ளலாம் எனக் கூறினார். அதாவது திரிபுண்டரம், உத்தூளனம். இங்கு திரிபுண்டரம் என்பது விபூதியை மூன்று குறிகளாக நெற்றியிலே அல்லது உடற் பகுதிகளிலே தரிப்பது. அடுத்து உத்தூளனம் என்பது விபூதியை அப்படியே பரந்துபட அணிவது என்று விபூதி அணியும் முறைபற்றி எடுத்து விளக்கியுள்ளார்.

அது மட்டுமன்றி, சமய தீட்சைகள்பெற்ற ஒவ்வொருவரும் கட்டாயம் திருநீறு தரிக்க வேண்டும். என்றெல்லாம் கூறிய அவர் எப்படி எவ்வாறு, எத்திசையை நோக்கித் தரிக்க வேண்டும் என்று பலவாறு திருநீற்றின் மகிமையைப் பற்றி நாவலர் பெருமான் எடுத்தியம்பியுள்ளார்.

"நீறில்லா நெற்றி பாழ்" என்று ஒளவையார் கூறுகிறார்.

மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தரமாவது நீறு துதிக்கப்படுவது நீறு
தந்திரமாவது நீறு சமயத்திலுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருவாலவாயான்
திருநீறே

என்று சம்பந்தர்பெருமான் தனது 2ஆம் திருமுறையுள் இருக்கும் திருநீற்றுப் பதிகத்தில் பாடி வைத்துள்ளார்.

இப்படிப் பல சைவ நாயன்மார்களும், சமயப் பெரியார்களும் திருநீற்றின் அருமை பெருமை பற்றியெல்லாம் சொல்லி வைத்துச் சென்றுள்ள னர். அது மட்டுமல்லாமல் பண்டைய காலத்திலே கூடப் பலரது நோய்களைக் குணமாக்கக்கூடிய சிரஞ்சீவித் தன்மை பொருந்தியதான வல்லமை விபூதிக்கு உள்ளது.

அதாவது, பாண்டியனுடைய வெப்பு நோயைத் தீர்ப்பதற்கு விபூதி பயன்படுத்தப்பட்ட மையும், சைவ நாயன்மார்கள் பலரது நோய் களைத் தமது பண்சுமந்த பாடல்கள்மூலமும் விபூதியின்மூலமுமே குணப்படுத்தியதாக

அவர்களது திரு முறைப்பாடல்கள்மூலம் அறிகின்றோம்.

வாழ்வாவது மாயம்; நாம் மண்ணாவது திண்ணம். என்ற நிதர்சனமான கருத்தினைப் புலப்படுத்துவதாகத் திருநீறணியும் தத்துவம் விளக்குகின்றது. அதாவது "முடியாளும் மன்னனும் ஒரு நாள் பிடிசாம்பராவான்" என்ற தத்துவத்தை உணர்த்துகின்றது.

நாம் வாழும் இப்பூமி எம்மைப் போற் கோடானு கோடி ஜீவன்களின் வாழ்மனை. பிறப்புண்டேல் இறப்பும் உண்டு. இது எல்லா ஜீவராசிகளுக்கும் பொருந்தும். அதனால்தான் இப்பூமியிலே பிறந்த நாம் எல்லோரும் ஒருநாள் சாம்பராகப் போவோம். என்ற கருத்தை உணர்த் தவே விபூதியை நீறாக அணியவேண்டும் என சில சமயவாதிகளின் கருத்து. இங்கு "நீறு" என்பது சாம்பரைக் குறிக்கும் "திரு" என்ற அடை மொழியுடன் திருநீறு என்று வந்ததாகக் கொள்ளப்படுகின்றது. எனவேதான் ஒவ்வொரு வரும் தான்வாழவேண்டிய தேவையை உணர்ந்து எமது சமயம்கூறும் நல்வழியில் வாழ்ந்து முத்தியின்பம் அடைவோமாக.

C.ஜெலக்சி
Grade: 10B

# ஆட்கொல்லி நோயாகப் பன்றிக் காய்ச்சல்

இன்று உலகம் எதிர்நோக்கும் சவால்களில் ஆட்கொல்லி நோய்களும் ஒன்றாகும்.

காலத்திற்குக் காலம் பல்வேறு ஆட்கொல்லி நோய்கள் மனிதனை அச்சுறுத்தி வந்துள்ளன. இன்று எம்மை அச்சுறுத்திக்கொண்டிருக்கும் ஆட்கொல்லி நோய் பன்றிக் காய்ச்சலாகும்.

இப்பன்றிக் காய்ச்சல் மெக்சிக்கோவின் கிழக்குப் பகுதியான லாகிளோரியா எனும் இடத்தில் கண்டுபிடிக்கப்பட்டது.

இந்நோய்க்குரிய காரணி $H_1$, $N_1$ எனும் வைரசு ஆகும்.

இவ்வைரஸ் பன்றிகளின் சுவாச உறுப்பையும் மனிதர்கள், பறவைகளின் சுவாச உறுப்பையும் பாதிக்கின்றது. மனிதனுக்கு மரணத்தை ஏற்படுத்துவதில் $H_1$, $N_1$ வைரசே முக்கிய பங்கு வகிக்கிறது.

**தொற்றும் முறையானது**

பன்றிகளிடமிருந்து மனிதருக்கும், நோயுள்ள மனிதரிலிருந்து இன்னொருவருக்கும் தொற்றுகிறது.

இவ்வைரஸ் மனித உடலில் உருமாற்றம் அடைந்து ஏனைய மனிதர்களைத் தாக்கும்.

**பன்றிக் காய்ச்சலுக்குரிய அறிகுறிகள்**

1. இருமலுடன் கூடிய தொண்டைவலி
2. தலைவலி
3. வாந்தி
4. இலேசான காய்ச்சல்
5. உடல் பலவீனமடைதல்
6. பசியின்மை
7. தூக்க மயக்கம்
8. மூக்குவடிதல்

இவ்வாறான அறிகுறிகள் காணப்படின் உடனடியாக வைத்தியரை நாடவேண்டும்.

**தடுப்பு முறை**

1. நோய் தாக்கப்பட்டவரிலிருந்து விலகியிருத்தல்.
2. வாழுமிடத்தைத் துப்பரவாக வைத்திருத்தல்
3. வாய், மூக்குப் பகுதியினை மறைத்து வைத்திருத்தல்
4. பன்றிகளின் நடமாட்டத்தைக் கட்டுப்படுத்தல்.
5. நோய்ப் பாதிப்பை உறுதிப்படுத்துதல்

பன்றிக் காய்ச்சல் பரவும் முறையானது ஒருவர் இருமும்போதும் தும்மும்போதும் தெறிக்கும் எச்சில், சளி நோயற்ற மனிதரில் படும்போது இவ்வைரஸ் தொற்றிக் கொள்கிறது.

எனவே நாம் ஒவ்வொருவரும் நோய் பரவுவதைத் தடுக்க விழிப்புடன் செயலாற்றுவோம்.

**பா.ரஞ்சிதா**
Grade: 11^A^

# அமரர் சரவணமுத்து நடராசா

"தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் தோன்றாமை நன்று"

என்னும் பொய்யாமொழிப் புலவரின் வாக்கிற்கு இணங்க, திருநெல்வேலி கிழக்கில் செம்மை நெறியில் வாழ்ந்த சரவணமுத்து தம்பதியினரின் இளைய மகனாகப் பிறந்தார். இளமை தொட்டே சைவசமயப் பாரம்பரியத்துடன் வாழ்ந்தவர். இளமைக் கல்வியை செங்குந்த சங்க மடத்திலும், உயர் கல்வியைக் கோப்பாய் மகா வித்தியாலயத்திலும் கற்றார். தனது ஆசிரியப் பணியைக் கல்வியங்காடு தமிழ்க்கலவன் பாடசாலையில் தொடங்கி செங்குந்த இந்துக்கல்லூரியில் நிறைவு செய்தார்.

ஆசிரியப்பணி இறைபணியை ஒத்தது என்பதை இதயத்தில் இருத்தி வெள்ளை வேட்டி, நஷனல், இடுப்பிற் சால்வை அணிந்து வகுப்பிற்குக் கள்ளமில்லா இதயத்துடன் வரும் தோற்றம் களிப்பினைத்தரும். "ஏழைக்கு எழுத்தறிவித்தல்" தர்மங்களிற் சிறந்தது என எண்ணித் தனது பணத்திற் புத்தகம், கொப்பி என்பனவற்றை வாங்கிக் கொடுத்து ஏழை மாணவரைக் கற்பித்தற் செயற்பாட்டில் ஈடுபடச் செய்தார்.

இவருக்கும் செங்குந்த இந்துக் கல்லூரிக்கும் நீண்ட நெடும் தொடர்பு இருந்ததை அவதானிக்க முடிகிறது. சங்கமடத்தின் மாணவன், செங்குந்த இந்துக்கல்லூரியின் ஆரம்ப விழாவிற்கு ஆசி கூறிய பெருந்தகை, அதுமட்டுமன்றி குறைந்த வேதனத்தில் நிறைந்த சேவையை ஆற்றி ஓய்வு பெற்றவர். பொதுப்பணிகளிலும் தன்னை அர்ப்பணித்துக் கிராமத்தின் வாலையம்மன் சனசமூகநிலையம், சடையம்மா மடம் போன்றன உருவாகுவதற்கு உறுதுணையாக இருந்தவர்.

ஒட்டுமொத்தமாக அவர் பணிகளை நோக்கும்போது மூத்த குடிமகனாகவும், கல்வியியலாளனாகவும் மாணவ பரம்பரையைக் கரையேற்றிய ஏணியாகவும் விளங்கியுள்ளார். ஊர் மக்களால் "அப்பா வாத்தியார்" "சின்னத் தலைமை வாத்தியார்" என அழைக்கப்பட்ட பெருந்தகை. ஆயிரம் பிறை கண்டு ஒருமுழுமை வாழ்வு வாழ்ந்து தனது 96வது வயதில் இறைபதம் அடைந்தவர். அன்னாரின் ஆத்மா வெள்ளைப்பிள்ளையாரின் பாதாரவிந்தத்திற் கலந்து இன்புற இறைஞ்சுகின்றோம்.

*கல்லூரிச்சமூகம்*

# அன்பளிப்பு வழங்கியோர் விபரம்

| | | |
|---|---|---|
| 1) | திரு.பி.எஸ்.பாலமுருகன் (நாதஸ்வர வித்துவான்) | 1000.00 |
| 2) | திரு.ஆர்.பார்த்தீபன் (நாதஸ்வர வித்துவான்) | 1000.00 |
| 3) | திரு.உ.உதயசங்கர் (நாதஸ்வர வித்துவான்) | 1000.00 |
| 4) | திரு.உ.ஜெயசங்கர் (நாதஸ்வர வித்துவான்) | 1000.00 |
| 5) | திரு.பி.ரஜீவன் (நாதஸ்வர வித்துவான்) | 1000.00 |
| 6) | திரு.மு.தயானந்தன் (தவில் வித்துவான்) | 1000.00 |
| 7) | திரு.பா.உருத்திரா | 2000.00 |
| 8) | திரு.செ.இராஜலிங்கம் | 1000.00 |
| 9) | திரு.செ.சிவலோசன் | 2000.00 |
| 10) | ஏகாம்பரம் புடவையகம் | 1000.00 |
| 11) | எம்.கே.சிந்தியா | 1000.00 |
| 12) | கேதீஸ் களஞ்சியம் | 500.00 |
| 13) | விஜய் ரெக்கோடிங்ஸ் | 1500.00 |
| 14) | திருமதி என்.தில்லைநாதன் | 4000.00 |
| 15) | கஜன் விறகுகாலை, திருநெல்வேலி | 1000.00 |



With best compliments from
மெடி எயிட்ஸ் வைத்தியசாலை
689, பருத்தித்துறைச் சாலை,
முத்திரைச்சந்தை,
நல்லூர்.
மெடி எயிட்ஸ் மருந்தகம்
Dealers in
Pharmacutical Veterinary Products
Toiletries, Cosmetics & Fancy Goods
644, Pointpedro Road, Nallur, Jaffna,
Irupalai Junction, Kopay.


With best compliments from
SAI
COMMUNICATION
&
Browsing Centre
Dialog & Mobitel Reload
IDD & Local & Internet Calls &
Video Calls & e-mail & Photo Copy &
Laminating & All Mobile Cards&
All CDMA Cards Available Here
S.Mathy
No.84, Point Pedro Road,
Nallur Market Jaffna.
e-mail: saicom2008@yahoo.com
Tel. No: 021 222 6487
Tel. No : 021 222 6493
Fax: 021 222 2871


With best compliments from
நிரோ
மருந்தகம் அன்
பல்பொருள் வாணிபம்
எங்களிடம் சகலவிதமான ஆங்கில மருந்து வகைகள்,
பால்மா வகைகள், பாடசாலைப் பொருட்கள்
என்பனவற்றைப் பெற்றுக்கொள்ளலாம்.
சட்டநாதர் வீதி,
திருநெல்வேலி கிழக்கு,
யாழ்ப்பாணம்.


With best compliments from
Ranjan Restaurant
Beef Mutton Fowl
Brujani are
available here,
including ordered
items
Ramalingam Road,
Thurunelvel.


With best compliments from
Velan Textiles
முகூர்த்தப் பட்டுப்
புடவைகளுக்கு
மகாராசியான
ஸ்தாபனம்
Point Pedro Road,
Jaffna.


With best compliments from
KUGAN
STUDIO
Black & White
Colour Processing
Point Pedro
021 2263218
0777 283706


With best compliments from
கலா
விற்பனை நிலையம்
General Merchants &
Commission Agents.
Kala Sales Centre
Palaly Road,
Thirunelvely Junction,
Jaffna.
பலாலி வீதி,
திருநெல்வேலிச் சந்தி,
யாழ்ப்பாணம்.


With best compliments from
யசோ
மோட்டோஸ்
TVS
உங்கள் சகல விதமான
யப்பான் மோட்டார் சயிக்கிள் தேவைகளுக்கு
Yaso Motors
Inporters & Dealers In Motor Cycles & Spare Parts
Head Office
No.163, Stanley Road,
Jaffna Sri Lanka.
Tel:021 222 2544
Fax : 021 222 7566
Colombo Office
No.50,K.Cyril C.Perera M.W
Colombo-13, Sri Lanka.
Tel:0112347846
Fax : 0114610488
Vavuniya Office
No.22,First Cross Street,
Vavuniya, Sri Lanka.
Tel:0242222776


With best compliments from
வெல்லா
சலூன்
முற்றிலும் குளிரூட்டப்பட்ட
நவீன முறையில்
சிகை அலங்காரம்
செய்ய நீங்கள்
நாடவேண்டிய இடம்.
கல்வியங்காடு நவீன சந்தை,
கீழ் மாடி,
கல்வியங்காடு.



With best compliments from
ERIC GANESH
OPTICIANS & DENTAL
T.P.No: 021 222 2486
No. 566, Hospital Road, Jaffna.




With best compliments from
THAMBIRAJAH
Lanka Filling Station
Petrol, Diesel,
Grease, Oil &
Kerosine
No.1010, Point pedro Road,
Nallur Market.